# இலக்கணச் சிந்தனை



இலக்கணத்துறை
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

# இலக்கணச் சிந்தனை

தொகுப்பு :

அ. சீநிவாசன்
து. சேதுபாண்டியன்

இலக்கணத்துறை
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை — 625 021

பதிப்பு விவரங்கள்

நூல் தலைப்பு : இலக்கணச் சிந்தனை

முதற்பதிப்பு : ஏப்பிரல் 1998

(C) உரிமை : இலக்கணத்துறை
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை — 625 021

பேப்பர் : சேசாயி

நூல் அளவு : 1/8 டெம்மி

பைண்டிங் : செக்சன்

பக்கம் : 6 + 178

மொத்தபடிகள் : 700

அச்சு : தி முல்லை அச்சகம், வாடிப்பட்டி
போன் : 54333

விலை : ரூ. 55/-

அ. சீநிவாசன்
தலைவர், இலக்கணத்துறை
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை — 625 021

'இலக்கணச்சிந்தனை' இலக்கணத்துறையின் முதல் வெளியீடு. தமிழ்த்துறை 1992 இல் தமிழியற்புலமாக அங்கீகரிக்கப்பட்டது. இத் தமிழியற்புலத்தில் இலக்கணத்துறை, நாட்டுப்புறவியல்துறை, ஒப்பிலக்கியத்துறை, மக்கள் தகவல் தொடர்பியல் துறை, தமிழியல்துறை, இலக்கியத்திறனாய்வுத்துறை, ஓலைச்சுவடியியல் துறை, இக்கால இலக்கியத் துறை என எட்டுத்துறைகள் உருவாக்கப்பட்டன. இலக்கணத்துறையின் முதல் தலைவராகப் பேராசிரியர் தே. ஆண்டியப்பபிள்ளை பொறுப்பேற்றார். அவருடைய சீரிய சிந்தனையும் ஆசிரியரை அரவணைத்துச் செல்லும் பாங்கும் இத்துறை வளர்ச்சிக்கு அடித்தளமாயின. 1995 ஜூலையில் பேராசிரியர் தே. ஆண்டியப்பபிள்ளை அவர்களின் ஓய்வுக்குப்பின் துறையின் தலைமைப் பொறுப்பு எனக்கு வழங்கப்பட்டது. நானும் நண்பர் தூ. சேதுபாண்டியன் அவர்களும் சேர்ந்து சிந்தித்ததன் பயனாக 1-2-1996 இல் 'இலக்கணம் கற்பித்தலில் உள்ள இடர்ப்பாடுகள்' என்ற பொதுத் தலைப்பில் கருத்தரங்கு நடத்தப்பெற்றது. இக்கருத்தரங்கிற்கு நம் பல்கலைக்கழகத் துணைவேந்தர் பேராசிரியர் கு. ஆளுடையபிள்ளை தலைமை தாங்கினார். அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் உயராய்வு மையத்தின் முன்னாள் இயக்குநர் பேராசிரியர் செ.வை.சண்முகம் சிறப்புரையாற்றினார். இக்கருத்தரங்கில் கலந்து கொண்ட பேராசிரியர்களின் கட்டுரைகள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. 1996 ஏப்பிரல் 15,16 தேதிகளில் சமூகரெங்கபுரம் வித்துவான் திரு. வே. வேங்கடராசலு ரெட்டியார் நூற்றாண்டு நினைவுச் சொற்பொழிவினைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணைவேந்தர் பேராசிரியர் ச. அகத்தியலிங்கம் நிகழ்த்தினார். அவருடைய கட்டுரையும் இந்நூலில் இடம்பெற்றுள்ளது. பேராசிரியர் கோ. விசயவேணுகோபால் 18-3-96 இல் இத்துறையில் ஆற்றிய சிறப்புரைதான் ''வரலாற்று நோக்கில் இலக்கணக் கோட்பாடுகள்'' என்ற கட்டுரை. 24,25 பிப்ரவரி 1997இல் கவியோகி சுத்தானந்த பாரதியாரின் நூற்றாண்டு நினைவுச் சொற்பொழிவினை அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் உயராய்வு மையப் பேராசிரியர் க. பாலசுப்பிர-

மணியன் ஆற்றினார். இலக்கணத்துறையின் தொடர் பணியாகக் கடந்த மார்ச் 19, 20 தேதிகளில் ‘விடுதலை இந்தியா’ என்ற பொதுத்தலைப்பில் தேசியக்கருத்தருங்கு நடத்தப்பெற்றது. இக்கருத்தரங்கக் கட்டுரைகள் பல்கலைக்கழக வெளியீடாக வெளிவரும் என்று உறுதியாக நம்புகிறேன், வரும் 24-4-98 இல் 50 ஆண்டுகால இலக்கண ஆராய்ச்சி என்ற தலைப்பில் கருத்தரங்கு நிகழவிருக்கிறது. இக்கருத்தரங்கிற்குப் பல்வேறு பல்கலைக்கழகங்களில் பணியாற்றும் இலக்கணப் பேராசிரியர்கள் கட்டுரை வழங்க இருக்கிறார்கள். இக்கட்டுரைகளும் உரியகாலத்தில் இலக்கணத்துறை வெளியீடாக வெளிவரும். இலக்கணத் துறையின் வளர்ச்சிக்குத் துணை நின்ற பேராசிரியர் தி. முருகரத்தனம் (தமிழியற்புல முன்னாள் ஒருங்கிணைப்பாளர்), பேராசிரியை வி. சரசுவதி (தமிழியற்புல முன்னாள் ஒருங்கிணைப்பாளர்), துணைநிற்கும் பேராசிரியர் தி. நடராசன் (ஒருங்கிணைப்பாளர்) மற்றும் தமிழியற்புல ஆசிரியர்களுக்கும், அலுவலர்களுக்கும் நன்றியை உரித்தாக்குகிறேன்.

மதுரை – 21
14-4-98

அன்புடன்
(அ. சீநிவாசன்)

# உள்ளே

# தொல்காப்பியத் தோற்றமும் ஏற்றமும்

ச. அகத்தியலிங்கம்

## 1

தொல்காப்பியம் மிகச்சிறந்த ஒரு இலக்கணநூல் மட்டுமன்று ; சிறந்தவொரு பாவியல் நூலும் ஆகும். எழுத்தும் சொல்லும் தமிழ் மொழியின் அமைப்புப் பற்றிக் கூறுவது. பொருள் அதிகாரம் அன்றைய தமிழ் இலக்கியத்தின் இலக்கணமாகவும் பாவியல் நூலாகவும் உள்ளது. தொல்காப்பியத்தின் தோற்றம் பற்றி ஆராயின் பேருண்மை ஒன்று விளங்கும். தமிழ் மொழியின், தமிழ் இலக்கியத்தின் தனித்தன்மையை விளக்க வந்த நூல் இது என்பது நன்கு தெரியவரும். சமஸ்கிருத மொழியிலிருந்து முற்றிலும் மாறுபட்ட மொழி தமிழ்மொழி என்பதையும் சமஸ்கிருத இலக்கியங்களிலிருந்து முற்றிலும் மாறுபட்ட இலக்கியம் பண்டைத் தமிழ் இலக்கியம் என்பதையும் விளக்க வந்த நூல் என்பதும் விளங்கும். இதுவே இதன் தோற்றத்திற்குக் காரணம். இதனால்தான் இது தொல்காப்பியம் என அழைக்கப்பட்டது என்பதும் இங்கு உணரற்பாலது (அகத்தியலிங்கம். 1997, 6). இந்த எண்ணத்தை உள்ளத்தின் அடித்தளத்தில் கொண்டுதான் தொல்காப்பியர் தன்னுடைய

கூலை ஆக்கியுள்ளார் என்பது தொல்காப்பிய அதிகாரங்கள், அதிகாரங்களில் காணப்படும் இயல்கள், அவற்றில் காணப்படும் நூற்பாக்கள் வைப்புமுறை ஆகியவற்றை நுணுகி ஆராய்ந்தால் தெரியவரும்.

## எழுத்ததிகாரம்

தொல்காப்பியத்தில் காணப்படும் ஒவ்வொரு அதிகாரங்களும் இப்பண்பினைக்காட்டி நிற்கும். மூன்று அதிகாரங்களிலும் காணப்படும் முதல் மூன்று நூற்பாக்களே தமிழ்மொழி சமஸ்கிருதமொழி மாறுபாட்டினை உள்ளத்தில் கொண்டு முதல் நூற்பாக்களாக வைக்கப்பட்டவையே. (தொல்காப்பிய அதிகாரங்களின் முதல் நூற்பா வைப்பு முறையின் முக்கியத்துவம் என்ற தலைப்பில் ஆசிரியர் தமிழ்ப்பல்கலைக்கழகத்தில் 19-11-1996 அன்று பேசியபேச்சு) எனினும் இக்கட்டுரையில் எழுத்ததிகாரத்தில் காணப்படும் ஒரு சில நூற்பாக்களின் வைப்பு முறையையும் வேறுசில பண்புகளையும் அடிப்படையாகக் கொண்டே ஆராயப்படுகின்றது.

## சார்பெழுத்து - உயிரளபெடை, சாரியை

எழுத்ததிகாரத்தில் காணப்படும் சார்பெழுத்து, உயிரளபெடை, சாரியை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டே தொல்காப்பியரின் நோக்கம் ஆராயப்படுகின்றது. எனினும் குற்றியலுகரம், குற்றியலிகரம், அளபெடை, சாரியை ஆகியவற்றின் இலக்கணப் பண்புகளையோ அல்லது அவற்றின் வன்மை மென்மைகளைப் பற்றியோ அல்லது தொல்காப்பியத்துக்கும் பிற இலக்கண ஆசிரியர்களுக்குமிடையே உள்ள கொள்கைகள், கோட்பாடுகள், வேறுபாடுகள் பற்றியோ இங்கு விளக்கமாகக் குறிப்பிடப்படவில்லை. இங்குக் கூறப்படுவதெல்லாம் இந்த இலக்கண ஒலிகள், கூறுகள் பற்றிக் கூறும் நூற்பாக்களின் வைப்புமுறை, அவை தொல்காப்பியத்தில் கூறப்படும் இடங்கள் அவற்றின் எண்ணிக்கைகள், ஒவ்வொரு இயலிலும் அவைபெறும் முக்கியத்துவம் போன்றவை பற்றியே ஆராயப்படுகின்றன. இவற்றின் கொள்கைகள் கோட்பாடுகள் அவற்றில் காணப்படும் மொழியியல் தத்துவங்கள் போன்றவை என் உள்ளத்தில் முட்டி மோதி நிற்பினும் அவை பற்றி இங்குக் கூறப்படவில்லை. வேறுகட்டங்களில் இவை ஆராயப்படும்,

## சார்பெழுத்துக்கள்

சார்பெழுத்துக்களாக உள்ள குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் பற்றிய நூற்பாக்கள் தொல்காப்பியத்தில் ஏராளமாக உள்ளன. பிற இலக்கண நூல்களான வீரசோழியம், நேமிநாதம். நன்னூல், இலக்கண விளக்கம், தொன்னூல், முத்து வீரியம், சுவாமிநாதம் ஆகிய நூல்களில் இவை பற்றிக்காணப்படுவதை விடவும் அதிகமான நூற்பாக்கள் தொல்காப்பியத்தில் உள்ளன. அவைகள் எல்லாம் சிறிய நூல்கள் என்பதால் மட்டுமன்று இந்தநிலை. கொள்கை அடிப்படையில், நூற்களின் நோக்கங்கள் அடிப்படையில் தொல்காப்பியம் வேறுபட்டிருக்கின்ற நிலைதான் முக்கியக் காரணம்.

நன்நூலில் குற்றியலுகரம் குற்றியலிகரம் ஆய்தம் பற்றிய நூற்பாக்கள் 25க்கும் குறைவாகவே இருக்கத் தொல்காப்பியத்தில் நூற்றுக்கும் அதிகமான நூற்பாக்கள் உள்ளன. குற்றியலுகரப் புணரியல் என்ற ஒரு தனி இயலே (77 நூற்பாக்கள்)உள்ளமை கண்கூடு. இது போன்றே உயிரளபெடை பற்றிய நூற்பாக்களும் சாரியை பற்றிய நூற்பாக்களும் ஏராளமாகத் தொல்காப்பியத்தில் உள்ளன. நன்னூலில் இவைபற்றிய நூற்பாக்கள் குறைவே. இத்தகைய நிலைக்குக் காரணம் என்ன? நன்னூல் சுருக்கமான நூல். மேற்கூறிய வேறுபாடு இதனால் மட்டுமன்று. இதே நிலைதான் வேறு பல தமிழ் மரபு இலக்கணங்களிலும். இக்கோணத்தில் காரணம் பற்றி ஆராயின் தொல்காப்பியம் சார்பெழுத்துக்கள், உயிரளபடை, சாரியை ஆகியவற்றிற்கு மிகுந்தவொரு முக்கியத்துவம் கொடுத்துள்ளமை விளங்கும்.

சார்பெழுத்து குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் என்ற மூன்று எழுத்துக்கள் கொண்டது. குற்றியலிகரம் மிகமிகக் குறைந்த இடங்களில் வருவதே. குற்றியலுகரம் வரும் இடங்களில் யாது போன்ற சொற்கள் வந்து புணரும்போது வரும் இகரம் குற்றியலிகரம் என்ற நிலையில் புணர்மொழியில் வருவது (நூற். 35). அதுபோல் கேண்மியா என்ற தனிச்சொல்லில் வருவது (நூற். 34). இந்நிலையில் தமிழ் மொழியமைப்பில் மிகமிகக் குறைந்த இடங்களில்தான் வருகின்றது இது.

குற்றியலுகரம் மொழிக்கு இறுதியில் அதிகமாக வருவது. அதுவும் ஒரு சில குறிப்பிட்ட இடங்களிலேயே வருவது. (நுந்தை தவிர), மொழிக்கு முதலில் வருவதில்லை. இந் நிலையில் குறைந்த பகிர்வைக் கொண்டே வருவது. இதே நிலைதான் ஆய்தத்திற்கும். சங்க இலக்கியங்களில் ஆய்தம் வரும் சொற்களை எண்ணி இத்தனை தான் என எளிதில் கூறிவிடலாம். அதன் பகிர்வும் மிகக்குறைவே.

எனினும் தொல்காப்பியர் இவற்றிற்கு மிகுந்தவொரு முக்கியத்துவம் கொடுத்து ஏராளமான நூற்பாக்களில் இவை பற்றிக் கூறியிருக்கக் காணலாம். இதற்குக் காரணம் என்ன?

தொல்காப்பியர் இவை பற்றி ஏராளமான நூற்பாக்களில் கூறியிருப்பது மட்டுமன்று. இவற்றிற்கு மிக முக்கியமான இடங்களையும் தன்னுடைய இலக்கண நூலில் அளித்துள்ளார். முதல் எழுத்து என்று கருதப்படும் உயிர், மெய் ஆகியவற்றிற்கு அளித்திருக்கும் இடங்களைப்போல், ஏன் சில நேரங்களில் அவற்றை விடவும் முக்கியமான இடங்களையும் தன்னுடைய இலக்கண நூலில் அளித்துள்ளமை உண்டு. இவை பற்றிக் கூறுவதினும் விளக்குவதினும் ஒரு முன்னுரிமை ஒரு வேகம், ஒரு விறு விறுப்பு, கூட இவரிடம் காணமுடிகின்றது.

சார்பெழுத்து - வைப்பு முறை

நூன்மரபு

தொல்காப்பியத்தின் முதல் இயலில் முதல் நூற்பாவே தொல்காப்பியரின் நோக்கத்தைக்காட்டுவதாக அமைந்துள்ளது.

''எழுத்தெனப் படுப
அகர முத னகர விறுவாய்
முப்பஃ தென்ப
சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே''

என்பது முதல் நூற்பா. இந்நூற்பாவின்கண் தமிழ் மொழியில் காணப்படும் எழுத்துக்கள் பற்றிக் குறிப்பிடுகிறார் ஆசிரியர். இங்கு இரண்டு வகை எழுத்துக்கள் பற்றிப் பேசப்படு-

கின்றன (1) தனித்து இயங்கும் எழுத்துக்கள் (இவற்றை நன்னூலார் முதல் எழுத்துக்கள் என்பார்) (2) சார்ந்து வரும் தனித்து இயங்க முடியாமல் இன்னொரு எழுத்தின் மேல் சார்ந்து வருகின்ற) எழுத்துக்கள். (இவற்றைச் சார்பு எழுத்துக்கள் என்பார் நன்னூலார்). (சார்ந்து வரும் மரபு என்பது தனித்து நிற்கும் ஆற்றல் இல்லாத இலக்கணம் உடைய எனக் கூறுவதற்குப் பதில் (இளம் பூரணர் இவ்வாறு கூறுவார்) இன்னொரு எழுத்தின் காரணமாகத் ''தோன்றும்'' எழுத்துக்கள் எனப் பொருள் கூறுவது பொருந்தும். எனினும் இது பற்றி இங்கே பேசப்பட (வில்லை) எழுத்துக்கள் இரண்டு வகைப்படும் என்பதையே தொல்காப்பியர் இந்நூற்பாவில் கூறுகிறார்.

இந்நூற்பாவுக்கு விளக்கம் கூறும் நச்சினார்க்கினியர் பலபடக்கூறிவிட்டு ''அகரம் முதலாதல் ஆரியத்திற்கும் ஒக்குமனும் ஈண்டுத்தமிழ் எழுத்தேகூறுகின்றாரென்பது உணர்தற்குல் னகர விறுவாய் என்றார்'' எனக்கூறுவது காணத்தக்கது. இதே நிலையினை மாதவ யோகி சிவஞான முனிவரிடமும் காணலாம். இனி எழுத்தெனப்படுப அகர முதனகரவிறு வாயென் றொழியாது முப்பஃ தென்னுந் தொகை கூறிய தெற்றுக்கெனின்'' என்று கூறி இறுதியில் ''இம்முப்பதுமேயன்றி வடமொழியிற் கூறுமேனையெழுத்துக்கள் ஈண்டுக் கொள்ளற் படாவென்றற்கு மென்க'' எனக் கூறுவார் (1952 முதற் சூத்திர விருத்தி ப. 29).

சுப்பிரமணிய சாஸ்திரியாரும் தன்னுடைய நூலொன்றில் (சொல்லதிகாரக் குறிப்பு, 1930 முகவுரை) தமிழ் மொழிக்கும் வடமொழிக்கும் உள்ள வேற்றுமையை விளக்கும்போது மெய்களுள் வடமொழியிலுள்ள 19 மெய்கள் தமிழில் இல்லையென்று கூறி ''இவை பண்டைத் தமிழில் இல்லை என்பது தொல் காப்பிய எழுத்ததிகார முதற் சூத்திரத்தால் அறியப்படுகின் றது'' என்பார் (மு. xvii).

இவ்வாறு தொல்காப்பியர் கூறியதற்குக் காரணம் தமிழ் மொழியமைப்பு வேறு சமஸ்கிருத மொழியமைப்பு வேறு அல்லது அம்மொழியில் உள்ள இவை தமிழ் மொழியில் இல்லை எனக் காட்டுவதற்காகவே என நச்சினார்க்கினியரும் சிவஞான முனிவரும் கருதுகின்றனர். எனினும் இதற்ககாவே இந்நூற்

பாவில் தொல்காப்பியர் இவ்வாறு கூறினார் என நிச்சயமாகக் கூறமுடியாது. ஒலியன்கள் அல்லது எழுத்துக்கள் எண்ணிக்கை பற்றி கூறும் எந்தவொரு ஆசிரியனும் இவ்வாறு கூறுதல் வழக்கமே. நன்னூலாரும் ''உயிரும் உடம்புமாம் முப்பது முதலே'' எனக் கூறுவது காண்க. இந்த நிலையில் இது தொல்காப்பியரின் இந்த எண்ணத்தைத் தெளிவாகக் காட்டுவதற்குரிய சான்றாகக் கருத முடியாததெனினும் அவர் வேறு பல இடங்களில் இவ்விரு மொழிகளின் அமைப்புகள் வேறு வேறு என்பதை உள்ளத்திலே கொண்டுதான் இந்நூல் ஆக்கியுள்ளார் என்பது தெரியவரும். எனினும் இந்நூற்பாவில் முதல் எழுத் துக்களையும் சார்பெழுத்துக்களையும் ஒரே நூற்பாவில் இணைத்துக் கூறியிருப்பதும் முதலெழுத்தோடு ஒப்ப வைத்துக் கூறுவதையும் சார்பெழுத்தின் முக்கியத்துவத்தையும் காட்டும் வேற்றுமையியலில்

''வேற்றுமை தானே எழென மொழிப'' (43)

என்று முதலில் ஏழு வேற்றுமை என்று கூறிப் பின்னர் தான்

''விளிகொள் வதன்கண் விளியொடு எட்டே'' (44)

எனக் கூறுவது காண்க.

சார்பெழுத்துக்களையும் முதல் நூற்பாவிலேயே கூறிவிட வேண்டும் என்ற எண்ணம் தொல்காப்பியரிடம் இருந்தது எனக் கருதலாம். இந்நிலையில் தொல்காப்பியரின் முதல் நூற்பாவே சமஸ்கிருதமொழி தமிழ்மொழி அமைப்பு வேறுபாட்டைக் கூறி இவ்விரண்டு மொழிகளும் தம்முள் அமைப்பினால் வேறுபட்டன என்பதைக் காட்டும் விழைவு, வேகம் அவருக்கிருந்தது என்பதைக் காட்டி நிற்கிறது எனக் கருதலாம்.

இத்தகைய நம்முடைய எண்ணம் தொல்காப்பியரின் இரண்டாவது நூற்பாவின் வைப்பு முறையினால் உறுதியாகக் காண்கிறோம்.

முதல் சார்பு என்ற இருவகை எழுத்துக்களில் எவை முக்கியமானவை, எவை முக்கியமாகக் குறிப்பிடப்படவேண்டும் என்பதையும் எண்ணிப்பார்த்தல் வேண்டும். முதல் வகை எழுத்துக்-

கள்தான் மிக முக்கியமானவை என்பது தேற்றம். இவற்றில்-தான் தமிழ் மொழியின் எழுத்தியல் (Phonology) உருக்கொண்-டிருக்கிறது என்பது வெள்ளிடைமலை. இதனால்தான் தொல்காப்பியரும் இரண்டாவது வகை எழுத்துக்களைச் ''சார்ந்து வரன் மரபு'' எழுத்துக்கள் என்றார். நன்னூலாரும் 'முதல்' என்றும் 'சார்பு' என்றும் பெயரிட்டு நின்றார் இந்நிலையில் இந்நூற்-பாவையடுத்து முதல் எழுத்துக்கள் பற்றியே குறிப்பிடப்பட-வேண்டும்.

ஆனால் இந் நூற்பாவிற்குப் பின்னர் வரும் இரண்-டாவது நூற்பா.

''அவைதாம்
குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன''

என்பதாகும். இந்நூற்பா சார்ந்து வரும் எழுத்துக்கள் பற்றிக் கூறுவதாகும். முதல் நூற்பாவையடுத்து முக்கிய எழுத்துக்-களாகிய உயிர்மெய் பற்றிக் குறிப்பிட்டிருக்க வேண்டும். பொதுவாக இத்தகைய இலக்கணங்களை எழுதுவோர் அகர முதல் னகர விறுவாயாக உள்ள எழுத்துக்களைப் பற்றியே அடுத்துக் கூறுவர்.

**பிற மரபு இலக்கணங்கள்**

நன்னூல் போன்ற இலக்கணங்கள் இத்தகைய நிலை-யையே கொண்டிருக்கின்றன.

''மொழி முதற் காரணமாம் அணுத் திரளொலி
எழுத்தது முதல்சார் பெனயிரு வகைத்தே''

என (நூற். 58) எழுத்தை முதல் சார்பு என்று இரு வகையாய்ப் பிரித்துக் கூறும் நன்னூல் அடுத்த நூற்பாவில் (59)

'உயிரும் உடம்புமாம் முப்பது முதலே'

என முதல் எழுத்தையே உயிர் என்றும் மெய் என்றும் பிரித்துக் கூறிநிற்பது காணத்தக்கது. இதற்குப் பின்னரே சார்பெழுத்துக்-களைப்பற்றிக் கூறுகிறது.

''உயிர் மெய் ஆய்தம் உயிரள பொற்றள்
பஃகிய இ உ ஐ ஒள மஃ கான்
தனிநிலை பத்தும் சார்பெழுத் தாகும்'' (நன். 60)

என்பது தான் நன்னூல் நூற்பா. முதல் எழுத்தின் வகையும் எண்ணிக்கையும் முன்னரே கூறப்பட்டுவிட்ட நிலையில்தான் இந்நூற்பாவின் பின்னர் சார்பெழுத்துக்களின் எண்ணிக்கை 61ஆவது நூற்பாவில் கூறப்படுகின்றது.

இதே நிலையைத்தான் வீரசோழியம் போன்ற நூல்களிலும் காண்கிறோம். எழுத்ததிகாரத்தில் காணப்படும் முதல் நூற்பா அகரம் முதல் உயிர் எழுத்துக்கள் பன்னிரெண்டு என்றும் 'க' முன் பிறந்த பதினெட்டும் மெய் என்றும் நடுவிலே உள்ளது ஆய்தம் என்றும் கூறிப் பின்னர்ப் பல வேறு மெய்களை-யும் பிரித்து நிற்கும். இதன் பின்னர் இரண்டாவது நூற்பாவில் குறில், நெடில் எனப் பிரித்து அதனையடுத்து ''நெடு நீர்மை யளபு'' என அளபெடை கூறி மெய்களை வல்லொற்று, மெல்லொற்று உறவும் கூறி அதன் பின்னரே (நூற். 2) ''வன்மை மேலுகரம் - உறுவது நையுந் தொடர்மொழிப் பின்னு நெடிற்-பின்னுமே'' என இறுதியில் குற்றியலுகரத்தைக் கூறி நிற்கும். இங்குக் குற்றியலிகரம் பற்றி எதுவும் குறிப்பிடப்படவில்லை என்பது கவனிக்கத் தக்கது. குற்றியலிகரத்தின் முக்கியத்து-வம் இல்லாத நிலையை இது குறிக்குமோ என ஐயுறலாம்.

இங்கு வீர சோழியம் உயிர் எழுத்திற்குப் பின்னர் உடனடியாக ஆய்தத்தைக் கூறியிருப்பது கவனிக்கத்தக்கது. இது தமிழ் நெடுங்கணக்கையொட்டி அமைந்ததாகும். இதை வைத்துக் கொண்டு தமிழ் நெடுங்கணக்கு வீரசோழிய காலத்திற்குச் சிறிது முன்னால் தோன்றியிருக்க வேண்டும் என சுப்பிரமணிய சாஸ்திரி கூறியுள்ளது (1937 : 5) நினைவு கூரத்தக்கது. இங்குக் குற்றியலுகரம் இறுதியில்தான் கூறப்பட்டுள்ளது.

நேமிநாதம் முதல் எழுத்துக்களுடன் ஆய்தத்தையும் இணைத்து (நூற். 1) அவ்வெழுத்துக்களைக் கூறி நிற்கும். ''ஆவி அகர முதல் ஆறிரண்டாம் ஆய்தமிடை மேவும்'' எனக் கூறு

வதும் ''முறைமையாற் காட்டிய முப்பத்தொன்று'' என முதல் வைப்பாக முப்பத்தொன்று எழுத்து எனக் கூறுவதும் காணத்-தக்கது. இதற்கு ஆதாரமாக,

'அகர முதலாக ஆய்தம் இடையா
னகரமீ றாகுமுதல் வைப்பு'

என்ற நூற்பாவை உரையில் காணலாம். எனினும் பின்னர் வந்தஇலக்கணங்கள் எதுவும் இதனை முதல் எழுத்தாகக்கொள்ள வில்லை. இளம்பூரணர் போன்றோர், (இளம். 38) ஆய்தத்தை மெய்யெழுத்து எனக் கொண்ட நிலையில் இதனையும் முதலெ ழுத்தாகக் கொண்டார் எனவும் ஏனைய சார்பெழுத்துக்களைப் போன்று இதற்குப் பற்றுக் கோடு இல்லாத நிலையிலும்இதனைத் தனி எழுத்தாகக் கொண்டார் எனவும் அதனால் முதல் எழுத் தாகக் கருதினார் எனவும் கூறலாம் (தொல். உரைவளம், ச.வே. சுப்பிரமணியன் விளக்கம், மொழி மரபு, ப. 25). ஆய்-தத்தை முதல் எழுத்துடன் சேர்த்த நிலையில் முதலில் கூறினா-லும் பிற சார்பெழுத்துக்களை இவர் பின்னரே கூறி நிற்பார். உயிர்மெய், அளபெடை போன்றவற்றை மூன்றாவது நூற்பாவில் (உரையாசிரியர் கருத்துப்படி இரண்டாம் வைப்பாக) கூறிப் பின்னர் நான்காவது நூற்பாவிலேயே குற்றியலுகரத்தையும் குற்றியலிகரத்தையும் கூறி நிற்கும் நேமிநாதம்.

முத்து வீரியம் முதல் எழுத்துக்களின் வகைகளையும் பிற பண்புகளையும் பல வேறு நூற்பாக்களில் (5 - 21) கூறிய பின்-னரே சார்பெழுத்துக்களின் வகைகளை

''சார்புயிர் மெய் தனி நிலையிரு பாலன''(22)

எனக்கூறி நிற்கும். இது உயிர் மெய்யையும் ஆய்தத்தையும் மட்டுமே சார்பு எழுத்து எனக் கூறுவதும் ஆய்தத்தைத் தனி நிலை என்று கூறுவதும் கவனிக்கத்தக்கது. குற்றியலுகரம், குற்றியலிகரம் ஆகியவற்றை இது சார்பெழுத்தாகக் கருதா-விடினும் முதல் எழுத்துக்களைப் பல வேறு நூற்பாக்களில் கூறிய பின்னரே இவை பற்றிப் (34, 35, 36) பேசுகின்றது.

சுவாமி நாதமும் (நூற். 14) முதல் எழுத்துக்களைப் பற்-றிக் கூறிய பின்னரே அதே நூற்பாவில் குற்றியலிகரம், (7 ஆவது) குற்றியலுகரம் (8ஆவது) ஆய்தம் (17ஆவது) பற்றிக்

கூறுவதும் 15ஆவது நூற்பாவில் ''அகராதியீராறும் உயிர் ககராதிகண் மூவாறும் உடல்'' என முதல் எழுத்துக்களாகக் கருதப்படும் உயிர், மெய் ஆகியவற்றின் எண்ணிக்கையைக் கூறிய பின்னரே ஆய்தம் குற்றியலிகரம், குற்றியலுகரம் எண்ணிக்கை பற்றிக் கூறுவதும் இது போன்று பிறப்பு கூறும் போதும் இவ்வாறே இவ்வரிசையில் கூறுவதும் காணத்தக்கது.

### இன்றைய இலக்கணங்கள்

இதே நிலையைத்தான் இன்று எழுதப்படும் இலக்கணங் களிலும் காண்கிறோம். எழுத்தியலும் சொல்லியலும் என்ற இலக் கண நூலில் (திலகவதி, 1995, 10 - 12) முதலெழுத்து பற்றி முழுமையாகக் கூறிவிட்டே சார்பெழுத்து பற்றிக் கூறப்படு-கின்றது.

### வைப்பு முறை பற்றிய வினா

ஆனால் தொல்காப்பியமோ முதல் நூற்பாவில் அகர முதல் னகர விறுவாய் என்று கூறி அவற்றின் வகை (உயிர், மெய்) பற்றி எதுவும் கூறாது சார்ந்து வரும் எழுத்துக்கள் பற்றி உடனே அவற்றிற்கு முக்கியத்துவம் கொடுத்துக் கூறுவதைக் காணலாம். இவ்வாறு தனி எழுத்துக்கள் பற்றிப் பேசாமல் சார்ந்துவரும் எழுத்துக்கள் பற்றி அவற்றின் வகை பற்றிப் பேசுவானேன்? என்ற வினா நம் உள்ளத்தில் எழுந்து நிற்கின் றது. இந்த வினாவை உரையாசிரியர்களோ அல்லது பின் வந்த ஆசிரியர்களோ, பிறரோ எழுப்பினதாகத் தெரியவில்லை. எனினும் இது ஒரு முக்கிய வினா என்பதும் அதன் விடையில் தான், அல்லது அதன் காரணத்தில்தான் (வேறு பல காரணங்-களும் உள்ளன) தொல்காப்பியத் தோற்றத்தின் காரணம் புதைந்து கிடக்கின்றது.

தொல்காப்பிய உரையாசிரியர்கள் குற்றியலுகரம், குற்-றியலிகரம், ஆய்தம் என்ற மூன்று எழுத்துக்களும் பிற முப்பது எழுத்துக்களைப் போன்றே முக்கியமானவையா என்பதுபோன்ற வினாக்களை எழுப்பிப் பலபடக் கூறிச் செல்லுவர். 'எழுத் தோரன்ன எனக் கூறுவதற்குக் காரணம் என்ற வினாவை எழுப்பி

இளம்பூரணர் ''எழுத்தோரன்ன என வேண்டா கூறியதனால் முன் ''எனப்படுவ'' என்ற சிறப்பு அம் மூன்றற்கும் கொள்ளக்கிடந்தமையின் அது விலக்குதல் பெறுவதுமென்பது'' எனக் கூறுவார். எனவே முன்னர்க் கூறிய முப்பது எழுத்தோடு ஒரு நிகரனவல்ல இவை என்பதே இவர் கருத்து. எனினும் இவை (அகர இகரம்) ''உயிர் ஆகற்பாலன'' எனவே கூறுவார். எனினும் ''புணர்ச்சி வேற்றுமையும் பொருள் வேற்றுமையும் நோக்கிவேறெழுத்தென்று வேண்டினாரென உணர்க'' எனவும் கூறிச் செல்லுவார். ஆனால் பொருள் வேற்றுமைக்கு உதாரணம் எதுவும் கூறினாரில்லை. இவற்றை முன்னர்க் கூறிய முப்பது எழுத்துக்களுக்கும் வேறாகக் கூறியதன் காரணத்தை விளக்குகின்றாரேயன்றி வைப்பு முறையில் அடங்கிக் கிடக்கும் காரணம் பற்றி விளக்கினாரில்லை. இதே நிலையைத்தான் நச்சினார்க்கினியர், சிவஞானமுனிவர் போன்றவரிடமும் காண்கிறோம். மாதவ முனிவர் வேறு பல எண்ணங்களையெழுப்பி நிற்பினும் முறைவைப்பில் அடங்கிக் கிடக்கும் இரகசியம் பற்றிக் கூறினாரில்லை. எனினும் இவர் ''குற்றியலுகரம் தமிழ்ச் சிறப்பெழுத்தாதலின் வட மொழியின் வாராதாயிற்று'' (மு. 31) என மீண்டும் வட மொழி, தமிழ்மொழி வேறுபாடு பற்றிக் கூறுவது கவனிக்கத்தக்கது.

## மொழி மரபு

மொழிமரபு எழுத்துக்களின் சேர்க்கையால் சொற்கள் எவ்வாறு ஆக்கப்படுகின்றன என்பதைக் கூறுவது. அதாவது மொழியியல் கண்ணோட்டத்தில் கூறினால் மொழியாக்கத்தில் அதாவது சொல்லாக்கத்தில் எழுத்தின் பங்கு பற்றிக் கூறுவது எந்த எந்த எழுத்து எந்தெந்த எழுத்துக்களுடன் எங்கெங்கு வந்து சொற்களை ஆக்கிநிற்கின்றன என்பதுபற்றிக் கூறுவது. இதனை ஒலியன்களின் பகிர்வு (Distribution of Phonemes) எனக் கூறுவர். எந்தவொரு மொழியின் விளக்க இலக்கணமாயினும் சரி அல்லது பிற இலக்கணமாயினும் சரி இது ஒரு முக்கிய இடத்தைப் பெறும். (Agesthialingom, 1973, 2-65) தொல்காப்பியர் இந்த இலக்கணப் பகுதியைத்தான் மொழி மரபு என்றார். ஒவ்வொரு சொல்லாக்கத்திலும் அந்தந்த மொழியின்மரபு அடங்கிக் கிடக்கும்.

இப்பகுதியை ஆராய்ந்து பார்த்தால் கூடச் சார்பெழுத்துக்கள் எத்தனை அளவுக்கு முக்கிய இடத்தைப் பெற்றிருக்கின்றன என்பது விளங்கும்.

பொதுவாகச் சொற்களின் ஆக்கம் அல்லது சொற்களில் எழுத்துக்களின் (ஒலியன்களின்) பகிர்வு பற்றிக் கூறும்போது முக்கியமான எழுத்துக்களையே முதலில் எடுத்துக் கூறுவர். இது பெரும்பாலும் தமிழைப் பொறுத்தமட்டில் உயிர் எழுத்தில் தொடங்கும். இக்கட்டுரையின் ஆசிரியர் தன்னுடைய பதிற்றுப்பத்து இலக்கணத்தில் (1979-2) (a) அ என்ற ஒலியனை முதலில் எடுத்து அதன் பகிர்வுகளையே முதலில் கூறுவது காணத்தக்கது. இதே நிலையைத்தான் வேறு பல இலக்கணங்களிலும் காண்கிறோம். (S.V. Subramanian, 1972 : 2)

### மரபு இலக்கணங்கள்

இந்த நிலையே மரபு இலக்கணங்களிலும் உள்ளது. நன்னூல் முதனிலை, இடைநிலை, இறுதிநிலை போன்ற தலைப்பு களில் இதுபற்றிக் கூறும். இவற்றில் எல்லாம் முதலில் முதல் எழுத்துக்கள் பற்றியே கூறுகின்றது.

> ''பன்னீ ருயிரும் கசதந பமவய
> ஞஙஈ ரைந்துயிர் மெய்யும் மொழி முதல்'' (102)

என இந்நூல் கூறியுள்ளது. உயிர் எழுத்துக்களும் க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ, ங, என்ற உயிர் மெய்களும் மொழிக்கு முதலில் வரும் எனக் கூறுகிறது இது. இதனையடுத்து எந்தெந்த மெய்களுடன் எந்தெந்த உயிர்கள் வரும் என்றும் இன்னோரன்னவற்றைக் கூறும் (103, 104, 105, போன்ற நூற்பாக்கள்). இது போன்றே இறுதி நிலையிலும் உயிர்களும் மெய்களும் எவ்வாறு இறுதியில் வருகின்றன என்று கூறும் போதும் முதல் எழுத்துக்களை முதலில் வைத்தே கூறும் (107, 108), இதே நிலைதான் இடைநிலையிலும் (110-121). போலி என்ற தலைப்பில் வருவதும் இத்தகைய நிலையிலேயே உள்ளது.

இறுதி நிலைபற்றிக் கூறும்போது முதலில் முதல் எழுத்துக்கள் பற்றிக் கூறிய பின்னரே 'மெய் சாயும் உகரம் நாலாறு' எனக்-கூறுவார் இவர்.

''ஆவி ஞணநமன யரலவ ழளமெய்
சாயும் உகரநா லாறும் ஈறே'' (107)

என்பது நூற்பா

எனவே நன்னூலார் முதலில் முதல் எழுத்துக்கள் வரும் முதனிலை, இடைநிலை பற்றிப் பேசுவதும் பின்னர் இறுதிநிலையிலும் முதலில் முதல் எழுத்துக்களைப் பற்றிப் பேசிய பின்னரே மெய்சாயும் உகரம் பற்றிக் கூறுவது குற்றி-யலுகரத்துக்கு இறுதியிலேயே இடமளித்துள்ளமை விளங்கும்.

இந்த நிலையை வீரசோழியத்திலும் காண முடியும் முதனிலை, இறுதி நிலை எழுத்துக்கள் பற்றிப் பேசும்போது (நூற். 7. 8) இதனைக் காணமுடியும். முதனிலையைக் கூறும் போது ''ஆவியனைத்தும்'' என்று தொடங்குவதும் இதே-போன்று 'ஈறும் மகர ணகரங்க டாமும்' எனக் கூறுவதும் உயி-ருக்கும் மெய்க்கும் முக்கியத்துவம் கொடுத்து நிற்பதைக் காட்டும். நேமிநாதமும் இந்நிலையிலேயே உள்ளது. இவை சார்பெழுத்து ஆகிய குற்றியலுகர ஈறு பற்றிக் கூறுவதில்லை. முத்துவீரியம் குற்றியலுகர ஈறு பற்றிக் கூறினும் முக்கியமான உயிர் மெய் களுக்குப் பின்னரே இதுபற்றிக் கூறிநிற்கும் (82 - 92).

## தொல்காப்பியம் வைப்பு முறை

ஆனால் தொல்காப்பிய மொழி மரபோ வேறு வகையாக உள்ளது. எடுத்த எடுப்பிலேயே குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் ஆகியவை பற்றிக் கூறுவது (7 நூற்பாக்களில்) கவ-னித்தற் பாலது. சார்பெழுத்துக்கள் மொழியில் வருமாறு கூறும் நூற்பாக்களே முதலில் வைக்கப்பட்டுள்ளன. குற்றியலிகரம் (34, 35), குற்றியலுகரம் (36, 37,) ஆய்தம் (38, 39, 40) ஆகியவை பற்றி முதலில் உள்ள ஏழு நூற்பாக்கள் கூறிநிற்கின்-றன. தனி மொழியிலும் தொடர் மொழியிலும் இவை வருதல்

பற்றிப் பரக்கப் பேசுதல் காணத்தக்கது. இதன் பின்னரே முதல் எழுத்துக்கள் மொழியில் வரும் நிலைகள் கூறப்படுகின்றன. ஓரெழுத்தொருமொழி, ஈரெழுத்தொருமொழி எனப் பகுப்பது (43) மெய்யோடு உயிர் ஏறி வருவதும் மொழிமுதல் எழுத்துக்கள் (59 - 68) மொழியிறுதி எழுத்துக்கள் (69 - 82) போன்றவை பின்னர் தான் கூறப்படுகின்றன.

மொழி மரபின் முதல் நூற்பா

> ''குற்றியலிகாம் நிற்றல் வேண்டும்
> யாவென் சினைமிசை உரையசைக் கிளவிக்கு
> ஆவயின் வருஉம் மகரம் ஊர்ந்தே'' (34)

என்பது.''கேண்மியா''என்ற சொல்லில் காணப்படும் குற்றியலிகரம் மட்டும் பற்றிப் பேசுவது இந்நூற்பா. இதையடுத்து வரும் ''புணரியல் நிலையிடை............. தோன்றும்'' என்ற நூற்பா (35) குற்றியலுகரத்தையடுத்து வரும் யாது போன்ற சொற்கள் வரும்போது உண்டாகும் குற்றியலிகரம் பற்றியது. குற்றியலுகர ஆக்கம் பற்றிக் கூறுவது அடுத்த நூற்பா.

> ''நெட்டெழுத் திம்பருந் தொடர் மொழி யீற்றும்
> குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே''

என்பது (36) அந் நூற்பா. இது போன்றே அடுத்த நூற்பா புணர் மொழியில் குற்றியலுகரம் குறுகுதலைக் கூறுவது(37),

அடுத்த மூன்று நூற்பாக்கள் (38, 39, 40) ஆய்தம் பற்றியன. ஆய்தம் தனி மொழியில் வருவதைப் பற்றிக் கூறும்.

> ''குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
> உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே''

என்பது முதல் நூற்பா. இதையொட்டி வேறு இரண்டு நூற்பாக்கள். இவற்றில் ஒன்று புணர்மொழியில் வருவது. இன்னொன்று இதன் இயல்பு பற்றிக் கூறுவது.

பொதுவாக இலக்கண நூல்களில் காணப்படும் வரிசை முறைக்கு மாறாகவே தொல்காப்பியரின் வரிசை முறை உள்ளது. முதல் எழுத்துக்களுக்குரிய இடத்திற்கு மாறாக அவற்றைப்

பற்றிப் பின்னால் கூறி முன்னரே சார்பெழுத்துக்களைப் பற்றிக் கூறுவதன் காரணம் என்ன? அவற்றிற்கு இத்தனை முக்கியத்-துவம் கொடுப்பதன் காரணம்தான் என்ன? என்று ஆராய்வது நம் கடமையாகும். தொல்காப்பியர் கைதேர்ந்த ஒரு இலக்கண அறிஞர். எதை எங்கெங்கு எப்படி எப்படிக் கூற வேண்டுமோ அதை அதை அப்படி அப்படிக் கூறுபவர். அப்படியிருந்தும் இந்த மாற்றம் ஏன்? ஏதாவது தகுந்த ஒரு காரணம் இன்றி இவ்வாறு வைப்பு முறையில் மாற்றத்தைக் கொண்டு வர-மாட்டார் இப்பேராசான்.

## உயிரளபெடை வைப்பு முறை

உயிரளபெடையும் தொல்காப்பியத்தில் மிக முக்கியமான ஒரு இடத்தைப் பெறும். நூன்மரபில் காணப்படும் நூற்பாக்-களின் வைப்பு முறையைக் கவனித்தால் இந்த உண்மை நன்-குத் தெரியவரும் நூன்மரபில் சார்பெழுத்து பற்றிக் கூறும் இரண்டாவது நூற்பாவையடுத்து 3, 4, 5, 6, 7, ஆகிய நூற்பாக்கள் எழுத்துக்களின் மாத்திரை அல்லது அளவு பற்றிப் பேசுவன. முதலில் (நூற். 3)

''அவற்றுள்
அ இ உ
எ ஒ வென்னும் அப்பால் ஐந்தும்
ஓரளபிசைக்குங் குற்றெழுத்தென்ப''

எனக் குற்றெழுத்துக்களின் (உயிர்) அளவு கூறி அதை அடுத்து (நூற்.4) நெட்டெழுத்துக்களின் மாத்திரையையும் கூறி அதை அடுத்து (5)

''மூவள பிசைத்தல் ஓரெழுத்தின்றே''

என்று கூறி,

''நீட்டம் வேண்டின் அவ்வளபுடைய
கூட்டி யெழுஉதல் என்மனார் புலவர்''

என உயிரளபெடை பற்றியும் கூறிநிற்பார்.

தனியெழுத்துக்களையும் சார்பெழுத்துக்களையும் (பின்னால் வந்த பெயர்) முதல் நூற்பாவில் கூறிய தொல்காப்பியம் உடனே சார்பெழுத்துக்களின் வகை பற்றிக் கூறியது பற்றி வினா எழுப்பப்பட்டது. அது அவ்வாறு இருக்க முதல், சார்பு பற்றிக் கூறிய நிலையில் அவற்றின் வகை, விரி, போன்றவற்றைக் கூறாது குற்றெழுத்துக்களின், நெட்டெழுத்துக்களின் மாத்திரை அல்லது அளபு பற்றியும் உயிரளபெடை பற்றியும் உடனே கூறியதன் காரணம் என்ன என்று எண்ணிப் பார்ப்பது நம் கடமையாகும்.

முதல் நூற்பாவில் ''அகர முதல் னகர விறுவாய்'' என்று மட்டுமே கூறி அதன் பின்னர் உயிர் என்றும் மெய்யென்றும் பிரிக்காமல் அதையொட்டி உயிரையும் குறில் நெடில் என்றும் பிரிக்காமல் மூன்றாவது நூற்பாவில் குறில் எழுத்துக்களின் மாத்திரையையும் நெட்டெழுத்துக்களின் மாத்திரையையும் கூறி நிற்பது ஏன்? இங்கும் அவர் உயிர் எழுத்துக்களின் அளபுகள் தான் கூறுகிறாரேயன்றி மெய்யெழுத்துக்கள் அளபு பற்றிக் கூறவில்லை என்பதும் கவனிக்கத் தக்கது.

உயிர் எழுத்துக்களை
''ஔகார விறுவாய்
பன்னீரெழுத்தும் உயிரென மொழி''

என்று 8 ஆவது நூற்பாவிலும் மெய்யெழுத்துக்களை

''னகர விறுவாய்ப்
பதினெண் எழுத்தும் மெய்யென மொழிப''

என 9 ஆவது நூற்பாவிலுமே கூறி நிற்கிறார். உயிர், மெய் என்ற பகுப்புக்கு எந்த விதத்திலும் அளபு காரணமாக இல்லை. அதாவது மாத்திரையின் அடிப்படையில் இந்தப் பிரிவு (உயிர் மெய் என்ற பிரிவு) அமைந்தது இல்லை. இந்நிலையில் மாத்திரை பற்றியும் அளபெடை பற்றியும் இவற்றிற்கு முன்னரே கூறியதன் காரணம் என்ன என்பதும் நினைத்துப்பார்க்க வேண்டியதாகும்.

பொதுவாக இலக்கணங்கள் அதுமரபு இலக்கணங்களா-யினும் பிற இலக்கணங்களாயினும் உயிர் எழுத்துக்கள் பற்றிய 8 ஆவது நூற்பாவும் மெய்யெழுத்துக்கள் பற்றிய 9 ஆவது நூற்பாவும் 3 ஆவது நான்காவது நூற்பாக்களாக அமைந்து நிற்கும். சார்பெழுத்து பற்றிய நூற்பாவை அடுத்து வைத்து அதன் பின்னரே மாத்திரை அல்லது அளபு பற்றிய சூத்திரங்களை-யும் அளபெடை பற்றிய நூற்பாக்களையும் வைத்திருக்க வேண்-டும். தொல்காப்பியம் இந்த இயற்கையான நிலையை மாற்றி வரிசைப் படுத்தியுள்ளது. இதனைக் கீழ் வருமாறு காட்டலாம்.

| தொல்காப்பிய வரிசை முறை | | இருக்க வேண்டிய வரிசை முறை | |
|---|---|---|---|
| 1. | எழுத்து வகைகள் | 1, | எழுத்து வகைகள் (1) |
| 2. | சார் பெழுத்துக்கள் | 2, | உயிர் எழுத்து எவை எவை (8) |
| 3. | குற்றெழுத்துக்களும் அளபும் | 3. | மெய்யெழுத்துக்கள் எவை (9) |
| 4. | நெட்டெழுத்துக்களும் அளபும் | 4. | சார்பெழுத்துக்கள் (2) |
| 5. | மூவளபிசைத்தல் இல்லை. | 5. | மாத்திரை (7) |
| 6. | நீட்டத்தை எவ்வாறு காட்டுவது (உயிரளபெடை) | 6. | குற்றெழுத்துக்களும் அளபும் (3) |
| 7. | மாத்திரை | 7. | நெட்டெழுத்துக்களும் அளபும் (4) |
| 8. | உயிர் எழுத்து எவை எவை | 8. | நீட்டத்தை எவ்வாறு காட்டுவது (உயிரள-பெடை) |
| 9. | மெய்யெழுத்து எவை எவை | 9. | மூவளபு இசைத்தல் இல்லை (இது அவசியமில்லை) |

முதல் சூத்திரத்தில் தனியெழுத்துக்களையும் சார்பெழுத்துக்களையும் கூறிய பின்னர்த் தனியெழுத்துக்கள் உயிர், மெய் என இருவகைப்படும் என வகை கூறிப் பின்னர் எவை உயிர் எவை மெய் எனக் கூறுவதுதான் சிறப்பாக அமையும். ஆனால் தொல்காப்பியர் அவ்வாறு கூறாமல் உயிர் எவை (நூற் 8) மெய் எவை (நூற். 9) என்றே கூறியுள்ளார். வகை பற்றிக் கூடுதலாக ஒரு நூற்பா அமைத்திருக்கலாம்.

இது போன்றே உயிர் மெய் என்று பகுத்த பின்னர் குற்றெழுத்து நெட்டெழுத்து எனப் பகுப்பதற்கு முன்னால் மாத்திரை பற்றிக் கூறிவிட்டுப் பின்னர் குறில் நெடில் எனப் பகுத்திருக்கலாம். எனினும் இது அத்தனை அளவுக்கும் பெரிய மாற்றமாக இல்லை எனக் கருதலாம்.

## நன்னூலில் வைப்பு முறை

இத்தகைய எண்ணங்களை உள்ளத்தில் கொண்டு நன்னூல் வைப்பு முறையைக் காண்போம். தொல்காப்பியத்திற்கு அடுத்தபடியாகச் சிறந்த மரபு இலக்கணம் நன்னூல் என்ற நிலையில் அதன் முறைவைப்பு எடுத்துக் கொள்ளப்படுகின்றது. முன்னர்க் கூறியபடி எழுத்து எது என்று வரையறுத்து அதே நூற்பாவில் முதல் சார்பு எனப்பகுத்து (58) அதையடுத்து உயிர், மெய் என்று முதல் எழுத்தைப் பகுத்து (59) அதன் பின்னரே சார்பெழுத்து வகை,விரிகளைக் கூறிப்(60, 61)பின்னர் உயிர் எழுத்துக்களையும் மெய்யெழுத்துக்களின் விரியையும் கூறிப் பின்னர், குறில் நெடில் எனப் பகுத்து நிற்பது காணத்தக்கது. இந்த வைப்பு முறை ஓரளவு நம்முடைய வைப்பு முறையை ஒத்தே காணப்படுகின்றது.

ஆனால் அளபெடை, முதலியவற்றைக் குறிக்கும் நூற்பாக்களைப் பிறப்பு என்ற தலைப்பின்கீழ்க் கொண்டுபோய் வைத்துள்ளார் (91). மாத்திரையினை உருவம் என்ற தலைப்பின் கீழ்வைத்துள்ளார். அளபெடையையும் மாத்திரையையும் தொல்காப்பியர் வைத்துள்ளதுபோல் முதலிலேயே வைப்பது தான் பொருத்தம். எழுத்துக்களின் வகை தொகை விரிகளைக் கூறிய உடனேயே அவற்றின் அளபு கூறுவதுதான் பொருந்தும். அந்த நிலையில் தொல்காப்பியர் நூல் மரபில் கூறுவது தான் சிறப்பு. ஆனால் அவருடைய வைப்பு முறைதான் வேறொரு

காரணத்துக்காக. குற்றியலுகரம், குற்றியலிகரம், அளபெடை ஆகியவற்றிற்கும் முற்றியலுகரம் அளபெடையின் மூல எழுத்துக்கள் ஆகிய இவற்றிற்கும் பிறப்பிடம் ஒன்றே என்ற கருத்தில்தான் நன்னூலார் இவற்றைப் பிறப்பு என்ற தலைப்பின்கீழ்வைத்தார் போலும். எனினும் மாத்திரையைப் பற்றிக் கூறும் போது உருவம் என்ற தலைப்பின் கீழ்க் கூறுவது பொருந்துமாறில்லையேயன்றி வரிசைமுறை பொருந்துவதாகவே உள்ளது.

## ஒப்பு நோக்கு

இந்த மூன்று முறையையும் கீழ் வருமாறு காட்டலாம்.

| தொல்காப்பியம் நூற். | | இருக்க வேண்டியது | | நன்னூல் நூற். | |
|---|---|---|---|---|---|
| 1 | எழுத்துவகை | 1 | எழுத்து வகை | 58 | எழுத்து வகை |
| 2 | சார்பெழுத்து | 2 | முதல் எழுத்து வகை | 59 | முதல் எழுத்து வகை. |
| 3 | குற்றெழுத்து அளபு | 3 | சார்பெழுத்து வகை | 60 | சார்பு வகை |
| | | | | 61 | சார்பு விரி. |
| 4 | நெட்டெழுத்து அளபு | 4 | உயிர் எழுத்து எவை எவை | 63 | உயிர், மெய். எவை எவை |
| 5 | மூவளபு இசைத்தல் இல்லை | 5 | மெய்யெழுத்து எவை எவை | 64 | உயிர் அளபு குற்றெழுத்து |
| 6 | அளபெடையை எவ்வாறு காட்டுவது | 6 | உயிர் அளபு குற்றெழுத்து | 65 | உயிர் அளபு நெட்டெழுத்து |
| 7 | மாத்திரை அளபு | 7 | உயிர் அளபு நெட்டெழுத்து | 89 | உயிர்மெய் |
| 8 | உயிர் எழுத்து எவை எவை | 8 | மாத்திரை | 90 | ஆய்தம் |
| 9 | மெய்யெழுத்து எவை எவை | 9 | நீட்டத்தை (அளபெடையை) எவ்வாறுகாட்டுவது | 91 | அளபெடை |
| | | | | 93 | குற்றியலிகரம் |
| | | | | 94 | குற்றியலுகரம் |
| | | | | 100 | மாத்திரை |

நன்னூல் சார்பெழுத்தின் வகையையும் எண்ணிக்கையையும் 60, 61 இல் கூறியபின் அவருடைய கருத்துப்படிச் சார்பெழுத்து அதிகமாக உள்ள நிலையில் அவற்றை ஒவ்வொன்றாக 89 ஆவது கூற்பா முதல் விளக்குகிற நிலையில் கூடுதல் சூத்திரங்கள் உள்ளன. எனினும் வைப்பு முறையில் அவை எங்கெங்கே உள்ளன என்பதைக் காட்டவே அவையும் இங்குத் தரப்படு-கின்றன.

## தொல்காப்பியம் தரும் செய்திகள்

இவற்றை ஒப்ப வைத்துக் காணும்போது சில உண்மைகள் விளங்கும் (1) தொல்காப்பியர் முதல் எழுத்துக்களை வகுத்தும் விரித்தும் கூறுவதற்கு முன்னாலேயே சார்பெழுத்துக்களின் வகைகளைக் கூறிவிடுகிறார். இரண்டாவது கூற்பாவிலேயே கூறி, சார்பெழுத்துக்களுக்கு முக்கியமான இடத்தை அளித்து அவை முக்கியம் வாய்ந்தவை என அவர் கருதுவதைச் சூசகமாகக் கூறிவிடுகிறார்

(2) இது போன்றே உயிர் என்றும் மெய் என்றும் பிரிக்-காமல், அதுபோலவே உயிரைக் குறில் என்றும் நெடில் என்றும் பிரிக்காமல் குற்றெழுத்து எவை என்றும் நெட்டெழுத்து எவை என்றும் கூறி அவற்றின் அளபையும் கூறுகிறார். அளபைக் கூறு-தற்காகவே இந்த இரண்டு கூற்பாக்களையும் சார்பெழுத்துக் கூறும் கூற்பாவிற்குப் பின்னர் வைத்துள்ளார். இங்கு அளபு கூறுதலே அவர் நோக்கம். இந்த அளபைக் கூறினால்தான் அடுத்த கூற்பாவில் காணப்படும் செய்தியைக் கூறமுடியும்.

(3) ஐந்தாவது சூத்திரத்தில் கூறப்படும் ஒரு எழுத்து மூவளபு இசைப்பது இல்லை என்ற செய்தி சிறப்பாக, முக்கியச் செய்தியாகக் கூறப்படுகின்றது. இது நனனூலிலும் நம்முடைய பகுப்பிலும் இல்லை. இது தொல்காப்பியம் மட்டுமே சிறப்பாகக் கூற விரும்பிய செய்தி. ஒரு மொழியின் அளபு பற்றிக் கூறும் போது உள்ளதைக் கூறுவதே மரபு. இல்லாததைக் கூறுதல் மரபு அன்று. இந்த மரபையும் மீறித் தொல்காப்பியம் இதை முதலிலேயே கூறிவிடுகின்றது.

இவற்றிற்கெல்லாம் காரணம் என்ன? இது பின்னர் விளக்-கப்படும்.

## நூற்பாக்களின் எண்ணிக்கை

மேலே குறிப்பிட்ட சார்பெழுத்துக்கள், உயிரளபெடை ஆகியவற்றைக் குறிப்பிடும் நூற்பாக்களின் எண்ணிக்கை பற்றி நோக்கின் கூட இவற்றின் முக்கியத்துவம் விளங்கும். குற்றியலுகரப் புணரியல் என்ற ஒரு தனி இயலையே அமைத்து 78 நூற்பாக்களில் (406 - 483) இது பற்றிப் பலபடக் கூறுவார் தொல்காப்பியர். உயிர் மயங்கியல் எல்லா உயிர் எழுத்துக்களின் புணர்ச்சி பற்றிக் கூறும் நிலையில் 93 நூற்பாக்களையும், எல்லா மெய்களும் புணரும் நிலைபற்றிக் கூறும் புள்ளி மயங்கியல் 110 நூற்பாக்களையும் கொண்டிருக்கக் குற்றியலுகரப் புணரியல் 78 நூற்பாக்களைக் கொண்டிருப்பது தொல்காப்பியர் இதற்குக் கொடுத்திருக்கும் முக்கியத்துவத்தைக் காட்டும். மேலும் இதன் புணர்ச்சி பற்றி உருபியலிலும் (196, 201, 202) வேறு பல பண்புகள் பற்றி மேலே கூறிய படி நூல் மரபு, மொழிமரபு ஆகிய இயல்களிலும் கூறியிருப்பதும் காணத்தக்கது. குற்றியலிகரம் குற்றியலுகரத்தை யொட்டி வருகின்ற நிலையில் குறைவான நூற்பாக்களே அது பற்றிப் பேசினும் குற்றியலுகர நூற்பாக்கள் குற்றியலிகரம் பற்றி மறைமுகமாக உள்ள நிலையைக் காணலாம். நெடுங்கணக்கு வரிசையில் இகரம் முதலில் வருவதால் தான் தொல்காப்பியம் குற்றியலுகரத்துக்கு முன்னால் குற்றியலிகரத்தைப் பேசி நிற்கின்றது. இதே நிலை தான் பிற மரபு இலக்கணங்களிலும்.

ஆய்தமும் பல நூற்பாக்களில் பேசப்படுகின்றது. தொல்காப்பியத்தில் 15க்கும் அதிகமான இடங்களில் காணப்படுகிறது. நூன்மரபு, மொழிமரபு, மெய்யீற்றுப் புணரியல், குற்றியலுகரப் புணரியல் ஆகியவற்றில் எல்லாம் பரந்து கிடக்கின்றன இந்நூற்பாக்கள்.

இதே நிலையைத் தான் உயிரளபெடைபற்றிய நூற்பாக்களிலும் காண்கிறோம். முன்னர்க் கூறியபடி நூன் மரபு. மொழி மரபு ஆகிய இயல்களில் மட்டுமின்றி உயிர் மயங்கியல் இயலிலும் பல நூற்பாக்களும் (214, 224, 227, 230, 231, 232, 262, 268, 272, 273, 274, 275, 285, 293, 295, புள்ளி மயங்கியல், 312) இதுபற்றிக் கூறுகின்றன.

## சமஸ்கிருதமும் தமிழும்

### சார்பெழுத்து

இவ்வாறு சார்பெழுத்து, உயிரளபெடை ஆகியவை இத்தனை அளவுக்கு முக்கியத்துவம் பெற்றுள்ளமையின் காரணத்தினை முழுமையாக ஆராய்வதற்கு முன் சமஸ்கிருத, தமிழ் மொழிகளின் அமைப்புப் பற்றிய சில கருத்துக்களை ஆராய்தல் துணைபுரியும். இவ்விரண்டையும் பற்றிச் சுப்பிரமணியசாஸ்திரி கூறுவது கவனித்தற்பாலது. ''தமிழ்மொழிக்கும் வடமொழிக்குமுள்ள வேற்றுமை'' என்ற தலைப்பில் தனது ''சொல்லதிகாரக்குறிப்பு'' (1930) என்ற நூலில் எழுத்து பற்றியும் சொல் பற்றியும் குறிப்பிடுவார் அவர். எழுத்து பற்றிக் கூறுகையில் எ, ஒ ஆகிய எழுத்துக்கள், சந்தியக்கரம் போன்றவற்றைக் குறிப்பிட்டுவிட்டுப் பின்னர்த் ''தமிழிலுள்ள குற்றியலிகரம், குற்றியலுகரம் இவ்விரண்டும் வடமொழியில் இல்லை. க, ச, ட, த, ப, ற, இவ்வாறுக்கு முன்னரும் ஆய்தம் தமிழில் வரும். க,ப இவ்விரண்டுக்கு முன்னரே அஃது வரும்'' எனக்கூறுவார் அவர். எனவே தொல்காப்பியர் குறிப்பிடும் சார்பெழுத்துக்களாக உள்ள குற்றியலுகரமும் குற்றியலிகரமும் ஆய்தமும் (க,ப ஒழிந்த இடங்கள்) தமிழுக்கே உரியவை என்பது போதரும். சிவஞான முனிவரும் குற்றியலுகரம், குற்றியலிகரம் ஆகியவை தமிழுக்கே உரியவை என்று கூறியது முன்னரே கூறப்பட்டது.

### அளபெடை

குறில் நெடில் அளபெடை பற்றிப்பேசும் சிவஞானமுனிவர் சமஸ்கிருத மொழிக்கும் தமிழ் மொழிக்கும் இடையே உள்ள வேற்றுமை பற்றியும் கூறுவது கவனிக்கத்தக்கது.

''இன்னும் வடநூலார் அ என்னுமோரெழுத்து ஒரு மாத்திரையா யுச்சரிக்குங்காற் குற்றெழுத்தென்றும், இரண்டு மாத்திரையாய்க் கூட்டியுச்சரிக்குங்கால் நெட்டெழுத்தென்றும் மூன்று மாத்திரையா யுச்சரிங்குங்கால் அளபெடையெழுத்தென்றும் மூவகைப்படுமெனவும் அம்மூன்றும் எடுத்தல் படுத்தல் நலிதலென்னுமோசை வேறுபட்டால் ஒன்று மூன்றா யொன்பது

வகைப்படுமெனவும், அவ்வொன்பது வகையும் மூக்கின் வளி-யொடு சார்த்தியுஞ் சார்த்தாது முச்சரிக்குமாற்றால் ஒவ்வொன்-றிவ்விரு வகைத்தாய்ப் பதினெட்டாமெனவும் கூறுப'' (முதற் சூத்திரவிருத்தி, ப 27) என இரண்டு மொழிக்கு மிடையேயுள்ள வேற்றுமையைக் கூறுவது கவனிக்கத் தக்கது. எனவே வடமொழி யில் அளபெடை என்பது ஒரே எழுத்து ஒரு மாத்திரையாகவும் இரண்டு மாத்திரையாகவும் ஒலித்து நிற்பது போன்று அதே நீண்டு நின்று மூன்று அல்லது மேல்பட்ட மாத்திரையாய் ஒலிக்கும் எனக்கூறலாம். ஆனால் தமிழில் ஒரு நெட்டெழுத்து இரண்டு மாத்திரையாக மட்டுமே ஒலிக்கும்.

இதுபற்றிக் கூறும் சாஸ்திரி (மு. நூற் 5; ப 14) 'மூன்று மாத்திரை ஒலித்தல் ஓரெழுத்திற்கு இல்லை'' என்றும் ''தமிழ் மொழியில் மூன்று மாத்திரை ஒலிக்கும் எழுத்தின்மையால் ஆ அ, ஈ இ, ஊ உ, என்ற குறில்களால் குறிக்கப்படும் ஒலியெழுத்து ஓரெழுத்தெனக் கொள்ளுதல் தகாது. அவ்வாறாதலால் 'மூன்-றளவு' (வீரசோழி. 5) என்று வீரசோழிய வாசிரியர் கூறுதல் பொருந்தாது. அவர் ஆ அ, ஈ இ, ஊ உ இவற்றை அளபெடை யென்றும், அவற்றாற் குறிக்கப்படும் ஒலியெழுத்து வடமொழிப் புலுதத்தை யொக்குமென்றும் கருதினர் போலும். அவர் கூறி-யவற்றையே கொண்டனர் நேமிநாதவாசிரியரும், நன்னூலாரும் இலக்கணவிளக்கவாசிரியரும், பிரயோக விவேக நூலாரும். ஆசி-ரியர் தொல்காப்பியனார் ஆ அ, ஈ இ, ஊ உ என்ற விடத்தில் அ, இ, உ இவற்றையே அளபெடை என்ற குறியாற்கொண்டன-ரென்பதும் அவற்றைத் தனியெழுத்தாகக் கொண்டனர் என்ப-தும் எனக்கூறி ''நீட்டம் வேண்டின் ...... வென்மனார் புலவர்'' (எழு. 6) போன்ற 10 நூற்பாக்களைத்தந்து (எழுத்து 41, 71, 273, 74, 8, 93, 227, சொல் 125, பொ. 329) தொல்காப்பியனார் கருத்தை விளக்குவார்.

சமஸ்கிருத மொழியில் உயிர்கள், குற்றெழுத்துக்கள் ஹ்ரஸ்வம் என்றும் நெட்டெழுத்துக்கள் தீர்க்கம் என்றும் அள-பெடைகள் புலுத்தம் என்றும் வழங்கப்படும். இந்த நிலை-தமிழில் இல்லை. தமிழில் இரண்டு மாத்திரைக்குமேல் நீட்டம் வேண்டுமானால் வேறொரு குற்றெழுத்தைக் கொண்டு இணைத்துக் கூறவேண்டும். இதனைத் தான் தொல்காப்பியம்,

''நீட்டம் வேண்டின் அவ்வளபுடைய
கூட்டியெழூஉதல் என்மனார் புலவர்'' (6)

எனக் கூறிப் போந்தது. ஏதாவது காரணங்களுக்காக அளபெடை வேண்டின் நெடிலையும் அதனோடு ஒத்த குறிலையும் பிளவு படாமல் கூட்டி உச்சரிக்கவேண்டும் என்பதே இந்நூற்பாவின் கருத்து. ''எழூஉதல்'' என்பதற்குச் சிலர் ''எழுதுக'' எனப் பொருள் கொண்டமையினால்தான் (வெள்ளைவாரணன் 196- : 39) சிக்கல் எழுந்தது. ஆனால் நச்சினார்க்கினியர், இளம் பூரணர் ஆகியோர் ''எழுப்புக'' எனக் கூறினர்.

## வைப்புமுறை காரணம்

எனினும் தொல்காப்பியர் இதனை நேரடியாகக் கூற வேண்டிய வரிசையில் கூறவில்லை. குற்றெழுத்து நெட்டெழுத்து மாத்திரைபற்றிக் கூறிவிட்டு அவற்றை அடுத்து மூவளபிசைத்-தல் ''ஓரெழுத்தின்றே'' என ஐந்தாவது நூற்பாவில் கூறி நிற்பது சமஸ்கிருத மொழியைப் போன்று நெடிலே நீண்டு நின்று அளபெடையாகாது என்பதை வலியுறுத்திக் நூறுவதற்காகவே இந்நிலையில் தமிழ்மொழியின் அளபெடைப் பண்பு வேறு; சமஸ்-கிருத மொழியின் அளபெடைப் பண்பு வேறு எனத் தெளிவாகக் காட்டுவதற்காகவே என்பது உறுதியாகும். இந்த நூற்பா விரிவான அடிப்படையில் பார்த்தால் அவசியமற்ற ஒன்றாகும். ஆனால் தொல்காப்பியரின் நோக்கம் தமிழ்மொழி அமைப்பும் சமஸ்கிருத மொழியமைப்பும் வேறு வேறு என்பதைத் தெளி-வாகக் காட்டுவதுதான் என்ற நிலையில் இத்தகைய நூற்பாக்-களைக் காணமுடிகின்றது. இதனால் தான் நூன் மரபில் மாத்-திரைக்கும் அளபெடைக்கும் முக்கியமான இடத்தைக் கொடுத்து 3,4,5,6, ஆவது நூற்பாக்களில் இவற்றைக் கொண்டுவந்து வைக்கிறார்.

## வலியுறுத்தலும் தெளிவுபடுத்தலும்

மொழி மரபிலும் இந்நிலையே காணப்படுகின்றது. உயிர் மெய்களைப் பற்றிக் கூறும் முன்பே அளபெடை பற்றிக் கூறு-வதும் காணத்தக்கது. சார்பெழுத்துக்களை முதலில் வைத்து, உடனே அளபெடை பற்றி இரண்டு நூற்பாக்களில் கூறி நிற்-கிறார் (41, 42).

''குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே''

என்பது முதல் நூற்பா. முன்னர்க் கூறியது போன்று சொல்லாக்கத்தில் எழுத்துக்களின் பங்கு, அதாவது அவற்றின் இடம் பற்றிக் கூறும் இவ்வியலின்கண் முதல் எழுத்து எனக் கருதப் படும் உயிர்மெய்கள் பற்றிக் கூறுவதற்கு முன்பே அளபெடை (அளபெடையாக்கம்) பற்றிக் கூறுகிறது தொல்காப்பியம். மேலும் அளபெடை எங்கெங்கெல்லாம் வரும் என்பதையும் கூறி நிற்கிறது. இங்கு மிகத்தெளிவாக எது அளபெடை எனக் கூறுகின்றது. நெட்டெழுத்தின் பின்னர் வரும் குற்றெழுத்தே இசை நிறைக்கும்'' எனக் கூறுவார். குற்றெழுத்துதான் இசை நிறைக்கிறது. அதுவரும் இடம்தான் நெட்டெழுத்தின் பின்னர் என்பதைத் தெளிவாகக் கூறுகிறார். இளம்பூரணர் ''நெட்டெழுத்துக்களின் பின்னாக''என எழுதுவார் (41). இதே தொடர் களையே நச்சினார்க்கினியரும் எழுதுவார்(43). சாஸ்திரி ''நெட்டெழுத்தின் பின்னர் அவற்றினை ஒத்தகுற்றெழுத்தே நின்று இசையை நிறைக்கும்'' (நூற் 41. ப. 51) எனத் தெளிவாக எழுதுவார். இந்நூற்பா அளபெடை பற்றிய தொல்காப்பியர் கருத்தை மிகத் தெளிவாகக் கூறி நிற்பது. இதே கருத்தையே நூற்பா 6 இல் மறைமுகமாகக் கூறி நிற்கிறார். தனது கருத்தைப் பலவேறு நூற்பாக்களில் மீண்டும் மீண்டும் வற்புறுத்தி நிற்பார் அவர். இது பற்றிப் பின்னர்க் கூறப்படும்.

உயிரளபெடை என்பது சார்பெழுத்துக்கள் போன்று முக்கியமானது அன்று என்பது பலர் கொள்கை. முதல் நூற்பா உரையிலேயே இளம் பூரணர் ''எனப்படுப என்ற சிறப்பான், அளபெடையும் உயிர்மெய்யும் வரி வடிவும் சிறப்பில்லா எழுத்தாகக் கொள்ளப்பட்டன'' எனக் கூறுவார். இதே கருத்தினையே நச்சினார்க்கினியரும் ''எனப்படுப என்று சிறப்பித்துணர்த்தலான் அளபெடையும் உயிர்மெய்யும் இத்துணைச் சிறப்பில : ஓசையுணர்வார்க்குக் கருவியாகிய வரிவடிவும் சிறப்பிலா எழுத்தாகக் கொள்ளப்படும்'' என்பார். மாதவ யோகியார் சிவஞானமுனிவர் உயிரளபெடை பற்றிக் கூறுங்கால் அதற்குரிய காரணத்தையும் விளக்குமுகத்தான் ''அளபெடை அந்நெட்டெழுத்தோடு குற்றெழுத்தொத்துநின்று நீண்டிசைப்பதொன்றாயினும்பொருடராது

இசை நிறைத்தன் மாத்திரைப் பயத்ததாய் நிற்றலின் வேறெழுத் தென வைத் தெண்ணப்படா தாயிற்றென்பது நுண்ணுணர்வா நேர்ந்துணர்க. ''குன்றிசை மொழிவயினின்றிசை நிறைக்கு — நெட்டெழுத்திம்ப ரொத்த குற்றெழுத்தே'' என்ற தூஉம் இக்-கருத்தே பற்றியென்க'' (மு. ப. 26) எனக் கூறுவார்.

எனினும் தொல்காப்பியம் எத்தனையோ நூற்பாக்களில் இது பற்றிக் கூறிச் செல்லுகிறது என்பது முன்னரே காட்டப்-பட்டது. இத்தகைய நிலைக்குக் காரணம் தொல்காப்பியர் வடமொழிப் புலுத்தம் வேறு; இங்குத் தமிழில் காணப்படும் உயிரளபெடை வேறு என்பதை அழுத்தம் திருத்தமாகக் கூற-வேண்டும் என்று எண்ணியது தான். ஒரு வேளை அவர் காலத்தில் பிற இலக்கண அறிஞர்கள் இரண்டும் ஒரே மாதிரியானவை எனக் கூறியிருக்கலாமோ என்ற எண்ணமும் தோன்றுகின்றது. காரணம் இதுபற்றி அவர் மேலும் மேலும் கூறிநிற்பது தான்.

தொல்காப்பியர் தன்னுடைய அளபெடைக் கொள்கையில் மிகவும் திடமாகவும் அழுத்தம் திருத்தமாகவும் இருந்தார். எங்கெங்கெல்லாம் தன்னுடைய கொள்கையை நிலை நாட்டும் வாய்ப்பு கிடைக்குமோ அங்கெல்லாம் நிலை நாட்டிச் செல்லு-வார். மட்டுமன்றிப் பல வேறு சந்தர்ப்பங்களையும் உண்டாக்-கிக் கொண்டு (அதனால் தான் இத்தனை நூற்பாக்கள்) அங்-கெல்லாம் வற்புறுத்தித் தெளிவாகவும் தேற்றமாகவும் கூறி நிற்பார். ''அவ்வளபுடைய கூட்டி யெழுஉதல்'' என்பார். ''நெட்டெழுத்தை நீட்டாதே'' என்பது போன்று உள்ளது இது. 'இன்னொரு குற்றுயிரைச் சேர்த்துக்கொள்க' என்பார். ''குற்-றெழுத்தே இசை நிறைக்கும்'' என்பார் (41). இதனையே சாஸ்திரி முன்னர்க் கூறியது போன்று தொல்காப்பியர் ''ஆஅ, ஈஇ, ஊஉ என்ற குறியாற் கொண்டனர் என்பதும்'' எனக் கூறுவார் (மு. ப. சூ. 5. பக். 14)

தொல்காப்பியர் பல இடங்களில் குற்றெழுத்தே அள பெடையெழுத்துக்களாக நிற்கின்றன என்பார். உயிர் மயங்-கியலில் பல இடங்கள் இப்பண்பைக் காட்டி நிற்கின்றன. புணர்ச்சியில் அளபெடைகள் வரும் பல இடங்களில் (இதனைப் போலி என்பர் சிலர்) நெட்டெழுத்து நீண்டது என்று கூறாமல் ''அகரம் மிகுமே'' போன்று குற்றெழுத்தை வைத்தே கூறுவார்.

> ''உம்மை எஞ்சிய இரு பெயர்த் தொகைமொழி
> மெய்ம்மை யாக அகரம் மிகுமே'' (224)

எனக் கூறுவது காண்க. தொகைச் சொல்லில் (உவாஅப் பதி-னான்கு) காணப்படும் அளபெடையில் அகரம் மிகுந்தது எனக் குற்றெழுத்தை மையமாக வைத்துக் கூறுதல் காண்க. உம்-மைத் தொகையில் ''அகரம் மிக்கு முடியும்'' என இளம்பூர-ணரும் நச்சினார்க்கினியரும் எழுதுவர். தொல்காப்பியர் இங்கும் சந்தேகம் கொள்ளக்கூடாது என்பதற்காக ''மெய்ம்மையாக அகரம் மிகுமே'' எனத் தெளிவாகக்கூறுவது காணத்தக்கது. இதனை உணர்ந்த இளம்பூரணர் ''மெய்யாக நிலை மொழி-யீற்று அகரம் மிகும்'' என்றும்; சாஸ்திரி ''ஆகாரத்தின் பின்னர் உண்மையாக அகரம் மிகும்'' எனவும் எழுதுதல் காணத்தக்கது. நச்சினார்க்கினியரும் 'மெய்யாக' என எழுதுவார்.

இதுபோன்றே 227 ஆம் நூற்பாவையும் அமைத்துள்ளார்.

> ''குறியதன் முன்னரும் ஓரெழுத்து மொழிக்கும்
> அறியத் தோன்றும் அகரக்கிளவி''

என்பார். இதற்குப் 'பலா அக்கோடு' போன்ற உதாரணங்-களைத்தருவர் உரையாசிரியர்கள். இங்கும் பலா என்பதில் காணப்படும் ஆகாரம் நீண்டு நிற்கவில்லை அகரம் விளங்குமாறு தோன்றுகிறது என விதந்து கூறி நிற்கிறார் அவர். இத்தகைய உதாரணங்களை, சொற்களைப் பார்ப்பவர்கள் நெட்டெழுத்து நீண்டு நின்று அளபெடுத்து நின்றதோ என எண்ணிவிடக்-கூடாதே என்பதை உள்ளத்தில் வைத்துப் பல நூற்பாக்களில் இத்தகைய சொற்கள் பற்றிக் கூறிச் செல்லுவார் அவர்.

இவற்றைப் போன்றே உகரம் வருதல் பற்றியும் கூறப்-படுகின்றது.

> ''ழகர உகரம் நீடிடன் உடைத்தே
> உகரம் வருதல் ஆவயினான''

என்ற நூற்பா (262) உகரம் வருதல் பற்றிக் கூறுகின்றது. ''பழூஉப்பல்'' என்பதில் காணப்படும் உகரம் வருதல் பற்றிப்

பேசுவது இது. இதுபோன்றே அளபெடைகளில் காணப்படும் குற்றெழுத்துக்கள் நெட்டெழுத்துக்களின் நீட்டங்களால் வருவ-தல்ல என்பதைத் திட்டவட்டமாகப் பலநூற்பாக்களில் மீண்டும் மீண்டும் கூறிநிற்பார்.

''நிற்றல் வேண்டும் உகரக்கிளவி'' (268) (உடூஉக்குறை)
''ஏயென் இறுதிக்கு எகரம் வருமே'' (278)
''ஒகரம் வருதல் ஆவயினான்'' (293)

போன்ற நூற்பாக்கள் இப்பண்பைக் காட்டி நிற்கின்றன

குற்றெழுத்துக்கள் சொற்களின் இறுதியில் வருவதும் அளபெடைச் சொற்களில் நெட்டெழுத்துக்குப் பின்னர் வரும்-குற்றெழுத்துக்கள் வருவதும் நெட்டெழுத்துக்கள் அளபெடை-யாக உச்சரிக்கப்படுவதால் அன்று. அவற்றை ஒத்த குற்றெழுத்-துக்களைப் பிளவுபடாமல் இணைத்து உச்சரிப்பதால்தான் என்-பதை மிகத் தெளிவாகத் தெளிவுபடுத்துகிறார் அவர்.

எகர ஒகரம் இறுதியில் வராது என்பது மெய்யுடன் இணைந்துதான் வராதேயொழியதனியாக நிற்கும் எனக்கூறு-வதும் இங்குக்கவனிக்கத் தக்கது.

"எ என வருமுயிர் மெய்யீறாகாது'' (71)

என்றும் ''ஒவ்வும் அற்றே நவ்வலங்கடையே'' (72) என்றும் கூறுவது ஏ எ, ஓ ஒ, ஆகியவை உயிராக, அளபெடையாக வருவனவற்றை உள்ளத்தில் கொண்டுதான் என்பது உணரற்-பாலது. இதற்கு இளம்பூரணர், நச்சினார்க்கினியர் உதார-ணம் தரவில்லையானாலும் சாஸ்திரி ''ஏஎ கொண்டான்'' என்-பதையும் ''ஓ ஒ கொண்டான்'' என்பதையும் (நூற் 71, 72) தந்து நிற்பார். எனவே உயிர்கள், குற்றெழுத்துக்கள் எல்லாம் இறுதியில் வரும் என்பது புலனாகும். இவ்வாறு வருவதற்குக் காரணம் நெட்டெழுத்துக்களுக்குப் பின்னால் அளபெடையாக எ,ஒ ஆகியவை வரும் என்பதையே காட்டுகின்றது.

இவ்வாறு ஒவ்வொரு இடத்திலும் தன்னுடைய அளபெடைக் கொள்கையைத் திட்டவட்டமாகவும் தெளிவாகவும் மீண்டும் மீண்டும் வாய்ப்புக் கிடைக்கும் போதும், பலவேறு நூற்பாக்களை உருவாக்கியும் கூறுகிறார். இவையனைத்தையும் இணைத்து

ஓரிரு நூற்பாக்களில் கூறவிரும்பியிருந்தால் அவரால் வெற்றி-கரமாகச்செய்திருக்க முடியும். ஆனால் பிறர் பிழைபட உணர்ந்து விட்டதன் காரணமாக, அல்லது உணர்ந்து விடுவார்களோ என்ற எண்ணத்தில் அந்தப்பிழையைப் போக்கு முகத்தான் இவ்வாறு மீண்டும் மீண்டும் கூறியிருப்பார் எனக்கருதலாம்.

இது போன்றே எதிர் மறையாகவும் இந்தக் குற்றெழுத், துக்களின் தோற்றம் பற்றிக் கூறியுள்ளார். 224, 227 ஆகிய இரு நூற்பாக்களிலும் ''மெய்ம்மையாக அகரம் மிகுமே'' (224) என்றும் ''அறியத் தோன்றும் அகரக் கிளவி'' (227) என்றும் கூறியதை அடுத்து இரா என்ற சொல்லைப் பற்றிக் கூறும் போது (இராக் கொண்டான்)

''இராவென் கிளவிக்கு அகரம் இல்லை'' (228)

என அகரம் இல்லை என அகரத்தைக் கொண்டு வருவது உணரத் தக்கது. அது இயல்பாக வரும் எனக் கூறாமல் இவ்வாறு கூறுவது அவரது உள்ளப் பாங்கைக் காட்டும்.

### பிற்கால மரபு இலக்கணங்கள்

இவ்வாறு பலபடக் கூறியும் கூடப் பின்னர் வந்த இலக்-கணவாசிரியர்கள் அளபெடையைப் புலுதத்தினுடன் இணைத்து நிற்பது காணலாம். வீரசோழிய ஆசிரியர் 'மூன்றளபு' (நூற். 5) எனக் கூறுவார். இதற்கு உரை எழுதியவர் ''உயிரளபெடையானது மூன்று மாத்திரை பெறும்'' எனக் கூறுவார். நேமி நாதம் ''மூன்றளவு'' (நூற். 5) எனக் கூறும். நன்னூலார் (91)

''இசை கெடின் மொழிமுதல் இடை கடை நிலை நெடில்
அளபெழும் அவற்றவற்றினக் குறில் குறியே''

எனக் கூறுவது காண்க. ''நெடில் அளபெழும்'' என அழுத்-தம் திருத்தமாகக் கூறுவார் இவர். குற்றெழுத்து வருவது அளபெடுத்ததைக் காட்டுவதற்காக உள்ள குறியே என்பது நன்னூ-லின் கருத்து. தொல்காப்பியத்தில் வரும் 'எழூஉதல்' என்பதற்கு எழுதுதல் என்று பொருள் கொண்டு விட்டார் போலும்! மேலும் இவர் ''மூன்றுயிரளபு'' என (நூற். 99) வீரசோழியம், நேமி-

நளதம் ஆகியவற்றை யொட்டிக் கூறி நிற்பதும் கவனிக்கத் தக்கது. இதே கருத்தினைத்தான் பிற இலக்கண நூல்களும் கொண்டுள்ளன. மூத்துவீரிய ஆசிரியர் ஒருபடிமேலே சென்று

''அளபும் புலுதமு மளபெடைப் பெயரே'' (33)

எனக் கூறுவார். எனவே இவர்கள் தமிழில் காணப்படும் அளபெடை புலுதம் போன்றதே எனக் கருதியுள்ளமை புலப்படும். இதற்குக் காரணம் வடமொழியின் செல்வாக்கும் தொல்காப்பியத்தைப் பிறழ உணர்ந்த நிலையும் தான் எனக் கூறலாம்.

## ஒரு மொழியிலக்கணத்தில் இன மொழி பற்றிய சிந்தனை

ஒரு மொழியின் இலக்கணம் உருவாகும் போது[1] இவ்வாறு இன்னொரு மொழியின் அமைப்பு அல்லது அதன் இலக்கணக் கூறுகளை மனதில் கொண்டு பேசுதல் உண்டா?[2] அது பொருந்துமா? என்ற கேள்வி எழுவது இயற்கையே. இந்நிலையில் தமிழ் மொழியின் இலக்கணம் பற்றி அல்லது அதன் அமைப்பு பற்றிக் கூறும்போது சமஸ்கிருத மொழியை உள்ளத்தில் கொள்ளுவது பொருந்துமா எனவும் எண்ணிப் பார்த்தல் வேண்டும். இது அந்த ஆசிரியன் எதற்காக அந்த இலக்கணத்தைப் படைக்கிறான் என்பதைப் பொறுத்தே அமைந்திருக்கும்.

பல வகையான இலக்கணங்கள் உண்டு என்பதும் நினைவு கூரத் தக்கது. இன்றைய மொழியியல் வளர்ச்சியில் இதுபற்றி ஏராளமான எண்ணங்கள் எழுந்திருப்பதைக் காணலாம். இலக்கணம் என்ற பொதுத் தலைப்பில் பலவகை இலக்கணங்கள் உள்ளன என்பது நினைவு கூரத்தக்கது. இருமொழிய இலக்கணம் (bilingual grammar) முதல் உலகப் பொது விலக்கணம் ஈறாக 40 வகை இலக்கணங்கள் உள்ளன (K. Rangan and G. Chandrasekaran, 1994, 81— 83). இந்த எண்ணிக்கை எல்லாவகை இலக்கணங்களையும் உள்ளடக்கியது எனக் கூறமுடியாது. அமைப்பு இலக்கணம் (Structural grammar), வரலாற்று இலக்கணம் போன்றவை இதில் இடம் பெறவில்லை.

தான் எழுதும் இலக்கணம் எத்தகையது, எதற்காக எழுதப் படுகின்றது. யாருக்காக எழுதப்படுகிறது, எந்தச்சூழலில் எழுதப் படுகின்றது. எழுதத் தூண்டிய முதல்காரணம் என்ன? என்பன

போன்ற வினாக்களின் விடையில்தான் இலக்கணங்களின்போக்கு அமைந்துகிடக்கும். ஒரு மொழியின் இலக்கணத்தை எழுதும் போது இன்னொரு மொழியின் அமைப்புஆசிரியனின் உள்ளத்தில் ஏன் எழவேண்டும் என எண்ணுதலும் வேண்டும். உண்மையில் இவ்வாறு பிறமொழி அல்லது சமஸ்கிருத மொழியமைப்பு பற்றித் தொல்காப்பியர் சிந்தித்தாரா? என்ற கேள்வியை எழுப்பி நிற்கிறார் சாஸ்திரி. நம்மைப் போலவே அவரும் தொல் காப்பியர் நிச்சயம் சிந்தித்துள்ளார் எனவே கருதுகிறார். மூவள பிசைத்த லோரெழுத்தின்றே'' (5) என்ற நூற்பா பற்றி முன்-னுரையாக (மு.பக் 12-13),

''அகரம் முதல் னகரம் இறுதியாக உள்ளவற்றுள் சில ஓரளபிசைக்கும், சில ஈரளபிசைக்குமென்று கூறியபின்னர், அவற்றுள் மூவளபிசைக்கும் எழுத்து முளவோ வென ஐயந்-தோன்ற, அவ்வையத்தைப்போக்கத் தொடங்கினர். அவ்வைய மெவ்வாறு தோன்றுமெனின், வடமொழியில் மூவளபிசைக்கும் ப்லுதாட்சரங்கள் இருத்தலால், அதனையுணர்ந்தோர்க்குத் தோன்றலாமன்றே, தமிழ்மொழியிலக்கணங் கூறத் தொடங்கிய ஆசிரியர் வடமொழியிலக்கணத்தை நினைப்பரோவெனின் அவற் றையும் நினைத்திருத்தனரென்பது

''எல்லா வெழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி யெழுதரு வளியிற்
பிறப்பொடு விடுவழி யுறழ்ச்சி வாரத்
தகத்தெழு வளியிசை யரிறப நாடி
யளவிற் கோடலந்தணர் மறைத்தே''. (102)

என்ற நூற்பாவால் விளங்கும்'' என்பார் அவர். தொல்காப்-பியர் வட மொழியிலக்கணத்தையும் மொழியையும் நினைத் திருந்தார் எனக் கூறுவார்.

இந்நிலையில் தொல்காப்பியர் உள்ளத்தில் எப்போதும் இந்த எண்ணம் இருந்தது என்பதற்கு இது இன்னொரு சான்-றும் ஆகும். இருவகை மொழியமைப்பும் வேறு வேறு என்-பதையும் இச்சூத்திரத்தில் காட்டி நிற்பார். சமஸ்கிருத மொழி யில் இசைக்குணம் (tone) உரத்தல் (stress) ஒலியேற்றம் (intonation) ஆகியவற்றை மறையோதும் போது காணலாம்.

ஆனால் தமிழ் மொழியில் அப்பண்பு இல்லை. அதனால் அது பற்றித் தொல்காப்பியம் கூறவில்லை புறத்தே உண்டாக்கப்படும் அளவு வேறுபாடு பற்றியே கூறப்படுகின்றது எனக் கூறுவார் அவர் (முருகையன், 1972,48-49). எனவே தொல்காப்பியர் தன்னுடைய இலக்கணத்தை எழுதும்போது சமஸ்கிருத மொழி பற்றிய சிந்தனையை உள்ளத்தில் கொண்டிருந்தவர் என்பது சந்தேகத்திற்கிடமில்லாத ஒன்று. இது எழுத்ததிகாரத்தில் மட்டுமல்லாமல் எல்லா அதிகாரங்களிலும் காணக்கிடக்கின்ற ஒரு நிலையேயாகும்.

இனி அவ்வாறு பிறமொழிகளைப்பற்றி, அல்லது அவற்றின் அமைப்புபற்றி இன்னொரு மொழி இலக்கணங்களில் கூறுவது பொருந்துமா என்பது பற்றியும் ஆராய்தல் வேண்டும். முன்னர்க்கூறியது போன்று இது எதற்காக அவ்விலக்கணம் எழுதப்படுகின்றது என்பதைப் பொறுத்தே முடிவு செய்யப்படும். ஒரு ஆசிரியன் ஒரு மொழியின் அமைப்பினை, அவ்வமைப்பு எவ்வாறு உள்ளது என்பதை மட்டும் விளக்க விரும்புவானாயின் பிறமொழி அமைப்பு பற்றிச் சூசகமாகக் கூடக் கூற வேண்டியதில்லை. அதாவது ஒரு மொழியின் அமைப்பை அம்மொழி மக்கள் அல்லது பிறர் புரிந்து கொள்ளுவதற்காக எழுதப்படும் போது இந்நிலையே சிறந்தது. இன்றைய மொழியியலாளர் எழுதும் இலக்கணங்கள் அவ்வாறே அமைந்திருக்கும். எடுத்துக்காட்டாக இக்கட்டுரை ஆசிரியர் எழுதியுள்ள தமிழ்த்தொடரியல் இலக்கணம்(A GenerativeGrammar, A Pragment of Tamil Syntax, 1967) பொற்கோ எழுதிய A Grammar of Contemporary Literary Tamil, (1967) போன்ற இலக்கணங்கள் இத்தகையனவே. இவ்விலக்கணங்களில் பிற மொழிகள் பற்றிய விதிகளோ, அல்லது சூசகமான சில எண்ணங்களின் பிரதிபலிப்போ இருப்பதில்லை. முழுக்க முழுக்கத் தமிழ்மொழியின் பலவேறு அமைப்புகள் பற்றியே குறிப்பிடப்பட்டிருக்கும். இத்தகைய இலக்கணங்களின் நோக்கம் புதிய மொழியியல் கோட்பாடுகள் வரும்போது அக்கோட்பாடுகளை அடிப்படையாக வைத்து ஒரு மொழியின் அமைப்பைச் சிறப்பாக, முன்னர்க் கூறப்பட்டதைவிடச் செம்மையாகக் கூறவேண்டும் என்பதுதான். இலை மறை காயாகக் கிடக்கும் சில அமைப்பு உண்மைகளைத் தெளிவாகவும் காரண காரியங்களுடனும் கூர்மையான கருவி, கொள்கைகளின் அடிப்-

படையிலும் விளக்குவதும் புதிய புதிய விளக்கங்களைத் தருவதும் தான். இது போன்றே மொழியில் காணக்கிடக்கும் மாற்றங்களும் அவை புதியவை என்ற எண்ணமேயின்றி, அல்லது கூறப்படாமல் விளக்கப்படும். இந்நிலையில் இவை வேறுமொழிகளைச் சிறிய அளவில் கூடச்சிந்தனையில் பதிய வைத்து அவைபற்றிக் கூறுவதில்லை.

ஆனால் தொல்காப்பியம் அத்தகைய நிலையிலிருந்து சிறிது மாறிய நிலையில் உள்ளது. அன்றையத் தமிழ்மொழியின் அமைப்பை மிகச் செம்மையாகவும் நுட்பமாகவும் கூறுகின்ற ஒரு இலக்கணமாக இருந்தாலும் இதனுடைய நோக்கம் சிறிது மாறுபட்டது எனக்கருதலாம்.

சமஸ்கிருத மொழியின் செல்வாக்கு உடையகாலம் தொல்காப்பியர் காலம். அம்மொழி இந்திய மொழிகளுக்கு எல்லாம் தாய் என்று கருதப்பட்டும் இருக்கலாம். கி. பி. 19, 20 ஆம் நூற்றாண்டுகளில்கூடத் திராவிட மொழிகள் ஆரிய மொழிகளுடன் இனத்தொடர்பு கொண்டுள்ளவை எனப்பல அறிஞர்கள் கூறியுள்ளமை ஈண்டு நினைவு கூரத்தக்கது. கால்டுவெல் திராவிட மொழிகள் ஆரிய மொழிகளிலிருந்து வேறுபட்டவை என்று தெள்ளத் தெளிய விளக்கியபின்னரும் போப், சேஷகிரிசாஸ்திரி. ஞானப்பிரகாசர் போன்றவர்கள் இத்தகைய எண்ணத்தைக் கொண்டிருந்தனர் என்பதும் இங்குச்சுட்டிக்காட்டப்படவேண்டியதாகும் (அகத்தியலிங்கம் 1995, 4-67). ஏதாவது சில இலக்கணக் கூறுகள் இருமொழிகளிலும் காணப்பட்டால் அவை சமஸ்கிருத மொழியிலிருந்து வந்தவை என்று எண்ணப்பட்டிருந்த காலம் அது. அளபெடை யென்பது வேறு புலுத்தம் என்பது வேறு ஆக இருந்தாலும் சமஸ்கிருத மொழியிலிருந்து வந்தது. அல்லது அதை ஒத்தது இது என்று எண்ணப்பட்ட காலம் அது. இந்நிலையில்தான் தொல்காப்பியர் தம்முடைய நூலை எழுதினார். அதனால்தான் சமஸ்கிருத மொழி அமைப்பு அவருடைய உள்ளத்தில் நிழலாடிக்கொண்டிருந்தது. அதுவேறு அமைப்புடையது. தமிழ் வேறு அமைப்புடையது என்பது தொல்காப்பியர் தெரிந்து கொண்ட ஒன்று. அதைக் கூறவும் விரும்பினார். ஆனால் அதே நேரத்தில் ஒரு மொழி இலக்கணத்தில் இன்னொரு மொழி இலக்கணம் பற்றியோ பண்புகள்

பற்றியோ அதிகமாகக் கூறக்கூடாது என்பதையும் அறிந்திருந்தார். இந்நிலையில்தான் சமஸ்கிருத மொழியின் இலக்கணக்கூறுகளுக்கும் ஒலிகளுக்கும் முக்கியத்துவம் கொடுத்து, ஆனால் அதே நேரத்தில் சிறந்த இலக்கணம் ஒன்றையும் படைத்து நின்றார். இத்தகைய முக்கியத்துவம் கொடுத்திருப்பதும் அதனால் வைப்பு முறைகளை மாற்றியிருப்பதும் இதுவரையிலும் அதிகமாகக் கவனிக்கப்படாமல் இருப்பதே அவருடைய இத்தகைய இலக்கணம் எழுதும் ஆற்றலைக்காட்டி நிற்கும்.

இவ்வாறு உள்ள நிலையில் எழுதப்படுகின்ற பிற இலக்கண நூல்களைக் கவனித்தால் இது நன்கு விளங்கும். மலையாள மொழியின் முதல் இலக்கணம் லீலாதிலகம். மலையாள மொழியை மட்டும் குறிப்பிடாமல் தமிழ், தெலுங்கு, கன்னடம், வடமொழி ஆகிய மொழிகளைப் பற்றி அதிகமாகக் கூறிச்செல்லுவதும் (சண்முகம் 1992,28-30, 42-115) காணத்தக்கது. லீலாதிலகம் மலையாள மொழியமைப்பைக் கூறுவதைக்காட்டிலும் பிறமொழிகள் பற்றியே அதிகமாகப் பேசுவது போன்று தோன்றுகின்றது. இதுபற்றி நுண்மையாக ஆராய்ந்தால் இன்னும் பல உண்மைகள் விளங்கும். ஒரு மொழியுடன் உறவாடும் பிற மொழிகளின் நிலையைப் பேசுவது சில நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டது என்பது தெரிய வரும். மலையாளம் ஒரு தனி மொழி என்பதைக் காட்டவே இத்தகைய நிலைக்கு ஆளாகிறார் அவர். அதன் அமைப்பைக் கூறுவதை விட பிறமொழிகளிலிருந்து மாறுபட்டது என்பதைக் காட்டுவதே அவருடைய தலையாய நோக்கம்! காரணம் தனிமொழி அந்தஸ்துக்காக ஏங்கி நின்ற காலம் அது

தொல்காப்பியத்தின் நோக்கம் இருமொழி அமைப்புகளும் வேறு என்பதை நிலை நாட்டுவதாக இருந்தாலும் தமிழ் மொழியின் அமைப்பை மையமாகக் கொண்டே அதைக்காட்டி நிற்கின்றது. சில வைப்புமுறைகள், சில ஒலிகள், இலக்கணக் கூறுகளுக்குக் கொடுக்கும் முன்னுரிமைகள், சிலவற்றை அடித்துக் கூறும் பாங்கு ஆகியவற்றை வைத்தே இதைச் சாதித்துக் கொள்ளுகின்றது தொல்காப்பியம். எனவேதான் ஒரு அமைப்பியல் அல்லது வருணனை இலக்கணமாகவே அது கருதப்படுகின்றது.

தனிமொழி அந்தஸ்துக்காக ஏங்கி நிற்கும் நிலைக்கும், உயர்மொழி அந்தஸ்துக்காக எழுதப்படும் நிலைக்கும் சமநிலையில் நின்று எழுதப்படும் நிலைக்கும் இடையே வேற்றுமை உண்டு. தொல்காப்பியம் சமநிலையில் நின்று எழுதப்பட்ட ஒரு இலக்கண நூலாகும். தன்னம்பிக்கையோடு தமிழின் அமைப்பைக் கூறி ஆனால் அதேநேரத்தில் சில தவறான எண்ணங்களைப்போக்கும் நிலையில் உருவான இலக்கண நூல் அது.

மேலும் அது ஒருங்கிணைந்த கொள்கையை உள்ளத்தே கொண்டு உருவாக்கப்பட்ட நூல். நிலைமொழி, கிளைமொழி, செய்யுள்மொழி என்ற எண்ணங்களை உள்ளத்தே நிறுத்தி ஆக்கப்பட்ட நூல் அது என்றால் மிகையாகாது. கிளைமொழிக் கூறுகள் ஆங்காங்கே சிந்திக்கிடப்பினும் நிலைமொழி என்று கருதப்பட்ட செந்தமிழ் மொழிக்கு வழக்கு நடையையும் செய்யுள் நடையையும் உள்ளத்தே கொண்டு ஆக்கப்பட்ட நூல் (அகத்தியலிங்கம் 1997 a). வழக்கு ஆயினும் செய்யுள் அல்லது இலக்கியமாயினும் தனியே தமிழுக்கு ஒரு அமைப்பு உண்டு என்ற நிலையில் எழுதப்பட்டதால் தான் மேலே கூறப்பட்டவற்றிற்கு முக்கியத்துவம் கொடுத்து அவற்றை நாசுக்காக வைப்பு முறையை மாற்றி வேண்டிய இடங்களில் வைத்தும், வேறு சில உத்திகளைப் பயன்படுத்தியும் இதனை ஆக்கி நின்றார் தொல்காப்பியர் எனக் கருதலாம். தோற்றத்திலும் ஒரு ஏற்றத்தைக் காட்டி நிற்கும் ஒரு இலக்கணநூல் இது.

## துணைபுரிந்த நூல்கள்


1. ச. அகத்தியலிங்கம், 1995, திராவிட மொழிகள், மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.
2. — "தொல்காப்பிய அதிகாரங்களின் முதல் சூத்திரங்களின் முறைவைப்பின் முக்கியத்துவம்" தமிழ்ப்பல்கலைக்கழகத்தில் 19-11-1996 அன்று பேசிய பேச்சு.
3. — 1997, a " "தொல்காப்பியரின் ஒருங்கிணைந்த பாவியல் கோட்பாடு" தொல்காப்பிய இலக்கியக்கோட்பாடுகள். கருத்தரங்கு, உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை.

4. ச. அகத்தியலிங்கம், ''1997 b (வரவுள்ளது) சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே, மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.

5. க. இராசாராம், 1992, வீரசோழிய இலக்கணக் கோட்பாடு, நாகர்கோவில்.

6. செ. வை. சண்முகம், 1980, எழுத்திலக்கணக் கோட்பாடு, அண்ணாமலை நகர்.

7. — ''1992 மலையாள மொழியின் முதல் இலக்கணம், அண்ணாமலை நகர்.

8. சிவகோடன முனிவர், முதற்சூத்திரவிருத்தி, இலக்கணக் கொத்துடன் இணைக்கப்பட்டது, சிதம்பரம், 1952.

9. P.S. சுப்பிரமணிய சாஸ்திரி, 1930, சொல்லதிகாரக் குறிப்பு சென்னை.

10. — ''1937, தொல்காப்பியம் - எழுத்ததிகாரம், குறிப்புரையுடன், திருச்சி.

11. ச.வே சுப்பிரமணியன், ஆய்தம் பற்றிய விளக்கம், தொல்காப்பிய உரைவளம் எழுத்ததிகாரம், மொழிமரபு, பதிப்பு, சிவலிங்கனார். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1981.

12. க. திலகவதி, 1995, எழுத்தியலும் சொல்லியலும், கோலாலம்பூர்.

13. க. முருகையன். 1972, ''தொல்காப்பியரின் ஒலியியல் கொள்கை'' தொல்காப்பிய மொழியியல், பதிப்பர், ச. அகத்தியலிங்கம் க முருகையன், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

14. க. வெள்ளைவாரணன். 1962. தொல்காப்பியம் நன்னூல், எழுத்ததிகாரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

15. தொல்காப்பிய உரைவளம் நூன்மரபு (1980), மொழிமரபு (1981) பதிப்பு ஆ. சிவலிங்கனார், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

16. தொல்காப்பியம், எழுத்ததிகாரம், இளம்பூரணம், கழகம். சென்னை – 1972.

1 . தொல்காப்பியம் எழுத்ததிகாரம், நச்சினார்க்கினியம், கழகம் சென்னை, 1966.

18. வீரசோழியம், கழகம், சென்னை, 1970.

19. நேமிநாதம், கழகம், சென்னை, 1973.

20. நன்னூல், விருத்தியுரை, சங்கர நமச்சிவாயர், கழகம், சென்னை, 1974.

21. நன்னூல், காண்டிகையுரை, ஆறுமுக நாவலர். சென்னை 1968.

22. முத்து வீரியம், கழகம், சென்னை, 1972.

23. இலக்கணக் கொத்து, சென்னை, 1952.

24. சாமிநாதம், பதிப்பர், செ.வை. சண்முகம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், 1976.

25. S. Agesthialingom, 1967, A GENERATIVE GRAMMAR OF TAMIL A FRAGMENT OF TAMIL SYNTAX Annamalai University, Annamalai Nagar.

26. — "A GRAMMAR OF OLD TAMIL WITH SPECIAL REFERENCE TO PATIRRUPPATTU Annamalai university, Annamalainagar, 1979.

27. Pon Kothandaraman, 1997, A GRAMMAR OF CONTEMPORARY LITERARY TAMIL, IITS, Madras.

28. S.V. Subramanian, 1972, GRAMMAR OF AKANAANUURU with Index, Kerala University, Trivandrum.

29. K. Rangan & U. Chandrasekaran, 1994, A GLOSSORY OF STANDARDIZED TECHNICAL TERMS IN LINGUISTICS English and Tamil, Tamil university, Thanjavur.

# இலக்கண ஆய்வு

செ. வை. சண்முகம்

2

## 1. இலக்கண ஆய்வு

இலக்கண ஆய்வு என்பது இன்று இரண்டு பொருள்களில் வழங்கப்படுகிறது. அவையாவன :

### i) மொழியின் அமைப்பை ஆராய்வது

இதுவே இன்று மொழியியல் என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்படுகிறது. இருபதாம் நூற்றாண்டுக்கு முன்னர் இலக்கண ஆய்வு மொழி அமைப்பு ஆய்வாகக் கருதப்பட்டது. அதற்குக் காரணம் மொழி ஆய்வு என்பதே, மொழி அமைப்பு என்று மட்டுமே கருதப்பட்டு, தனிமொழிக்கு இலக்கணம் எழுதுவதே தலையாய பணியாகக் கருதப்பட்டது. மொழியின் பொதுப் பண்புகள், மொழி அமைப்பின் பொதுப் பண்புகள், மொழி மாற்றம், மொழிக்கும் பிற துறைகளுக்குமுள்ள தொடர்பு ஆகியவைகளைத் தீவிரமாக ஆராய்ந்து தனி ஆய்வுத் துறையாக இது ஆக்கப்படவில்லை,

ii) ஒரு மொழியில் எழுதப்பட்ட இலக்கண நூல்களை ஆராய்வது

இது இன்று 'இலக்கணவியல்' என்ற சிறப்புப்பெயராலும் குறிப்பிடப்படுகிறது (சண்முகம், 1994). உலகளாவிய நிலையில் மொழி அமைப்பையும், மொழியின் பண்புகளையும் ஆராய்கிற மொழி ஆய்வு Lingistics - மொழியியல் என்று வழங்கப்படுவதாலும் பல மொழிகளுக்கு முன்னரே இலக்கணங்கள் இருப்பதாலும் இலக்கண ஆய்வு என்பதைக் குறுகிய புதுப்பொருளில் கையாளலாம் என்று கருதியே இரண்டாவது பொருள் கொடுக்கப்பட்டுள்ளது.

இந்தக் கட்டுரை இரண்டாவது பொருளை ஏற்றுக்கொண்டு அதன் அடிப்படையிலேயே எழுதப்பட்டுள்ளது.

## 2. பரிமாணங்கள்

இன்று இலக்கணஆய்வு பல நோக்கிலும் பரவலாகவும் விரிவாகவும் செய்யப்படுவதாலும் பல வகையான இலக்கண நூல்களிலிருந்து பலகாலமாக ஆராயப்பட்டு வருவதாலும் தமிழில் பல வகையான நோக்கீட்டு (Reference) நூல்கள் வெளிவந்துள்ளது சிறப்பாகக் குறிப்பிடத் தகுந்தது. இதுவே இலக்கண ஆய்வு பன்முக நோக்கு உடையது என்பதைப் புலப்படுத்துகிறது. எனவே முதலில் இலக்கண ஆய்வு தொடர்பாக எழுந்துள்ள நோக்கீட்டு நூல்களைப் பார்ப்போம்.

## 2.1. நோக்கீட்டு நூல்கள்

நோக்கீட்டு நூல்களில் அடிப்படையானது இலக்கண வரலாற்று நூல்கள். இவைகளே தமிழில் எழுந்துள்ள எல்லா இலக்கண நூல்களையும் தொகுத்து அவைகளின் வரலாற்றையும் பொருளையும் உள்ளடக்கத்தையும் தருகின்றன.

தமிழில் இலக்கண வரலாற்றைக் குறிப்பிட்ட பெருமை இத்தாலி நாட்டு பெஸ்கி என்ற வீரமாமுனிவரையே (1680 - 1742) சாரும் அவரே தன்னுடைய 'செந்தமிழ் இலக்கணம்' என்ற லத்தீன் மொழி நூலில் (1730) தமிழில் கிடைக்கும்

இலக்கண நூல்களின் வரலாற்றை மிகச் சுருக்கமாகக் குறிப்பிட்டுள்ளார். (சண்முகம், 1993 : 105)

இலக்கண வரலாறு என்ற தலைப்பில் இதுவரை இரண்டு நூல்கள் (இளவரசு, 1963, இளங்குமரன், 1965) வெளிவந்துள்ளன. அவை இரண்டுமே புற வரலாற்றையே விளக்குகின்றன. ஆராய்ச்சியால் பெற்ற தெளிவுகளைக் கோடிட்டுக் கூடக் காட்டவில்லை மேலும் மொழியின் சொற்களஞ்சியத்தை ஆராயும் 'நிகண்டு' நூல்களின் வரலாறு இரண்டிலும் சேர்க்கப்படவில்லை. எனவே அவை தனி நூல்களாகவே வெளிவந்துள்ளன (சுந்தர சண்முகனார், 1965, ஜெயதேவன், 1985) இந்த நூல்கள் தமிழில் இலக்கணம் என்பது எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி, பாட்டியல், நிகண்டு என்ற ஏழு பகுதிகளை உடையது என்பதைத் தெளிவுபடுத்துகிறது. தமிழுக்கு மேனாட்டார் பிற மொழியில் குறிப்பாக ஐரோப்பிய மொழிகளில் எழுதிய பல இலக்கணங்கள் பதினேழாம் நூற்றாண்டுகளில் உண்டு (இன்னாசி, 1990). இவை நம்முடைய மரபிலக்கணங்கள் நூறாத - குறிப்பிடாத பல மொழி - அமைப்பு உண்மைகளை விளக்குகின்றன. எனவே அவையும் இலக்கண வரலாற்றில் சேர்த்துக் கொள்ளப்படவேண்டும் (சண்முகம், 1993).

தமிழில் ஒவ்வொரு இலக்கணப் பகுதியைப் பற்றியும் பல நூல்கள் இருப்பதால் ஒவ்வொரு இலக்கண் நூறுகள் பற்றிய கருத்துக்களைத் தொகுத்து 'இலக்கணத் தொகை' என்ற பொதுத்தலைப்பில் எழுத்து, சொல் பற்றிய தனிநூல்களைச் சுப்பிரமணியன் (ச. வே. சுப்பிரமணியன், 1967, 1971) வெளியிட்டுள்ளார். இலக்கணத் தொகை எழுத்து என்ற நூலின் ஆசியுரையில் மீனாட்சிசுந்தரனார் குறிப்பிட்டபடி இலக்கண நூல்களின் இடையே ஒற்றுமை, வேற்றுமை அறிவதற்கு இவை பயன்படும். இந்த மாறுபாடுகளுக்கு உரிய காரணம் வரலாற்றின் வழியே விளங்கலாம். பல இலக்கணக் கொள்கைகளை வேற்றுமைகளின் வழியே நாம் காணலாம். அதாவது மொழி வரலாற்று ஆய்வு, கோட்பாட்டு வரலாற்று ஆய்வு இரண்டுக்கும் இந்த நூல்கள் வழிகாட்டுவன. இந்த நூல்களில் செம்மை செய்ய இடம் இருக்கிறது என்பது முன்னரே சுட்டிக் காட்டப்பட்டுள்ளது [சண்முகம், 1980 : 281]. எனவே இந்த நூல்களின் திருந்திய பதிப்புகள் வெளிக்கொணரப்படவேண்டும்.

ஒரு நூலுக்கே பல உரைகள் உள்ளன. அவைகளை ஒருங்கு சேர்த்துப் படிப்பதற்கும் ஆய்வதற்கும் வசதியாக முதன் முதலில் சொல்லதிகார நான்கு இயலுக்கு ஆபிரகாம் அருளப்பனும், வி. ஐ. சுப்பிரமணியனும் இணைந்து சொல்லதிகார உரைக்கோவை (1963) வெளியிட்டுள்ளார்கள். உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் ஆ. சிவலிங்கனாரைப் பதிப்பாசிரியராகக் கொண்டு எழுத்ததிகார, சொல்லதிகார இயல்கள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனி நூலாக உரைவளம் 1980 களிலிருந்து 18 தொகுதிகள் வெளியிட்டுள்ளது. அவைகளில் சமீபகால ஆய்வுக் கருத்துக்கள் முழுமையாகத் தொகுக்கப்படவில்லை. ஓர் சீர்மை பின்பற்றப்படவில்லை. இருந்தாலும் அவையும் ஆராய்ச்சிக்கும் இலக்கியக்கல்விக்கும் பயன்படுபவையே. மறுபதிப்பு கொண்டு வரும்போது செம்மைப்படுத்தி வெளியிட வேண்டும். இந்தப் பதிப்புகள் இலக்கணக்கல்வியின் பழங்கால வரலாற்றையும் கல்வியில் ஏற்பட்ட முன்னேற்றத்தையும் புலப்படுத்தும்.

அண்ணாமலைப்பல்கலைக்கழகம் எழுத்து, சொல் பற்றிய ஆய்வடங்கல் நூலை (பட்டாபிராமன். 1992) முதல் பகுதியாக வெளியிட்டுள்ளது. இதில் 1985 வரை வெளிவந்த கட்டுரைகள் மட்டுமே தொகுக்கப்பட்டுள்ளன. எனவே ஏனைய பகுதிகள் வெளிவந்தால்தான் இலக்கண ஆய்வின் முழுப்பரிமாணமும் அறிந்து கொள்ள முடியும். இந்தநிலை இருபதாம் நூற்றாண்டு ஆய்வின் பரப்பை ஓரளவே புலப்படுத்துகிறது.

ஆங்கிலத்தில் வெளிவந்துள்ள தமிழ் மொழியியல் ஆய்வடங்கலில் (Ramaiah, 1995) பல இலக்கணக்கட்டுரைகளும் நூல்களும் தொகுக்கப்பட்டுள்ளன.

தனிப்பட்ட நூல்களின் ஆய்வு வரலாறும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இந்தத்துறையில் தொல்காப்பிய ஆய்வின் வரலாறு (கிருட்டிணமூர்த்தி, 1990) சிறப்பாகக் குறிப்பிடத்தகுந்தது.

இலக்கணக் கொள்கைகளைச் சரியாகப் புரிந்து கொள்ள இலக்கண ஆசிரியர்கள் கலைச்சொற்களின் தொகுப்பு உதவியாக இருக்கும். பொற்கோவின் இலக்கணக் கலைக்களஞ்சியம்(1985) கலைச் சொற்களைத் தொகுத்து அவைகளுக்கான விளக்கத்தையும் தருகிறது. அதே முறையில் உரையாசிரியர்களின் உரை-

களில் காணப்படும் இலக்கணக் கலைச் சொல் விளக்கங்களும் தொகுக்கப்பட்டுள்ளன (இளங்குமரன், 1985, கிருட்டிணமூர்த்தி 1985). எனவே, இலக்கண ஆராய்ச்சிக்குப் பல நோக்கீட்டு நூல்கள் வந்துள்ளது பயன் உடையது. இன்னும் முக்கியமாக வரவேண்டியது தொல்காப்பிய அகராதியே (Word Index).

## 2 : 2 ஆய்வின் பிறபரிமாணங்கள்

இலக்கண ஆய்வுப் பரிமாணங்கள் பற்றி முன்னரே கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளது (சண்முகம், 1994 : 20 - 1). இங்கு அவை நான்கு பெரும் பிரிவுகளில் அடக்கப்பட்டுள்ளன. அவையாவன : i) நூல் பதிப்பும் மூலபாட ஆய்வும், ii) மறு வருணனை ஆய்வு - மொழி அமைப்பு மறுவருணனை. iii) இலக்கணக் கோட்பாட்டு ஆய்வு. iv) ஒப்பீட்டு ஆய்வு (அ) தமிழ் இலக்கணங்களுக்குள் ஒப்பீடு. (ஆ) தமிழ் பிற இலக்கணங்கள் (a) வட மொழி, (b) பிற திராவிட மொழி இலக்கணங்கள், (c) உலக அளவில் முக்கியமான இலக்கணங்கள். (இ) இலக்கண மொழி ஒப்பீடு (தமிழ் இலக்கணம், பிற திராவிட மொழி-கள்). இவைகள் பற்றிச் சுருக்கமாகவே காண்போம்.

## 3. நூல் பதிப்பும் மூலபாட ஆய்வும்

பழைய இலக்கண நூல்களின் சுவடிகள் கண்டுபிடிக்கப்-பட்டுச் சில இலக்கண நூல்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன. 1975 இல் ‘சுவாமி நாதம்’ என்ற ஐந்திலக்கண நூலை அண்ணாமலைப் பல்கலைக் கழகமும்; 1989 இல் இலக்கணச் சூடாமணி என்ற நூலை தமிழ்ப்பல்கலைக்கழகமும் (கிருட்டிணமூர்த்தி, 1989) வெளியிட்டுள்ளன. முழு நூலாகக் கிடைக்காமல் உரைகளில் மேற்கோள்காட்டப்பட்ட அபிநயம், காக்கைப்பாடினியம் போன்ற நூல்களும் தனி நூல்களாகத் தொகுத்து வெளியிடப்-பட்டுள்ளதும் இலக்கண ஆராய்ச்சிக்குப் பெரிய அளவில் உதவு வனவே.

முன்னரே பதிப்பிக்கப்பட்ட நூல்கள் திருந்திய பதிப்புக்கும் மூலபாட ஆய்வுக்கும் வழிவகுத்துள்ளன. அடிகளாசிரியரின் இளம்பூரணரின் செல்லதிகாரப் பதிப்பு, சுந்தரமூர்த்தியின் தொல் காப்பிய உரைப் பதிப்புகள் முதலியவை குறிப்பிடத் தகுந்தவை.

1994-இல் (பொள்ளாச்சி) டாக்டர். நா. மகாலிங்கத்தைப் பதிப்பாசிரியராகவும், இராமலிங்கம், பகீரதன் ஆகிய இருவரையும் ஆராய்ச்சியாளர்களாகவும் கொண்டு இராமலிங்கர் பணிமன்றம் தொல்காப்பியத்தை இரண்டு தொகுதிகளாக வெளியிட்டுள்ளது.இந்தப் பதிப்பின் வெளியீட்டை ஒட்டித் திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழகம் அந்த நூலை ஒரு கருத்தரங்கில் வைத்து விவாதித்துக் கட்டுரைத் தொகுப்பை வெளியிட்டுள்ளது. இதில் உள்ள 14 கட்டுரைகளில் ஒரு கட்டுரை தவிர ஏனையவை இந்தப்பதிப்பைக் கண்டனம் செய்துள்ளன. உதாரணத்துக்குச் சில.

கோபாலையர் (ப.6) : 'நூற்பாக்களை இணைத்தமை தொல்காப்பிய நெறிக்கே முரணானது. (சூத்திரங்களின்) இடமாற்றம் பல இடங்களில் பொருந்துவதாக இல்லை.'

சுந்தரமூர்த்தி(ப.28) : 'இவ்விரு ஆராய்ச்சியாளர்களாலும் திணிக்கப்பட்டிருக்கும் கருத்துக்கள் உடைய ஒன்றைத்தொல்காப்பியம் எனும் புனிதப் பெயரிட்டு அழைப்பது பொருத்தம் இன்றாம்'.

சிவலிங்கனார் (ப.56) : 'ஆராய்ச்சியாளர்களின் தொல்காப்பிய வெளியீடு தமிழுக்குச் செய்யும் தீமையாகும்'.

பரிமணம் (ப. 56) : 'நூலினைத் தொல்காப்பியமாகவும் அதன் ஆய்வு விளக்கமாகவும் ஏற்பதற்கு இல்லை'.

தமிழண்ணல் (ப.70) : 'இப்பதிப்பு நூல்கள் வெளியில் பரவுதல் கூடாது. அருட்செல்வர் அவர்கள், விரைவில் இந்தப் பதிப்பு நூல்களைப் போட்டெரித்துவிட்டு புதிய பொன்னான பதிப்புக்களைக் கொணர்ந்து கழுவாய் தேடவேண்டும்'.

சாரங்கபாணி (ப. 73) : 'இவ்வாய்வாளர்கள் முதனூல் ஒன்றற்கு விளக்கம் தருகிறோம் என்னும் கருத்தின்றித் தாமே நூலாசிரியராகக் கருதிச் சில நூற்பாக்களைப் படைத்துச் சேர்த்துள்ளனர். நூற்பாவை இயல் மாற்றம் செய்துள்ளனர். பல நூற்பாக்களைத் தொகுத்து ஒன்றாக்கியுள்ளனர். வேண்டாத நூற்பாப்பிரிப்பும் தவறான சொற்பிரிப்பும் உள. இக்குறைகள் நீங்கி இந்நூல் வெளிவரின் சிறப்புறும் என்பது உள்ளக்கிடக்கை'.

சுப.அண்ணாமலை (ப. 74):'இப்பதிப்பை ஏற்று வரவேற்க இயலாது. இதனை வரவேற்றால் பழந்தமிழ் நூல்கள் அந்துணையும் வடிவம் மாறி பதிப்பிக்கப்படும்'.

இவைகளுக்கு விளக்கம் தேவையில்லை. இப்போது பதிப்பகத்தாரே இந்நூல் விற்பனையை நிறுத்திவிட்டார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

நன்னூல் சிவஞானமுனிவர் உரை பதிப்புமுறை இப்போது விவாதத்திற்கு உள்ளாகி இருக்கிறது (தாமோதரன், 1995). முனிவருடைய உரை சங்கர நமச்சிவாயர் உரையின் திருத்த உரை. இன்றைய பதிப்புகளில் முனிவர் செய்த திருத்தம் சரியாகப் புலப்படுத்தப்படவில்லை.எனவே அவருடைய திருத்தத்தைத் தெளிவாக வெளிப்படுத்தும்படியான செம்பதிப்பும் முனிவரால் எழுதப்பட்ட விருத்தி உரையும் மூலக்கையேட்டைக் கண்டுபிடிக்கும் முயற்சியும் தேவை என்பது கட்டுரையாளரின் கருத்து (ப. 115).

வீரமாமுனிவரின் தொன்னூல் விளக்க உரையும் சந்தேகத்தை எழுப்பியுள்ளது. மூலநூலின் கருத்தை உரை சரியாக பிரதிபலிக்காததால் வீரமாமுனிவரே உரையும் எழுதியிருக்க முடியுமா என்ற ஐயம் எழுப்பப்பட்டுள்ளது (சண்முகம், 1993 : 116 - 22). ஆனால் இராசமாணிக்கம்(1995) உரையில் இடைச்செருகல் இருப்பதாகக் கருதுகிறார். 'நூலைப் பதிப்பித்த வேதகிரி முதலியார் நூலை உள்ளவாறு பதிப்பிக்காமல் பல மேற்கோள்களைச் சேர்த்து அச்சிட்டு இருக்கிறார். இதனால் எது முனிவர் எழுதியது, எது வேதகிரியார் சேர்த்தது என்று தெரியாமல் எல்லாம் கலந்து இருக்கின்றன. எனினும் அச்சாகாத சுவடிகள் இருப்பதால் அவற்றின் துணை கொண்டு முனிவர் எழுதியபடி நூல் வெளிவரலாம்' (ப. 125) என்பது அவரது வாசகம்.

எனவே முன்னரே பதிப்பிக்கப்பட்ட நூல்களுக்கும் செம்பதிப்புத் தேவை என்பது தெளிவுறுகிறது.

இந்நிலையில் மூலபாட ஆய்வு இலக்கண ஆய்வில் முக்கிய இடத்தைப் பெறுகிறது. தொல்காப்பிய மூலபாட ஆய்வு, தொல்-

காப்பிய வேறுபாடுகளாக மட்டும் பழனியப்பனால் (1990) மேற்கொள்ளப்பட்டுள்ளது. இது பாடபேதங்களை மட்டுமே ஆராய்கிறது. ஆனால் மூலபாட ஆய்வு என்பது இடைப்பிறழ்ச்சி, இடைவீழ்ச்சி, இடைச்செருகல், ஒன்றாக்கல் / பலவாக்கல், பாடவிளக்கம், பாடப்படைப்பு, கடைச் செருகல் போன்ற பல தலைப்புகளில் ஆராயப்பட வேண்டும் என்ற கருத்து இப்பொழுது தெளிவாக்கப்பட்டுள்ளது (மாணிக்கம், 1984, சண்முகம், 1989, 1992). இந்த முறையில் செய்யப்படும் ஆராய்ச்சியே செம்பதிப்புக்கு வழிவகுக்கும். திருவனந்தபுரம் 'இந்தியத் திராவிட மொழியியல் கழகம்' தொல்காப்பிய பாட வேறுபாட்டுத் தொகுப்புடன் ஒரு நூலைப் (Variorium Edition) தயாரித்து வெளியிட்டு உள்ளது. ஆனால் அது இன்னும் விற்பனைக்கு வரவில்லை.

## 4. மறுவருணனை ஆய்வு

மொழியியலின் செல்வாக்கால் இலக்கண நூல்கள் மறுவருணனை செய்யப்பட்டு மொழி அமைப்பு பற்றி பல புதிய உண்மைகள் வெளிக்கொணரப்பட்டுள்ளன. இன்றைய பெரும்பாலான ஆராய்ச்சி மறு வருணனை ஆராய்ச்சி என்று கூடக் கூறலாம். எண்பது வரை நடந்த எழுத்ததிகார மறுவருணனை ஆய்வு முன்னரே (சண்முகம் 1983) விளக்கப்பட்டுள்ளது. கடந்த பன்னிரண்டு ஆண்டுகளில் எழுத்ததிகாரம் பற்றி நூல் எதுவும் வந்ததாகத் தெரியவில்லை.

சொல்திகாரத்தைப் பொறுத்தவரையில் தொல்காப்பிய ஆய்வின் வரலாற்றில் (கிருட்டிணமூர்த்தி – 1990) 1981 வரை நடந்த ஆய்வு தொகுத்து வகுத்து கொடுக்கப்பட்டுள்ளது. அதற்குப் பிறகு வந்தவைகளாகக் கீழ்க்கண்டவைகளைக் கூறலாம்.

அகத்தியலிங்கம், 1985, தொல்காப்பியச் சிந்தனை

காமாட்சி, அ, 1989, தொல்காப்பியத்தில் வினைக்குறிப்பு

சண்முகதாஸ், 1982, தமிழ்மொழி இலக்கண இயல்புகள்

சண்முகம். செ. வை. 1984,86,92, சொல்லிலக்கணக் கோட்பாடு I, II, III

மல்லிகா. பா, 1981, இலக்கண மரபில் இடைச்சொற்கள்

முதலானவை குறிப்பிடத்தகுந்தவை. மறுவருணனை ஆய்வு, வரலாற்றுக்கிளைமொழி ஆய்வுக்கும் வழிவகுத்துள்ளது (சண்முகம், 1989).

## 5. கோட்பாட்டு ஆய்வு

இலக்கணக் கோட்பாட்டு ஆய்வும் மொழியியல் தாக்கத்தால் ஏற்பட்டதே. அதைத் துவக்கி வைத்த பெருமை தெ.பொ. மீனாட்சி சுந்தரனாரைச் சாரும். அண்ணாமலைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட தொல்காப்பிய மொழியியல் (அகத்தியலிங்கம் முருகையன்-1972) என்ற நூல் எழுத்து, சொல் இலக்கணக் கோட்பாடுகளை விளக்கியுள்ளது. ஆசிரியருடைய எழுத்திலக்கணக் கோட்பாடு, சொல்லிலக்கணக் கோட்பாடு வரிசை நூல்களும் இந்தத் துறையில் குறிப்பிடத்தகுந்தவையே. தொல்காப்பியக் கோட்பாட்டு ஆய்வே பெரிய அளவில் மேற்கொள்ளப் பட்டுள்ளது. பிற இலக்கணங்களின் கோட்பாட்டு ஆய்வு அதிக அளவில் மேற்கொள்ளப்படவில்லை. ஆனாலும் எழுத்திலக்கணத்தில் நேமிநாதம், வீரசோழியம், நன்னூல், இலக்கணவிளக்கம், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம், சுவாமிநாதம் ஆகிய நூல்களில் காணப்படும் கோட்பாடுகளைக் கண்டறிய முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. (சண்முகம் - 1980)

வீரசோழியம் பற்றி ஒரு தனி நூலே (இராசாராம்,1992) வெளிவந்துள்ளது. அது ஒரு புடைமாற்று (Transfer) என்ற புது வகையைச் சார்ந்தது என்றும் கண்டறியப்பட்டுள்ளது. மேலும் அந்த நூல் சோழர்கால மொழிச்சூழல், இலக்கணக்கல்விச்சூழல் ஆகியவைகளை ஆராய்ந்ததன் மூலம் இலக்கண உருவாக்கக் கோட்பாட்டை விளக்கி வரலாற்றுச் சமூக மொழியியல் (Historical Sociolinguistics) என்ற ஆய்வுக்கு அடித்தளம் வகுத்துள்ள பெருமை உடையது.

ஆனால் தமிழில் சொல்லிலக்கணக் கோட்பாட்டு வளர்ச்சி ஆராய்ச்சிக்கு இன்னும் பிள்ளையார் சுழி கூடப் போடவில்லை என்று கருத வேண்டியிருக்கிறது. உரையாசிரியர்களின் இலக்கணக் கோட்பாடு தனியாகவும் (நச்சினார்க்கினிய எழுத்ததிகார உரை, சண்முகம், 1967) கட்டுரைகளாகவும் எழுதப்பட்டுள்ளன.

## 6. ஒப்பாய்வு

### 6.1. தமிழ் இலக்கணங்களுக்கு இடையே ஆய்வு

தமிழ் இலக்கணங்களை ஒன்றோடு ஒன்று ஒப்பிட்டு ஆராயும் ஆராய்ச்சியில் தொல்காப்பிய - நன்னூல் ஒப்பாய்வே பழமையானது. சாமுவேல்பிள்ளை 1855 - இலேயே ஒருநூல் வெளியிட்டுள்ளார். அடுத்து வெள்ளைவாரணன் எழுத்து, சொல் என்ற இரண்டுக்கும் தனித்தனி நூல்கள் (1962, 1963) வெளியிட்டுள்ளார். நன்னூல் அதற்கு முன்னர் எழுதப்பட்ட நூல்களுக்குப் பட்ட கடனையும் பின்னால் எழுதப்பட்ட நூல்களில் ஏற்படுத்திய தாக்கத்தையும் விஜயவேணுகோபால் (1968), சுப்பிரமணியன் (1977) ஆகியோர் விரிவாக ஆராய்ந்துள்ளனர். இவை பல இலக்கண நூல்களின் செல்வாக்கு பற்றி விளக்கும் ஆராய்ச்சிகளாகவே அமைந்துள்ளன.

உண்மையில் செம்மையாகச் செய்யப்படும் தமிழ் இலக்கண ஆராய்ச்சி, தமிழ் மொழி வரலாற்றில் ஏற்பட்ட மாற்றங்களையும் இலக்கணக் கோட்பாட்டில் ஏற்பட்ட மாற்றங்களையும் விளக்கும் ஆய்வாக அமைய வேண்டும். இந்த முறையில் வந்த ஆராய்ச்சி குறைவாகவே உள்ளது.

### 6.2. இலக்கணம், இந்திய மொழி ஒப்பு

தொல்காப்பியம் கூறும் மொழி அமைப்பை இந்திய மொழிகளோடு ஒப்பிட்டு ஆராயும் ஆராய்ச்சி மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தாரால் மேற்கொள்ளப்பட்டது. அதன் விளைவாகத் தொல்காப்பியமும் சங்க இலக்கிய மொழியும்'' ஒப்புநோக்கில் நடராசனால் (1977) ஆராயப்பட்டுள்ளது. அந்த முறையில் பிற இலக்கியங்களும் ஆராயப்பட்டுள்ளன.

### 6.3. இலக்கணம் - பிற திராவிட மொழி ஒப்பாய்வு

தமிழ் இலக்கணத்தைச் சரியாகப் புரிந்து கொள்ள பிற திராவிட மொழி - குறிப்பாக பழங்குடி மக்கள் பேசும் திராவிட மொழி ஒப்பு ஆய்வு துணைசெய்யும் (இசரயேல், 1994). உகரச் சுட்டு அண்மைக்கும் சேய்மைக்கும் இடைப்பட்ட இடப்பொருளை

உணர்த்துவதாக உரையாசிரியர் கூறுவது பொருந்தாது என்பதை சங்க இலக்கிய வழக்கும் பழங்குடி மக்கள் பேசும் திராவிட மொழி வழக்கும் காட்டுவதாக இசரயேல் விளக்கியுள்ளார். உகரச்சுட்டு மிகச் சேய்மையைக் குறிக்கும். ஒப்பிலக்கண நோக்கில் தொல்காப்பிய மொழியை ஆராய்ந்தால் தமிழில் இலக்கிய வழக்குகளில் ஏறாத ஒரு கிளைமொழி வழக்கு சங்ககாலத்தில் இருந்திருக்க வேண்டும் என்று ஊகிக்க இடம் இருக்கிறது. (சண்முகம், 1989 : 199 தொ.).

## 6.4. தமிழ் - பிறமொழி ஒப்பிலக்கண ஆய்வு

### 6.4.1. தமிழ் - வடமொழி

உரையாசிரியர்களே தமிழ்-வடமொழி இலக்கணக் கோட்பாடுகளை ஒப்பிட்டுச் சில கருத்துகளைச் சொல்லியுள்ளார்கள். இந்த நூற்றாண்டில் சுப்பிரமணிய சாஸ்திரி (1934) காட்டிய வடமொழி-தமிழ் இலக்கண ஒற்றுமையும் வேற்றுமையும் ஏற்றுக் கொண்டாலும் ஒற்றுமை வடமொழிக் கருத்துக்களைக் கடனாண்டதால் ஏற்பட்டது என்பது இன்று ஒத்துக்கொள்ளப்படுவதில்லை; சில ஒற்றுமை உலகப் பொதுமையானவை என்று அறியப்பட்டுள்ளது. மொழியியல் ஆராய்ச்சி மிகுந்தபோது பாணினி - தொல்காப்பிய ஒற்றுமை வேற்றுமை இன்று ஓரளவு பரவலாக ஆராயப்பட்டு தொல்காப்பியரின் தனித்துவம் நிறுவப்பட்டுள்ளது(மீனாட்சி, 1971, 72, 73; முருகையன், 1982; பாலசுப்பிரமணியன், 1987). வடமொழி பிராதி சாக்கியமும் தொல்காப்பியம் பிறப்பியலும் விரிவாக ஆராயப்பட்டு தொல்காப்பியர் நேரடியாக வடமொழிக் கருத்துக்களைக் கடனாண்டிருக்க முடியாது என்பதும் நிரூபிக்கப்பட்டுள்ளது(ராஜம், 1981).

### 6. 4. 2. தமிழ் — பிற திராவிட மொழிகள்

மலையாள மொழி இலக்கணங்களைத் தமிழ் இலக்கணங்களோடு ஒப்பிடும் முயற்சியும் மீனாட்சி சுந்தரனார் (1965) இளையபெருமாள் (1971) ஆகியவர்களாலும் மேற்கொள்ளப்பட்டுள்ளது. நான்கு திராவிட மொழிகளில் காணப்படும் ஒரு சொல் வகைப்பாடும் ஒப்பிட்டும் ஆராயப்பட்டிருக்கிறது (சண்முகம், 1986).

### 6. 4. 3. தமிழ் உலகமொழி இலக்கணங்கள்

உலக மொழிகளில் (பாபிலோனியா, வடமொழி, கிரேக்கம்) நடைபெற்ற இலக்கண ஆய்வு வளர்ச்சிப் பாதை, வளர்ச்சிக் காரணங்கள் ஆகியவைகளின் அடிப்படையில் தொல்காப்பியத் தோற்றத்துக்கான காரணங்களை ஊகித்தறியும் முயற்சி மேற்கொள்ளப்பட்டு அதற்கு இலக்கணச் சமூகவியல் (Sociology of grammar) என்று பெயரிட்லாம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது (சண்முகம், 1989, 1992 அ). இது மலையாள மொழியின் முதல் இலக்கணத்தைஆராயவும் (சண்முகம், 1992 ஆ) பல்லவர் பாண்டியர் கால இலக்கணங்களை ஆராயவும் (சண்முகம், 1994) வழிவகுத்து இலக்கணச் சமூக ஆய்வுக்கு உரம் சேர்த்திருக்கிறது. இந்தத் துறையில் சிறிது வேறுபட்ட நோக்கில் முன்னரே வெளிவந்துள்ள சிவத்தம்பி ஆய்வும் (1982) கவனத்துக்கு உரியது. எனவே இலக்கண ஆராய்ச்சியில் கோட்பாட்டு நிலையிலே இது ஒரு புதிய பரிமாணத்தைச் சேர்த்திருப்பதாகக் கருதலாம். ஆனாலும் இன்னும் சோழர்கால இலக்கணங்கள் பிற்கால இலக்கணங்களையும் இந்த முறையில் ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

## 7. முடிவுரை

தமிழில் இலக்கண ஆய்வு ஓரளவு பரந்தும் விரிந்தும் செய்யப்பட்டிருப்பது உண்மைதான். இருந்தாலும் கோட்பாட்டு அளவில் ஆராய்ச்சி சிறக்கும் போதுதான் இந்திய அளவிலும் உலக அளவிலும் தமிழ் இலக்கணங்கள் மொழியியல் வரலாற்றில் இடம்பெற முடியும். அதற்கு முன்னோடியாகச் செய்ய வேண்டிய பணிகளை அண்ணாமலை (சண்முகம், 1984, முன்னுரை) சுட்டிக்காட்டியிருப்பது எடுத்துக்காட்டத் தகுந்தது.

'தற்காலத்தில் ஆங்கில மொழிநூல் மரபுகளின் தாக்கம் பரவியிருக்கும்போது தொல்காப்பிய ஆராய்ச்சி முனைப்பாக நடைபெறுகிறது ... பல ஆராய்ச்சி நூல்கள், கட்டுரைகள், பட்ட ஆய்வேடுகள் எழுதப்பட்டிருக்கின்றன. கருத்தரங்குகள் நடத்தப் பட்டிருக்கின்றன. வளர்ந்து வரும் தொல்காப்பிய இலக்கியத்தை அளவீடு செய்து நிறுவப்பட்ட உண்மைகளை வகைப்படுத்தி இன்னும் ஆராய வேண்டிய பகுதிகளை இனங்காண்பது இன்றைய தேவையாகும்.'

என்ற அவருடைய வாசகம் எல்லாத்தமிழ் இலக்கண நூலுக்கும் பொருந்தும் உண்மையாகக் கொள்ளலாம். இதற்குப் பாணினி ஆராய்ச்சியை வகைப்படுத்தி கர்டோனா (Cardona,1976) எழுதி-யிருப்பது முன்மாதிரியாகக் கொள்ளத் தகுந்தது.

### துணையன்கள்


1. அகத்தியலிங்கம், ச. 1985, தொல்காப்பியச்சிந்தனைகள், அண்ணாமலைநகர்.
2. அகத்தியலிங்கம், ச. & முருகையன், க. 1972, தொல்காப்பிய மொழியியல், அண்ணாமலைநகர்.
3. அண்ணாமலை, இ. 1984, அணிந்துரை - சொல்லிலக்-கணக் கோட்பாடு,(சண்முகம், 1984).
4. ஆபிரகாம் அருளப்பன் &சுப்பிரமணியம் நூ. ஆ.) 1963, சொல்லதிகார உரைக் கோவை, பாளையங்கோட்டை.
5. இசரயேல், மோ. 1994, Presidential address to Dravidian Linguistics IJDL XXIII No.1:1-6.
6. இராசமாணிக்கம், ச. 1995, வீரமாமுனிவர் அருளிய இலக்கண நூல்கள், எட்டாவது உலகத்தமிழ்மாநாடு-சிறப்புமலர், 1 3-26, தஞ்சாவூர்.
7. இராசாராம். சு. 1992, வீரசோழிய இலக்கணக் கோட்பாடு, நாகர்கோயில்.
8. இளங்குமரன், இரா. 1985, இலக்கண வரலாறு, சென்னை.
9. இளவரசு, சோ. 1963, இலக்கணவரலாறு, சிதம்பரம்.
10. காமாட்சி, ஆ. 1989, தொல்காப்பியத்தில் வினைக் குறிப்பு, நாகர்கோவில்.
11. கிருஷ்ணமூர்த்தி, கோ. 1990 தொல்காப்பிய ஆய்வின் வரலாறு, சென்னை.
12. — (பதிப்பு)., 1989, இலக்கணச் சூடாமணி (உரையுடன்) தஞ்சாவூர்.

13. கிருஷ்ணமூர்த்தி, சா. 1985, உரைச் சொற்களஞ்சியம், சிதம்பரம்.

14. கோதண்டராமன், பொன். (பொற்கோ), 1985, இலக்கணக் கலைக் களஞ்சியம், சென்னை.

15. சண்முகதாஸ், அ. 1983, தமிழ்மொழி இலக்கண இயல்புகள், யாழ்ப்பாணம்.

16. சண்முகம், செ.வை. 1967, **Naccinarkkiniyar's Concept Of Phonology**, Annamalai Nagar.

17. — 1980, எழுத்திலக்கணக் கோட்பாடு, அண்ணாமலை நகர்.

18. — 1984 - தொல்காப்பியம் - எழுத்து - மொழியியற் கூறுகள் – நூல்களின் அளவீடு, Journal of the Annamalai university, Humanities p.p. 142-59.

19. — 1984, சொல்லிலக்கணக் கோட்பாடு I, அண்ணாமலை நகர்.

20. — 1986, (அ) திராவிட மொழி இலக்கணங்களின் சொல்வகை, புலமை 1 & 2.

21. — 1986 (ஆ) சொல்லிலக்கணக் கோட்பாடு II, அண்ணாமலைநகர்.

22. — 1989, மொழிவளர்ச்சியும் மொழியுணர்வும் (சங்ககாலம்), சென்னை.

23. — 1992 (அ), சொல்லிலக்கணக் கோட்பாடு III, சென்னை.

24. — 1992 (ஆ), மலையாள மொழியின்முதல் இலக்கணம், சென்னை.

25. — 1993, கிறித்துவ அறிஞர்களின் இலக்கணப்பணி, சென்னை.

26. — 1994, இலக்கண உருவாக்கம் I. பல்லவர் பாண்டியர் காலம், சென்னை.

27. சாமுவேல் பிள்ளை, ச. 1858, தொல்காப்பிய நன்னூல், சென்னை.

28. சிவத்தம்பி, கா. 1982, இலக்கணமும் சமுகஉறவுகளும், சென்னை.

29. சிவலிங்கனார், ஆ, (பதிப்பர்) 1980 - 88. தொல்காப்பிய உரைவளம் எழுத்து & சொல் 19 தொகுதிகள் சென்னை

30. சுந்தரசண்முகனார், 1965, தமிழ் அகராதிக்கலை, இரண்டாம் பதிப்பு, சென்னை.

31. சுப்பிரமணிய சாஸ்திரி, பி. சா. 1934, History Of Grammatical Theories in Tamil in Relation to The Grammatical Literature in Sanskrit, Madras.

32. சுப்பிரமணியம், ச. வே. 1967, இலக்கணத் தொகை-எழுத்து, நாகர்கோவில்.

33. — 1971, இலக்கணத்தொகை - சொல், நாகர்கோவில்,

34. தாமோதரன், அ. 1995, நன்னூல் விருத்தியுரைக்கு ஒரு திருத்தப்பதிப்பு, எட்டாவது உலகத்தமிழ் மாநாடு - சிறப்பு மலர் ப.115-9 தஞ்சாவூர்.

35. தொல்காப்பியக் - கருத்தரங்கு. கருத்தரங்கக் கட்டுரைகள் இரண்டாம் தொகுதி, 1994, பாரதிதாசன் பல்கலைக்கழகம் திருச்சிராப்பள்ளி.

36. நடராசன், தி. 1977, The Language of Sangam Literature and Tolkappiyam, Madurai.

37. பட்டாபிராமன், துரை. 1992, இலக்கண ஆய்வடங்கல் எழுத்தும் சொல்லும் முதல்தொகுதி, அண்ணாமலை நகர்.

38. பழநியப்பன், வெ. 1990 தமிழ் நூல்களின் பாடவேறுபாடுகள், அண்ணாமலை நகர்.

39. பாலசுப்பிரமணியன், க. 1987, தொல்காப்பியமும் பாணினியமும் ஓர் ஒப்பாய்வு - மொழியியல் 10. 1 & 2.

40. மகாலிங்கம், நா. (பதிப்பர்) 1994, தொல்கப்பியம் (எழுத்துப்படலம், சொல்படலம்) சென்னை.

41. மல்லிகா, பா.1981, இலக்கணமரபில் இடைச்சொற்கள், பாலக்காடு.

42. மாணிக்கம், வ.சுப. 1984, தொல்காப்பியத்திறன், சிதம்பரம்.

43. மீனாட்சி, கே 1971, Treatment of cases in Asta: dhyayi and Tolkappiyam, ஆய்வுக்கோவை 3. 255-8, அண்ணாமலை நகர்

44. — 1972, Treatment of cases in Asta:dhyaiy; and Tolkappiyam. ஆய்வுக்கோவை 4. 469-74, திருவனந்தபுரம்.

45. — 1973, Treatment of Finite verb in Asta adh yayi and Tolkappiyam, ஆய்வுக்கோவை 5.746-51, சென்னை.

46. மீனாட்சி சுந்தரனார், 1965 அ, Liilatilakam - A few glimpses, seminar on Grammatical theories in Malayalam, (unpublished.) Trivandrum.

47. — 1965 ஆ, Tamil and Telugu Grammars - Seminar on Grammatical theories in Telugu, (unpublished) Hyderabad.

48. முருகையன், க. 1975, Did Tolkappiyar Translate paniniya Siksha, ஆய்வுக்கோவை 5-589-600, சென்னை.

49. விஜய வேணுகோபால், கோ.1968, **A Modern Evaluation Of Nannul**, Annamalai Nagar.

50. வெள்ளைவாரணன், க. 1962 தொல்காப்பியம் - நன்னூல் எழுத்ததிகாரம், அண்ணாமலைநகர்.

51. — 1968, தொல்காப்பியம் - நன்னூல் சொல்லதிகாரம், சிதம்பரம்.

52. ஜெயதேவன், வ. 1985. **தமிழ் அகராதியியல், வளர்ச்சி வரலாறு**, சென்னை.

53. Cardona, G. 1976, **Panini - A Survey of Research**, The Hauge.

54. Elayaperumal, M. 1971, The influence of Tholkappiam on Liilatilakam, **Proceedings of The First Conference on Dravidian Linguistics**, (Ed. Subramoniam vol. I pp. 170 - 3) Trivandrum.

55. Rajam, V.S. 1981, **A Comparative Study of Two Ancient Grammatical Traditions. The Tamil Tollkappiyam Compared With Sanskrit Rik Pratiskiya Taittireya Pratisakhya And Asta : dhyayi**,(unpublished) Ph. D., dissertation, University of Pensylvania.

56. Ramaiah, C.S. 1995, **Tamil Language And Linguistics**, Madras.

57. Subramaniyam, S. 1977, **Phonology - A Critical Study of Tolkappiam and Nannul**, Nagarcoil.

# வரலாற்று நோக்கில் தமிழிலக்கணக் கோட்பாடுகள்

கோ. விசயவேணுகோபால்

## 3

தமிழிலக்கணக் கோட்பாடுகளை இருவகையாகப் பிரித்து ஆராய இடமுள்ளது. ஓர் இலக்கண நூல் முழுமையும் கருத்திற்கொண்டு அந்நூலில் கரந்துள்ள கோட்பாட்டினை விளக்கலாம். அவ்வாறன்றி நூலுள் பல உட்கூறுகளாகப் பகுக்கப் பெற்று விளக்கப்பெறும் இலக்கணக் கோட்பாட்டினையும் தனியே விளக்கலாம். எடுத்துக்காட்டுகளாகச் சார்பெழுத்துக்கோட்பாடு, புணர்ச்சிக் கோட்பாடு, தொகைச்சொற் கோட்பாடு போன்றவற்றைச் சுட்டலாம். இவ்வாறே வரலாற்று நிலையிலும் பொது வகையில் இலக்கணக் கோட்பாடுகளின் வளர்ச்சிப்போக்குகள் எனவும் சிறப்பு நிலையில் ஒரு கோட்பாட்டின் (சார்பெழுத்துக் கோட்பாடு என்பதுபோல) வளர்ச்சிப் போக்குகள் எனவும் ஆய்ந்து விளக்கலாம். இக்கட்டுரையுள் முதலாவதாகிய பொது நிலை ஆய்வே மேற்கொள்ளப்பெற்றுக் கருத்துக்கள் சொல்லப் பெறுகின்றன.

இலக்கணக் கோட்பாடுகட்கான அடிப்படைகள் பலநிலைகளில் அமையலாம். இலக்கணம் எழுவதற்கான சமூகப்பின்னணி-

கள், இலக்கணம் கூறப்படும் மொழியின் பரப்பு, வரையறைகள், இலக்கணத்தின் நோக்கம், கற்போர் போன்று பலஅடிப்படைகள் இருக்கலாம். இக்கட்டுரையுள் (1) தொல்காப்பியம் (2) யாப்-பருங்கலம் (3) வீரசோழியம் (4) நேமிநாதம் (5) நன்னூல் ஆகிய இலக்கணநூல்களின் கோட்பாடுகள் வரலாற்று நோக்-கில்ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பெறுகின்றன.

மரபிலக்கணங்களின் நோக்கம்இலக்கணக்கோட்பாட்டைச் சொல்வதன்று;எனினும் இவ்விலக்கணங்கள் சில கோட்பாடுகளின் அடிப்படையிலேயே அமைந்திருத்தல் வேண்டும். இவற்றை நாம் கற்கும் இலக்கணங்களின் வழியேயே கண்டறிந்து உருவாக்கம் செய்ய வேண்டியுள்ளது. இவ்வகையில் மேற்குறிப் பிட்ட இலக்கணநூல்கள் ஒவ்வொன்றன் அடிப்படைகளை அறிந்த நிலையில், பின் அவற்றை ஒப்பிட்டு இலக்கணக்கோட் பாடுகளின் வளர்ச்சி நிலைகளைக் காணலாம்.

## தொல்காப்பியம்

தொல்காப்பியரது இலக்கணக் கோட்பாட்டின் சில அடிப் படைகளை அறிந்துகொள்ளப் பனம்பாரனாரின் சிறப்புப்பாயிரம் உதவுகிறது.

''வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்கும் செய்யுளு மாயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி
செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணி
புலம் தொகுத்தோனே போக்கறு பனுவல்
நிலந்தரு திருவிற் பாண்டிய னவையத்து
அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங் கோட் டாசாற்கு அரில்தபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி
மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப்பியனெனத் தன்பெயர் தோற்றிப்
புல்புகழ் நிறுத்த படிமையோனே''.

பாயிரத்தின் முதற்பகுதி இலக்கண ஆய்வின் எல்லை கூறுகிறது. வடவேங்கடம், தென்குமரி ஆயிடை வழங்கும் தமிழ் அடிப்படை ஆதாரம் ஆகும். கூறிய இத்தமிழினை வழக்கு, செய்யுள் என இரு பெரும் பிரிவுகளில் ஆராய்தல் முதனிலை. பின் இதனையே எழுத்து, சொல், பொருள் என மூவகை நிலைகளில் ஆராய்தல் அடுத்தநிலை. 'முந்துநூல்கண்டு' என்றதால் முன்னரே ஆக்கப் பெற்ற நூற்களைக் கண்டு ஒப்பிட்டும் இலக்கணம் யாத்தல் மூன்றாவதுநிலை. இம்மூன்று நிலைகளிலும் இலக்கணம் யாக்கப்பட்டிருத்தல் தொல்காப்பியத்தை ஆயும்போது தெளிவாகிறது. ''செந்தமிழியற்கை சிவணிய நிலத்து வழக்காறுகளையும் ஆய்தல் ஓர் அடிப்படையாகச் சொல்லப்பட்டாலும் இதுபற்றிய விரிவான விளக்கங்கள் தொல்காப்பியத்தில் இல்லை. அடுத்துக் குறிப்பிடப் பெறும் முக்கியமான செய்தி இவ்வாறு யாக்கப்பட்ட இலக்கணம் அறங்கரை நாவின் நான்மறைமுற்றிய அதங்கோட்டாசாற்கு'' உரைக்கப்பட்டது என்பதாகும். தமிழ் இலக்கணத்தை வடமொழியில் வல்ல ஆசான்முன் ஏன் சொல்லவேண்டும் என்ற கேள்வி எழுகிறது. தொல்காப்பியத்தை நுணுகிக் கற்பார் தொல்காப்பியர் ஆங்காங்கே வடமொழி அமைப்பினின்றும் தமிழ்மொழி அமைப்பு மாறுபட்டுநிற்பதைச் சுட்டிச் செல்வதை உணர்வர். எடுத்துக் காட்டுக்களாக எழுத்துக்களின் பிறப்பிலக்கணத்தை வடநூல் மரபினின்றும் மாறுபட்டுரைப்பது (பிறப்பியல் :21), காமக்கூட்டம் மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள் கந்தருவர் வழக்கொடு ஒருபால் ஒற்றுமையுடைத்து என்பது (களவிளல் :1) போன்றவற்றைச் சொல்லலாம். எனவே தொல்காப்பியரது இலக்கணக் கோட்பாட்டின் மற்றோரடிப்படை வடமொழி - தமிழ் அமைப்புக்களை உறழ்ந்து காட்டுதலாம். இறுதியாக மற்றோரடிப்படையும் பாயிரத்துள் சுட்டப்பட்டுள்ளது. ''ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்'' என்றதால் ஐந்திர இலக்கணமரபைப் பின்பற்றிய தன்மையும் இங்குச் சுட்டப்படுவதாகச் சிலர் கருதுவர். எனினும் இந்நூல் இன்று கிடைத்திலதாதலின் இதுபற்றி மேலும் கூறுதற்கில்லை. தொல்காப்பியர் பிற இலக்கணமரபுகளையும் அறிந்திருந்தார் என்ற அளவில் இதனைக் கொள்ளலாம். இவையாவும் புறநிலையில் தொல்காப்பியரின் கோட்பாட்டைப் புரிந்துகொள்ள உதவும் கருத்துக்கள். இவையன்றித் தொல்காப்பியநூல் முழுமையின் உள்ளடக்கத்தை ஆராய்கின்றபோதே அவருடைய இலக்கணக் கோட்பாடுகள் தெளிவாகும்.

தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் எனும் மூன்றுறுப்-படக்கிய பிண்டம் என்பர். பொருளிலக்கணத்தையும் செய்யுள் இலக்கணத்தையும் இலக்கணத்தின்பாற்பட்டதாகக் கருதுவது தொல்காப்பியரின் இலக்கணக்கோட்பாட்டைப் புரிந்துகொள்ள உதவுகிறது. இன்று வளர்ச்சி பெற்றுள்ள மொழியியல் கோட்-பாடுகளிலேயே செய்யுள் மொழியையும் இலக்கியப்பொருண்-மையையும் இலக்கணத்தின்பாற்படுவனவாகக் கருதுதல் இல்லை. இவ்வகையில் தொல்காப்பியரின் இலக்கணக் கோட்-பாடு தனித்தன்மை கொண்டதாக இலங்குகிறது. மேலும் பொரு-ளதிகாரத்தே செய்யுளியலைத் தொடங்குகிறபோதே மாத்திரை வகை, எழுத்தியல் வகை முதலானவை 'மேற்கிளந்தனவே' (செய்யுளியல் 2) எனக் கூறுதலின் பொருளிலக்கணத்தோடு ஏனைய இலக்கணங்கள் இயைந்து பொருந்து மாற்றை விளக்கி-விடுகிறார். ஒரு நிலையில் பொருளதிகாரத்தைப் புலப்படுத்தலே இலக்கணத்தின் நோக்கமெனவும் அதற்குப் பயன்படு கருவிக-ளாகவே எழுத்து, சொல் இலக்கணங்கள் அமைகின்றன என-லாம். இலக்கணத்தின் பயன் ''மொழித்திறத்தின் முட்டறுத்து வீடு பெறலே'' என்ற பின்னைய கோட்பாடும் ஓரளவிற்கு இக்-கருத்தை வலியுறுத்கிறது எனலாம். பொருள் என்பதனை இரு-நிலைகளில் விளக்கலாம். உருவமும் உள்ளடக்கமும் கூடிய பொருள் எனவும் மொழிப்பொருள் எனவும் பொருள் கொள்ள-லாம். எனவே இலக்கணத்தின் நோக்கம் பொருளைப் புலப்-படுத்துதலே எனலாம். சிக்கலின்றிப் பொருளைப் புரிந்து தெளிய எழுத்து, சொல் இலக்கணங்கள் இயைபுபடப் புலப்படுத்தப்பெறு-கின்றன எனலாம். இந்நோக்கில் தொல்காப்பியத்தை ஆராயின் அதன் இலக்கணக் கோட்பாட்டடிப்படை புலனாகும்.

தொல்காப்பியம் எழுந்த காலச் சூழலும் இங்குக் கருதத்-தக்கது. தொல்காப்பியரது காலம் கி.மு. 3ஆம் நூற்றாண்டெனப் பலரும் ஏற்றுள்ளனர். இக்காலத்தேதான் சமணமும் பௌத்தமும் தமிழகத்தில் நுழைந்தன. இம்மதங்களின் செல்வாக்கினை நமக்-குக் கிடைத்துள்ள பழைய தமிழ்க் கல்வெட்டுக்கள் உணர்த்து-கின்றன. புதிய கோட்பாடுகள் வந்து புகுகின்ற காலத்தே தமிழ் மரபுகளை நிலைநிறுத்தவும் வேறுபடுத்திக் காட்டவும் ஆன சூழ்-நிலைகள் தோன்றின. இச்சூழல்களிலேதான் தொல்காப்பியமும் தோன்றுகிறது. இதனாலேயே 'என்ப', 'என்மனூர்' போன்ற

சொற்களால் பழைய மரபுகளும் வடமொழியோடு ஒப்பிட்டு உறழ்ந்துகாட்டும் போக்கினால் தமிழின் தனித்தன்மையைக் காட்டும் போக்கும் தொல்காப்பியத்திலே காணப்படுகின்றன எனலாம். எனவே தொல்காப்பியரது இலக்கணத்தின் நோக்கங்-களில் மரபு காத்தலும் தமிழ் மரபினை பிற மரபினின்றும் வேறுபடுத்திக்காட்டலும் முக்கியமானவைகளாக அமைகின்றன. வடமொழியிலும் தொடக்கக்கால இலக்கியக் கோட்பாடு நூல்-களின் இலக்கணங்கள் ''காவிய இலட்சணங்கள்'' என்றே பேசப்-படுகின்றன. தொல்காப்பியரும் இது போன்றதொரு அடிப்-படையையே கொண்டிருந்தார் என்று சொல்லலாம். 'காவியம்' என்பது பொதுவாக இலக்கியத்தையே குறிக்கும். ''காப்பியம்'' என்ற பொருள் பின்னாளிலேயே வழங்குகிறது. இலக்கியத்தின் இலக்கணங்களே ''காவியலட்சணங்கள்'' எனப்பெற்றன. பொரு-ளதிகாரமும் இலக்கியத்தின் இலக்கணங்களையே எடுத்தியம்-புகிறது. இவ்விலக்கணங்களைப் புரிந்து கொள்ள ஊடகமாக விளங்கும் மொழியின் இலக்கணங்களே எழுத்து, சொல் அதிகா-ரங்களில் சுட்டப்படுகின்றன. இவை வழக்கு நிலைகளிலும் செய்-யுள் நிலையிலும் எவ்வாறு அமைகின்றன என்பது ஆங்காங்கே சுட்டப்படுகிறது. எனவே பொருளிலக்கணத்தை — இலக்கியத்-தைப் - புரிந்துகொள்ள எழுத்து சொல்லிலக்கணங்கள் கருவி நிலையிலமைகின்றன எனலாம். இலக்கியம் மொழியால் ஆனது; மொழிக்கு அடிப்படை அலகு வாக்கியம் ஆகும்; இவ்வாக்கியத்-தினைப் பிழையறப் புரிந்து கொள்ள வைப்பது சொல்லதிகாரத்-தில் மேற்கொள்ளப்படுகிறது. எனவே எழுவாய் பயனிலை இயைபு, வினைமுற்று அதற்கு அடையாக வரும் வேற்றுமைத் தொடர் முதலானவற்றின் இயைபு, தொடர்களுக்குள்ளே அமை-யும் இயைபு எனக் கிளவியாக்கம் முழுவதும் இவ்வாக்கியக் கருத்துக் கொண்டே அமைக்கப்பட்டுள்ளது. ஏனைய இயல்கள் வாக்கியத்தின் உறுப்பாக வரும் சொற்களைப் பற்றி விளக்கும் போது கூட இவ்வெழுவாய் - பயனிலை இயைபினை மனத்துட்-கொண்டே அமைந்துள்ளன. பெயர்களையும் வினைகளையும் உயர்திணை, அஃறிணை, ஆயிருதிணைக்கும் பொதுஎனப்பிரித்-துள்ளமை இதனை வலியுறுத்தும். சொற்களின் அக அமைப்-பினைப்பற்றிய செய்திகள் பேசப்படாமையும் இதனை மேலும் வலியுறுத்தும். எனினும் சொல்லின் வடிவ அமைப்பு பொருள் புலப்பாட்டிற்கு வேண்டுவதாதலின் அதனைப் பற்றிய செய்திகள்

எழுத்ததிகாரத்தே சுட்டப்படுகின்றன. சொற்களில் முதல், ஈறு, இடை நிலைகளாக வரும் எழுத்துக்கள் பற்றிய விளக்கம் இந்நோக்கில் அமைந்ததாகும். எனவே எழுத்து, சொல் பற்றிய இலக்கணங்கள் எல்லாமே இப்பொருள் புலப்பாட்டிற்குப் பயன்படத்தக்கவகையிலேயே விளக்கப்பெற்றுள்ளன எனலாம். மொழி பொருள் குறித்து வரும் ஓசைகளேயாதலின் ஓசை அல்லது ஒலிப்புப் பற்றிய செய்திகள் பிறப்பியலில் சுட்டப்படுகின்றன. ஓசைகளும் சொற்பொருளோடு கூட வேறு பொருள்களையும் சுட்டும் ஆற்றலுடையவையாதலின் இம்முறைபற்றி வல்லினம், மெல்லினம், இடையினம் எனவும் பகுத்துணர்த்தப்படுகின்றன.

தொல்காப்பியர் தம் இலக்கணக் கோட்பாட்டிற்கு இவ்வடிப்படைகளைக் கொண்டிருந்தாலும் 'முந்துநூல்கண்டு' என்றதால் தமக்கு முன்னரிருந்த தமிழ் நூல்களோடும் கூடப் பிறமொழிநூல்களும் கண்டு தம் இலக்கணக்கோட்பாட்டை உருவாக்கியிருக்கவேண்டும். குறிப்பாக வடமொழிக் கோட்பாட்டினின்றும் எழுத்துப்பிறப்புப்பற்றிய கருத்து, சொற்பாகுபாடுபற்றிய கருத்து, வேற்றுமைபற்றிய கருத்து, தொகைச்சொல் விளக்கம் பற்றிய கருத்து போன்றவற்றைத் தழுவியுள்ளதாக அறிஞர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர். ஆனால் அவற்றைத் தலைமை இலக்கணக் கோட்பாட்டிற்குத்தக்க கருவிகளான எழுத்து சொல்லிலக்கணங்களை விளக்கக் கைக்கொண்டனரேயன்றி அவற்றையே தலைமை இலக்கணக் கோட்பாடாகக் கொண்டிலர். தமிழுக்கேயுரிய பொருளிலக்கணம் எனும் தலைமைக் கோட்பாட்டினை விளக்குவதே இவர் நோக்கமாதலின் அதற்குத் தக ஏனை இலக்கணங்களையும் இயைபுபட அமைத்து ஓர் இலக்கணக் கோட்பாட்டினை விளக்கிய பெருமை தொல்காப்பியரையே சாரும் எனலாம்.

**யாப்பருங்கலம்**

தொல்காப்பியருக்குப் பின் பிற பண்பாட்டுத்தாக்கம் தமிழகத்தே மேலும் வலுப்பெறத்தொடங்கியதெனலாம். சங்ககாலத்தேயே பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, இளம்போதியார், உலோச்சனார் போன்ற பெயர்களில் வைதிக, பௌத்த, சமணசமயங்களின் தாக்கத்தை உணர்கின்றோம். எனினும் இத்-

தாக்கங்கள் இலக்கியங்களில் பெரிதும் வெளிப்படுத்தப்படவில்லை என்பதும் கருதத்தக்கது. ''யாதும் ஊரே'' எனத் தொடங்கும் புறப்பாடலில் சமணத்தின் தாக்கம், ''நாடாகொன்றோ'' எனத் தொடங்கும் ஔவையார் பாடலில் பௌத்தத்தின் தாக்கம், கலித்தொகைப் பாடல்களில் பலராமன், கண்ணன் முதலான வைதிகக் கடவுளரின் தாக்கம் என இங்கொன்றும் அங்கொன்று-மாகக் காணுகிறோமேயன்றிப் பெரிதும் வழங்கியதாகத் தெரிய-வில்லை. பிறசொல்லாட்சியும் இச்சங்க நூல்களில் குறைவே. எனவே சங்க மரபினை உணர்த்தும் சங்கயாப்பு, பல்காயம் போன்ற இலக்கண நூல்கள் தோன்றின எனினும் இவை முழு-மையாகக் கிடைத்திலவாதலின் இலக்கணக்கோட்பாட்டு வளர்ச்சி-யில் இவற்றின் பங்கு என்ன என வரையறுக்க இயலாதநிலை உள்ளது.

எனினும் சங்க மருவியகாலத்தும் பின்னேயும் பல மாறு-பாடுகள் தோன்றியமையை யாப்பருங்கலமும், காரிகையும் அவற் றின் உரைகளும் நமக்குத் தெளிவுறுத்துகின்றன. யாப்பருங்-கலவிருத்தி இம்மரபு மாற்றங்களைத் தெரித்துக் காட்டும் கண்-ணாடியாக விளங்குகிறது.எனினும் இவ்வுரை ஆழமாக ஆராயப்-படாமலிருப்பது வருந்தத்தக்கது. இக்காலத்தே புதிதாக ''வட-நூல்வழித் தமிழாசிரியர்'' என ஒரு கூட்டத்தார் சுட்டப்படு-கின்றனர். தொல்காப்பியரது ஒரு சாலை மாணாக்கர் என மர-பாகச் சுட்டப்படுகின்ற அவிநயனார் என்பார் தொல்காப்பியக் கோட்பாடுகள் சிலவற்றினின்று மாறுபட்டுத் தம் இலக்கணத்தை அமைத்துள்ள முறைமை நமக்குத் தெரியவருகிறது. தொல்-காப்பியரது அகம், புறம் எனும் கோட்பாடு அவிநயனாரால் அகம், புறம், அகப்புறம், புறப்புறம் என நால்வகையாகப் பல்குகிறது. எழுத்திலக்கணம் ஏழ்வகைப்பாகுபாட்டிற் சொல்-லப்படுகிறது. குற்றியலுகரத்தின் அடிப்படை செய்யுளிசைகளின் அடிப்படையில் ஏழாகிறது. இருபது வண்ணங்கள் நூறு வண்-ணங்களாகின்றன. தொல்காப்பியரது இலக்கணக் கோட்பாட்-டின் கட்டுக்கோப்பு திரிந்து யாப்பிலக்கணத்திற்கு முதன்மை-தருகிற போக்கு இக்காலத்தே காணப்படுகிறது. இதற்குக் காரணமானவராகக் காக்கைபாடினியார் என்ற புலவர் சுட்டப்-படுகிறார். பலவாறாகப் பெருகியிருந்த இலக்கணத்தைத் தொகுத்துச் சொல்லுதல் என்னும் மரபு தோன்றுகிறது. இத-னைத்,

''தொல்காப் பியப்புலவோர் தோன்ற விரித்துரைத்தார்;
பல்காய னார்பகுத்துப் பன்னினார்; - நல்யாப்புக்
கற்றார் மதிக்குங் கலைக்காக்கை பாடினியார்
சொற்றார்தம் நூலுட் டொகுத்து''

(யா. விருத்தி பக் : 19)
(கழகப்பதிப்பு, 1973)

தொல்காப்பியர் செய்யுளிலக்கணத்தில் சொன்ன அடிப்படைகள் பலவும் மாறுகின்றன. இலக்கணக் கலைச் சொற்கள் பலவற்றிற் கும் ஒன்றன்பரியாயமொழிகள் என்ற பெயரில் வடமொழிச்-சொற்கள் வழங்கப்படுகின்றன. (அறுப்பிராசம் - வழியெதுகை புலுதம் - அளபு முதலான வழக்குகள் காண்க) செய்யுளின் அலகுகளை இலகு, குரு எனும் வடமொழிக் கோட்பாட்டின்-வழி அணுகுதலும் முதன்முறையாக இக்காலத்தே காணப்படு-கிறது (யா.வி. ஒழிபியல்). குற்றங்கள் ஆநந்தங்கள் என்ற பெயரில் சுட்டப்படுகின்றன (யா. வி. ஒழிபியல் : பக். 557). இவ் வாறாகத் தொல்காப்பியரின் இலக்கணக் கோட்பாட்டிலிருந்த ஒருமைப்பாடு சிதைந்து ஒரு துறை இலக்கணங்கள் பல்குகின் றன. உவமையியல் கருத்துக்கள் பின்னர் வடமொழித் தண்டி-யாரின் அலங்காரசாத்திரத்தினடிப்படையில் அலங்காரங்களாகப் பல்கிப் பெருகுகின்றன. இவ்வாறாக வடநூல் மரபும், தொகுப்பு எனும் மரபும், தொல்காப்பியரின் இலக்கணக் கூறுகள் தனி நிலை இலக்கணங்களாக மாறும் மரபும் தோன்றுகின்றன.

## வீரசோழியமும், நேமிநாதமும்

இச்சூழல்களில்தான் புத்தமித்திரனாரின் வீரசோழிய நூல் தோன்றுகிறது. முற்கூறப்பட்ட மூவகைப் பண்புகளும் இவ்-விலக்கண நூலுள் பொருந்தியுள்ளமை இந்நூலை ஆய்வார்க்குத் தெளிவாகும். வடமொழி மரபுகளைக் கொண்டு தமிழ் அமைப்-பினை விளக்குவதும் வடமொழி மரபுகளையே எடுத்துரைப்பதும் (சந்திப்படலம்) அலங்காரப் படலம் எனத் தனியே விரித்துரைப்-பதும் தொல்காப்பியரது கருத்துக்களைத் தொகுத்துரைப்பதும் (பொருட்படலம்) இந்நூலிற் காணப்படும் பொதுப் போக்குக-ளாகும். எனினும் முப்பெரும் பகுதிகளாக இருந்த தமிழ் இலக்கணக் கோட்பாட்டினை ஐந்தாகக் காட்டிய முறைமை இந்நூலாசிரியருக்கு உரியது.

தாம் இலக்கணம் எழுதுவதன் நோக்கத்தினையும் அதற்கான அடிப்படைகளையும் தெரிவிக்கும் வகையில் தம் பாயிரத்துள் ''பஞ்ச அதிகாரப் பரப்பைச் சுருக்கியும்'' ''இடையிடையே வடநூன்மரபும் புகன்று கொண்டே - உரைப்பன்,'எனக் குறிப்பிடுகிறார். எனவே இந்நூலினது கோட்பாடுகள் சுருக்கிச் சொல்லுதலும், வடமொழி மரபுகளை எடுத்தோதுதலும் என்றமைகின்றன. பௌத்தம் தமிழகத்தே செல்வாக்குப் பெற்றிருந்த பிற்காலச் சோழர் காலத்தே பௌத்தப் பள்ளிகளில் கல்விகற்கவரும் மாணவர்கட்குத் தமிழ், வடமொழி ஆகிய இரு மொழி இலக்கண, இலக்கிய மரபுகளை உணர்த்தும் நோக்கில் இவ்விலக்கணநூல் ஒரு கையேடு போலச் செயல்பட்டிருக்கவேண்டும். பௌத்த அறிஞர் ஒருவரால் வீரசோழிய நூலைப் பின்பற்றிச் சிங்கள மொழிக்கு ஓர் இலக்கண நூல் இயற்றப்பட்டதாக ஒரு செய்தி குறிப்பிடப்படுகிறது. இக்கூற்றும் மேலே சுட்டிய கருத்துக்கு அரணாக அமைகிறது. தொல்காப்பியரது பொருளதிகார மரபு இந்நூலில் சுருங்க எடுத்துரைக்கப்பட்டிருப்பது தொல்காப்பியரது கோட்பாட்டின் தொடர்ந்த செல்வாக்கினை எடுத்துரைக்கிறது. எனினும் சொல்லதிகாரத்தினைப் பொறுத்தவரை இந்நூல் அவிநயனாரின் கோட்பாட்டினைப் பின்பற்றியுள்ளது,

இம்மரபுகளை ஒட்டியே சைன அறிஞர் குணவீர பண்டிதரால் இயற்றப்பட்ட நேமிநாதமும் அமைந்துள்ளது. வீரசோழியத்திற்குச் சொன்ன அடிப்படைகள் இந்நூலிற்கும் பொருந்துமாயினும், சில மாறுபாடுகளும் உள்ளன. இந்நூலின் இலக்கணக் கோட்பாட்டினை அறிந்துகொள்ளத் தக்க வகையில் இந்நூலின் சிறப்புப் பாயிரம் அமைந்துள்ளது. எழுத்ததிகாரம் ஏழ்வகையில் உணர்த்தப்பட்ட தன்மையினை.

> ''எண்ணும் பெயரும் முறையும் இயன்றதற்பின்
> நண்ணிவரு மாத்திரையும் நற்பிறப்பும் - கண்ணா
> வடிவும் புணர்ச்சியும் ஆயவோர் ஏழும்
> கடியமரும் கூந்தலாய் காண்''

என முதல் வரும் வெண்பா எடுத்துக் கூறுகிறது. ஏழ்வகையிற் சொல்லப்படுமெனக் கூறினும் எழுத்ததிகார அமைப்பு பெரும்பாலும் வீரசோழிய அமைப்பினையே பின்பற்றியமைந்துள்ளது.

வடமொழி மரபுகள் இவ்வதிகாரத்தே சொல்லப்பட்டிருப்பினும் இவை பற்றிய குறிப்பு பாயிரத்துள் இல்லை.

இந்நூலின் கோட்பாட்டிற்கான இரண்டாவது அடிப்படை தொல்காப்பியத்தைப் புரிந்துகொள்ள உதவும் கையேடு போன்றது இந்நூல் என்பதாகும். இதனைச் சிறப்புப் பாயிரம் (இரண்டாம் செய்யுள்)

''தொல்காப் பியக்கடலிற் சொற்றீபச் சுற்றளக்கப்
பல்காற்கொண் டோடும் படகென்ப - பல்கோட்டுக்
கோமிகா மற்புலனை வெல்லும் குணவீர
நேமிநா தத்தி னெறி''

எனக் குறிக்கிறது.

தொல்காப்பியம் எனும் சொல் தீவினைக் கடக்க உதவும் படகாக இந்நூல் குறிப்பிடப்படுகிறது. எனவே தொல்காப்பியச் சொல்லதிகாரச் சுருக்கமாக இதன் சொல்லதிகாரத்தைக் குறிக்கலாம். தொல்காப்பியரது இலக்கணக் கோட்பாட்டு மாபில் சொல்லிலக்கணத்தை மட்டுமே இந்நூல் எடுத்துக்கொண்டுள்ளது. தொல்காப்பியரது தலைமையான பொருளிலக்கணக் கோட்பாடு இந்நூலாசிரியரால் எடுத்துக்கொள்ளப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. பௌத்த மதத்தினரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒருகோட்பாடு ஒருக்கால் சமணசமயத்தாரால் புறக்கணிக்கப்பட்டதோ என எண்ணத் தோன்றுகிறது. இதனாலேயே நன்னூலிலும் - சிலர் நன்னூல் ஐந்திலக்கணமும் கொண்டது என வாதிட்டாலும் - இப்பகுதி காணப்படவில்லையோ என்பது சிந்தித்தற்குரியது. நேமிநாதம் எழுத்ததிகாரத்தைப் பொறுத்தவரை வீரசோழியத்தைப் பின்பற்றியிருந்தாலும் சொல்லதிகாரத்தைப் பொறுத்தவரை அவிநயனாரைப் பின்பற்றி உரைக்கும் வீரசோழியத்தைப் பின்பற்றாது தொல்காப்பியத்தையே பின்பற்றியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

## நன்னூல்

கி.பி. 13ஆம் நூற்றாண்டில் தோன்றிய நன்னூல் சமண சமயத்தவராகிய பவணந்தி முனிவரால் இயற்றப்பட்டது. வழி. எனவே தொல்காப்பியருக்குப்பின் மொழியைப் பற்றிய தெளிவான அறிவோடு கூடிய இலக்கணக்கோட்பாடு ஒன்று தோன்றியதாக இவ்வளர்ச்சி நிலைகளைக் கொண்டு கூறமுடியவில்லை.

நூலாகிய இந்நூல் தொல்காப்பியர், அவிநயனார், இளம்பூரணர் முதலானோர் கருத்துக்களைத் தொகை, வகை, விரி எனும் முறைமைகளில் தந்துள்ளது. கோட்பாட்டைப் பொறுத்த அளவில் இஃது ஐந்திலக்கணத்தினையும் உணர்த்தவந்ததாகச் சிறப்புப்பாயிரம் குறிப்பிட்டாலும் இன்று நமக்கு இரண்டு அதிகாரங்களே கிடைத்துள்ள நிலையில் இதுபற்றி முடிவாகக் கூற இயலவில்லை. எனினும் இவ்விரண்டதிகாரங்களைப் பொறுத்தவரை பெரும்பாலும் தொல்காப்பியத்தையே தழுவி அமைந்துள்ளதெனலாம். இந்நூலில் பதவியல், என்ற பகுதி புதியதாகச் செய்யப்பட்டதாகும். வீரசோழியத்துள் சொல்லிலக்கணம் பற்றிய பகுதிகள் வடமொழிக் கோட்பாட்டினடிப்படையில் சொல்லப்பெற்றிருப்பினும் தாதுப்படலம் எனும் இயற்பகுதியை ஒட்டிப் பதவியல் அமைந்துள்ளது. இருப்பினும் வீரசோழியவாசிரியர் மேற்கொண்ட பாகுபாட்டு முறைமைகள் நன்னூலாரால் ஏற்றுக்கொள்ளப்பெறவில்லை. இதனால் வீரசோழியத்தோடு ஒப்பிடும்போது நன்னூலில் வடமொழிக் கோட்பாட்டின்தாக்கம் குறைவு எனச்சொல்லலாம். மேலும் வீரசோழியம், நேமிநாதம் ஆகியவற்றுள் வடமொழி மரபுகள் தமிழ் மரபுகளோடு விரவிச் சொல்லப்பட நன்னூல் அவற்றையெடுத்தோதாமை குறிப்பிடத்தக்கது. இதனால் வடநூல்வழித் தமிழைநோக்கும் போக்கு குறையத்தலைப்படுகிறது எனச் சொல்லலாம். மீண்டும் தொல்காப்பிய மரபிற்கே திரும்பும் போக்கினை நன்னூலாசிரியரும் நேமிநாத ஆசிரியரும் தொடங்கிவைக்கின்றனர் எனக் கருத இடமிருக்கின்றது. இருவரும் சமணராகவிருத்தல் இதற்குக் காரணமாகுமா எனச் சிந்தித்தற்குரியது. இவ்வாறு தொல்காப்பியத்துக்குப் பின் தோன்றிய இலக்கண நூல்களெல்லாம் அதன் கட்டுக்கோப்பான இலக்கண அமைப்பினின்றும் பிறழ்ந்து பிறமரபுகளை விரவிக்கூறுதலும், ஒருசார் இலக்கணத்தை மட்டும் ஏற்றுப் பிறகூறுகளை விடுத்தலும், ஒருசார்இலக்கணத்தையே தனி இலக்கணக் கோட்பாடாக வளர்த்தலும் ஆகிய தன்மைகள் கொண்டு அவ்வக்காலச் சமுதாய, சமயச் சூழல்கட்கேற்ப அமைந்துவந்துள்ளன என ஒருவாறு இலக்கணக் கோட்பாட்டு வளர்ச்சிப்போக்கைச் சுட்டலாம். இவ்வளர்ச்சி நிலைகளில் தொகுத்தலும் சுருங்க உரைத்தலும் ஆகிய உத்திகளே பின்பற்றப்பட்டு வந்துள்ளன என்பதும் தெளிவாகிறது. நன்னூலுக்குப் பின்வந்த நூல்களும் பெரிதும் நன்னூலைப் பின்பற்றிய பாங்கினையே பார்க்கிறோம்.

# எழுத்துச் சிக்கல்

அ. சீநிவாசன்

4

0. தமிழ் இலக்கணம் இன்று பன்முகப்பார்வையில் ஆய்வு செய்யப்பட்டுவருகிறது. இலக்கண ஆய்வாளர்கள், இலக்கணத்-தையும் உரையாசிரியர்கள் கருத்தையும் அடிப்படையாகக்-கொண்டு ஆய்வு செய்து வருகின்றனர். மொழியியல் ஆய்வாளர்-கள், மொழியின் ஒலிப்புத்தன்மையை அடிப்படையாகக்கொண்டு ஆய்வு செய்கின்றனர். பழந்தமிழ் இலக்கணத்தை அது தோன்-றிய காலக்கட்ட ஒலிக்குறிகளை (Signs) கல்வெட்டு எழுத்துக்-களை அடிப்படையாகக்கொண்டு ஆய்வு செய்யவும் வழி இருக்-கிறது. இவ்வாய்வுரை இலக்கணம், மொழியியல், கல்வெட்டு எழுத்துக்கள் என்ற மூன்றையும் அடிப்படையாகக்கொண்டு எழு-தப்பட்டுள்ளது.

## 1. குறில் - 5 நெடில் - 7

தொல்காப்பியர் எழுத்துக்களை முதலெழுத்து, சார்-பெழுத்து என்று வகைப்படுத்தியுள்ளார். முதலெழுத்து உயிர், மெய் என இருவகைப்படும். உயிர் எழுத்துக்கள் குறில், நெடில் என இருவகைப்படும். அ, இ, உ, எ, ஒ என்பன குறிலாகும்.

ஆ, ஈ, ஊ, ஏ, ஓ, ஐ, ஔ என்பன நெடிலாகும். குறில் ஐந்திற்கு நெடில் ஏழா? என்ற வினா எழுகிறது. அ/ஆ; இ/ஈ; உ ஊ; எஏ; ஒஓ; இவை குறிலும் குறில் சார்ந்த நெடிலுமாகும். ஐ, ஔ[1] இரண்டும் நெடிலா? அவற்றிற்குரிய குறில் எழுத்துக்கள் எவை? தொல்காப்பியர் 'அகர இகரம் ஐகாரம் ஆகும்' (தொல். 54) என்றும், 'அகர உகரம் ஔகாரம் ஆகும்' (55) என்றும் கூறியுள்ளார். அஇ > ஐ என்றும்; அஉ > ஔ என்றும் கருத இவ்விருநூற்பாக்களும் இடந்தருகின்றன. அஇ, அஉ இரண்டும் இரண்டு மாத்திரைகளுக்குரிய எழுத்துக்களாகக்கொண்டு ஐ, ஔ இரண்டும் முறையே இரண்டு மாத்திரை பெறும் என்று கருதியிருத்தல் வேண்டும். இருகுறில் இணைந்த அதாவது அஇ, அஉ போன்று இணைந்து வருவதைக் கூட்டு ஒலி '(Dipthong) என்று கூறுவர். ஆனால் தொல்காப்பியர் பிறிதோரிடத்தில்

> அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
> ஐஎன் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்[2] (56)

என்றும் விளக்கியுள்ளார். அவர் கருத்துப்படி அய் > ஐ ஆகலாம். இச்செய்திகளால் இன்று எழுதப்பட்டு வரும் ஐகாரம் என்பது இருகுறில் (அஇ) இணைந்தும், குறில் ஒற்று (அய்) ப் பெற்றும் வரும் என்பது தெளிவாகிறது. ஒலி நிலையில் அஇ, அய் என்பது குறி (Sign) நிலையில் 'ஐ' என்று எழுதப்பட்டுள்ளது. இக்குறி-'ஐ' பழந்தமிழ்க் கல்வெட்டுக்களில் காணப்படவில்லை. கி.பி. 5ஆம் நூற்றாண்டில் 'ஐ'க்குரிய குறியைக் )_|_ (²காணமுடிகிறது.

அப்படியானால் தொல்காப்பியர் 'ஐ' என்ற நெடில் எழுத்தை எப்படி எழுதியிருக்கமுடியும் என்ற வினா எழுகிறது. தமிழில் உள்ள ஐகாரச் சொற்களைப் பிரித்துப் பார்க்கும்பொழுது ஒற்று + ஐ (கண்ணனை > கண்ணன்+ஐ) ஆகப்பிரித்து 'ஐ' காரம் இரண்டு மாத்திரை பெறுவதாக ஆய்வாளர்கள் எழுதியும் பேசியும் வருகிறார்கள். தமிழ்ச் சொற்களில் இடம் பெறும் 'ஐ' காரம் இரண்டு மாத்திரை பெறுவது அல்ல. அச்சொற்களில் இடம்பெறும் ஒலி குறிலும் ஒற்றும் ஆகும்.

1. ஐயர் > அய்யர் > அச்சன் > அத்தன்
2. இளையன் > இளய் + அன்
3. அன்னை > அன்ன் + அய்

பெயர் விளி ஏற்கும் மரபினைக் கவனித்தால் அய் > ஆய் ஆவதைக் காணலாம். சான்றாக

1. அன்னை > அன்னய் > அன்னாய்
2. பாவை > பாவய் > பாவாய்

இச்சான்றுகள் வழி மொழி முதல், இடை, கடைகளில் வரும் 'ஐ' காரச்சொற்களைக் குறிலும் ஒற்றுமாகவே (அய்) கொள்ள வேண்டும் என்பது பொன். கோதண்டராமன் கருத்து.[3] செ.வை. சண்முகம், கொண்டல் மகாதேவன், க. முருகையன் போன்றோரும் இக்கருத்தினரே.

## 2. ஐ. எய்

தமிழில் இரண்டு மாத்திரை பெறும் 'ஐ' காரத்திற்கு அரை மாத்திரை பெறும் 'ய'கர ஒற்று எதுகையாகுமா?

''கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்'' (குறள். 774)

கைவேல் என்ற சொல்லில் இடம்பெறும் 'ஐ' (க் + ஐ) இரண்டு மாத்திரை பெறும் நெடிலாகும். அது யகர ஒற்றிற்கு எவ்வாறு எதுகையாகும். 'கைவேல்' என்ற சொல்லை ஒலிப்பு நிலையில் உள்ளதுபோல் குறிலும் ஒற்றுமாக 'கய்' வேல் என்று கொண்டால் அது 'மெய்வேல்' என்பதற்கு எதுகையாகும். இதுதான் தமிழ்மொழியின் அமைப்புக்கும் பொருந்தும். ஆனால் ஒலிப்புத்தன்மைக்கும் (கய்) குறியீட்டுக்கும் (கை) தொடக்கக் காலத்திலேயே வேறுபாடு ஏற்பட்டுவிட்டது. இன்று நாம் எழுதும் 'கை' என்ற எழுத்துக்குறி தொடக்கக் காலத்தில் எழுதப்பட்ட

என்ற குறியின் வளர்ச்சி நிலையாகும்.[4] 'ஐ' ஈரளபு இசைக்கும் நெட்டெழுத்தாகும் (4) என்ற நூற்பா தமிழில் 'ஐ' என்ற தனி எழுத்து இருப்பது போன்ற போலித்தன்மையை உருவாக்கிவிட்டது.தமிழில் 'ஐ' என்ற தனி நெட்டெழுத்து இல்லை என்பதற்கு மேலும் ஒரு சான்று தரலாம். தமிழில் 'ஒரு' நிலைமொழியில் நிற்க வருமொழி முதலில் உயிர் எழுத்துக்கள் பத்து மட்டுமே இடம்பெறும். 'ஐ' 'ஔ' என்ற நெட்டெழுத்துக்கள் இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

### 3. எய், எஃ

''செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில்'' (குறள். 759)

இக்குறளில் இடம் பெறும் யகர ஒற்றிற்கு முப்பாற்புள்ளி எதுகையா? தொல்காப்பியர் முப்பாற்புள்ளியைத் தனி எழுத்தாகக் கருதவில்லை. அவை குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் என்று மூன்றுக்கும் உரியவை. இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் முப்பாற்புள்ளியை ஆய்த எழுத்தாகவும், ஆய்தம் மெய்யெழுத்துப் போன்ற தன்மை உடையதாகவும் விளக்கியுள்ளனர். ஆனால் பேராசிரியர் குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் என்ற மூன்றும் புள்ளி பெற்று வரும் என்று தக்க சான்றுகளுடன் நிறுவி முப்பாற்புள்ளி ஆய்தமாகாது என்று விளக்கியுள்ளார்.[5] கல்வெட்டுக்களில் இம்முப்பாற்புள்ளி ஆய்தம் என்ற தனி எழுத்தைக் குறித்து வரவில்லை. மாறாக, இம்முப்பாற்புள்ளி 'இ' கரத்தைக் குறிக்கும் குறியாகப் (Sign) பயன்படுத்தப்பட்டுள்ளது.[6] 'அகர இகரம் ஐகாரம் ஆகும்' (54), 'இகர யகரம் இறுதி விரவும்' (58) என்ற நூற்பாக்களை இங்கு மனதிற்கொள்ள வேண்டும். அஃது, இஃது, ஒஃகு, அஃகு, வெஃகு, எஃகு என்ற சொற்களின் அடிச்சொற்கள் முறையே அய், இய், ஒய், அய், வெய், எய் என்றும் - து சொல்லாக்க உருபு என்றும் இரா. கோதண்டராமன்[7] பிரித்துக் காட்டியிருப்பது இவண் குறிப்பிடத்தக்கது. இதை ஏற்றுக்கொண்டால் முப்பாற்புள்ளிக்கும், யகர ஒற்றுக்கும் இடையே உள்ள தொடர்பினை அறிந்துகொள்வதில் சிக்கல் ஏதும் இராது. இக்குறளில் இடம்பெறும் முப்பாற்புள்ளி 'ய'கர மெய்க்குரிய ஓசையைக் குறிக்க வந்த இகரக் குறியாகவே கொள்ளவேண்டும். அஃது, இஃது, எஃகு, என்ற சொற்களில் இடம்பெறும் முப்பாற்புள்ளி ஆய்த எழுத்தாகாது; அது இகரத்தின் குறியீடே ஆகும்.

### 4. பஃது, பத்து, பது

தமிழில் பத்தின் மாற்று வடிவங்களாகப் பஃது, பது என்ற இரு வடிவங்களையும் காணலாம். தெலுங்கில் பத்து என்பது 'பதி' என்று வழங்கப்படுகிறது. பஃது என்ற சொல்லில் பஃ-

யை அடிச்சொல்லாகவும் - துவைச் சொல்லாக்க உருபாகவும் கொள்ளலாம். அவ்வாறு கொண்டால் பஃ-என்பது 'பயி' என்ற உச்சரிப்பிற்குரிய குறியீடாகும். தமிழிலும் பயித்துப் பத்தா நூறு என்று வழங்குவதைக் காணலாம். இங்கு இடம்பெறும் பயிது என்பதைப் பஃது என்று தொடக்க காலத்தில் எழுதியிருத்தல் வேண்டும். இவ்வாறு கொண்டால் பஃது என்பதில் இடம்பெறும் முப்பாற்புள்ளியை ஆய்தமாகக் கருத இடமில்லை; இகரமாகவே கருத இடமுண்டு.

> ''ஒன்று முதலாகப் பத்தூர்ந்து வரூஉம்
> எல்லா எண்ணும் சொல்லுங் காலை
> ஆனிடை வரினும் மான மில்லை
> அஃதென் கிளவி ஆவயிற் கெடுமே
> உய்தல் வேண்டும் பஃகான் மெய்யே'' (200)

அஃது, பஃகான் சொற்களில் இடம்பெறும் முப்பாற்புள்ளியை அஇ > அய்; பஃ > பய் என்று குறிலும் ஒற்றுமாகவே பழங்-காலத்தில் உச்சரிக்கப்பட்டிருத்தல் வேண்டும். சுட்டுப் பொருண்-மையை உணர்த்துகின்ற அது, இது என்பதற்குப் பதிலாக நீலகிரியில் வழங்கும் குறும்ப மொழியில் அயி (> அய்-இ) இயி (< இய்-இ) என்ற வழக்கு இன்றும் உள்ளது என்பது இவண் குறிப்பிடத்தக்கது.[8]

## 5. ஆய்தக் குறி

இருபது, முப்பது, நாற்பது என்ற எண்ணுப் பெயர்களில் 'பது' இடம்பெறக் காணலாம். நிலைமொழி ஈற்றில் பது நிற்க வருமொழியில் ஒன்று இரண்டு என்ற எண்கள் புணருமானால் (475)

இருபது + ஒன்று > இருபத்தொன்று
முப்பது + ஒன்று > முப்பத்தொன்று
நாற்பது + ஒன்று > நாற்பத்தொன்று

என்று புணர்ச்சியில் மாற்றம் அடையக் காணலாம். பது என் பதில் ஆய்தம் இடம்பெறும் என்பது தொல்காப்பியர் கருத்து.

அவ்வாய்தம் ஒரு புள்ளி உடையதா? முப்பாற்புள்ளி உடையதா? என்பதே இங்குக் கேள்வி. தொல்காப்பியத்தில் முப்பாற்புள்ளி இடம்பெறக் காணலாம்.

இருபஃது + ஒன்று > இருபத்தொன்று
முப்பஃது + ஒன்று > முப்பத்தொன்று
நாற்பஃது + ஒன்று > நாற்பத்தொன்று

என்று முப்பாற்புள்ளியை ஆய்தமாகக்கொண்டு ஆய்தம் கெட்டு ஒற்று மிகுவதாகக் கூறுவது பொருத்தமாக இல்லை. ஆய்தத்-திற்கு-முப்பாற்புள்ளிக்குப் பதிலாக ஒருபுள்ளியிட்டு அ•து, இ•து என்று எழுதுவதே பொருத்தமாகலாம். ஏனெனில் 'உள்ளதன் நுணுக்கம்' தானே ஆய்தம். மேலும் மக்கள் பேச்சு வழக்கில் இல்லாத ஓர் ஒலி இலக்கண, இலக்கியத்தில் மட்டும் இடம்-பெற்றிருப்பதாகக் கருதுவது முற்றிலும் முரண்பாடான ஒன்-றாகும்.

தொல்காப்பியத்தை அடுத்துத் தோன்றிய அவிநயம் ஆய்தம் பற்றிய ஒரு குறிப்பைத் தருகிறது.

''ஆய்தமும் யவ்வும் அவ்வொடு வரினே
ஐயென் எழுத்தொடு மெய்பெறத் தோன்றும்''[9]

என்ற நூற்பா ஆய்தம் முப்பாற்புள்ளி பெறும் என்று தெளிவு-படுத்துகிறது. ஆனால் அதன் ஓசை இகரவோசை என்பது இவண் குறிப்பிடத்தக்கது. (1) அஃ > ஐ (2) அய் > ஐ. இதி-லிருந்து ஒரு குறிப்பிட்ட காலத்தில் இகர ஒலிக்குரிய குறியாக வழங்கப்பட்ட முப்பாற்புள்ளி (ஃ) அவிநயத்தார் காலத்தில் ஆய்தத்திற்குரிய குறியாக மாற்றம் பெற்றுவிட்டது என்பது தெளிவாகிறது. எனினும் அவிநயனார் ஆய்தத்தை இகரத்தின் மாற்றொலியாகவே கருதினார் என்பதும் இவண் குறிப்பிடத்-தக்கது.

உரையாசிரியர்களும் மொழியியல் ஆய்வாளர்களும் கருத்து வேறுபாட்டிற்குரிய முப்பாற்புள்ளியை ல, வ, ள ஒலிகளுக்குரிய மாற்றொலியாகக் கருதுகின்றனர்.[10] இத்தகைய மாற்றுச் சிந்த-னைக்குத் தொல்காப்பியத்தில் இடமுள்ளது. கருத்து வேறுபாட்-

டிற்குரிய இந்நூற்பாக்கள் (370, 380, 400) காலத்தால் பிற்பட்டதாக இருக்கலாம். இது மேலும் ஆய்வுக்குரியது.

இன்று ஆய்த எழுத்து ஆங்கிலத்தில் உள்ள F ஒலிக்கு இணையானதாகக் கருதப்படுகிறது. ஆங்கிலச் சொற்களைத் தமிழ் எழுத்துக்களில் எழுதும்பொழுது ஃபைன், எம்ஃபில், ஃபேமிலி, ஃபார்முலா காஃபி, ஃபேஷன், கம்ஃபர்ட், ஃபேன், ஃபோன், டிராஃபிக், ஃபீஸ், டிரான்ஸ்ஃபர், ஃப்ரெண்ட்ஸ், ஃபோட்டோ, சேஃப்டி, ஃபைனான்ஸ், ஃபேக்டரி, ஃபைல், ஃபோட்டோ என்று ஆய்த எழுத்தைப் பயன்படுத்தி எழுதுவதை இன்றுக் காணலாம்.

## 6. முடிவுரை

தமிழ் நெடுங்கணக்கில் 'ஐ' என்ற நெட்டெழுத்துக்கு இடமில்லை. இன்று வழக்கில் உள்ள உயிர்க்குறிலாகிய 'இ' கரத்தைப் பழங்காலத்தில் முப்பாற்புள்ளியிட்டு வழங்கினர் என்பதற்கு கல்வெட்டு எழுத்து சிறந்த சான்றாகும். பஃது என்பது 'பயிது' என்பதன் குறியாகும். -து சொல்லாக்க உருபாகும்.

'இகர யகரம் இறுதி விரவும்' என்ற விதிப்படி முப்பாற்புள்ளியை இகரக்குறியாகவே கொள்ளவேண்டும். உள்ளதன் நுணுக்கம் ஆய்தம். எனவே குறியதன் முன்னர் ஆய்தம் ஒரு புள்ளியிட்டு அ·து, இ·து. என்பது போன்றே தொடக்கக்காலத்தில் எழுதப்பட்டிருக்க வேண்டும். இகர ஒலிக்குரிய குறியாக இடம்பெற்ற முப்பாற்புள்ளி (ஃ) பிற்கால இலக்கணங்களால் ஆய்த எழுத்தாகக் கருதப்பட்ட போதிலும் அதன் ஓசையை இகர ஓசையாகவே கொண்டனர் என்பது இவண் குறிப்பிடத்தக்கது.

### குறிப்புகள்

1. தமிழ்நெடுங்கணக்கில் 'ஐ' 'ஔ' இரண்டையும் தனி எழுத்தாகக் கருதமுடியாது. 'ஐ' காரம் மட்டுமே இங்கு ஆராயப்படுகிறது. 'அகர உகரம் ஔகாரம் ஆகும்' என்ற நூற்பாவை 'அகர உகரம் அவ்காரம் ஆகும்' என்று கொள்வதே பொருத்தமாகும். இதைப்பற்றி விரிவாகப் பார்க்க இடமிருக்கிறது.

2. இந்நூற்பா கீழ்வருமாறு அமைந்திருத்தல் வேண்டும் என்பது வ.உ. சிதம்பரம்பிள்ளை கருத்து.

> ''அகரத் திம்பர் யவகரப் புள்ளியும்
> ஐயௌ நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்''

திரு. பி.சா. சுப்பிரமணியசாத்திரியார் அ + ய் > அய் என்று வருவது போன்று அ + வ் > அவ் என்பதற்கும் நூற்பா இருந்திருத்தல் வேண்டும்.

> 'அகரத் திம்பர் வகரப் புள்ளியும்
> ஔவென் நெடுஞ்சினை மெய் பெறத் தோன்றும்'

என்ற ஒரு சூத்திரம் ஏடெழுதுவோரால் விடப்பட்டிருக்க-வேண்டும் என்பர்.

2. அ. திருநாதர் குன்றுக்கல்வெட்டு, கல்லெழுத்துக்கலை, ப.43

3. 1. பொன். கோதண்டராமன், இலக்கண உலகில் புதிய பார்வை, ப. 39.

2. செ.வை. சண்முகம், எழுத்திலக்கணக் கோட்பாடு, ப 91. ஐகாரம் 'அய்' என்பதோடோ, 'அஇ' என்பதோடோ வேற்றுநிலை வழக்கில் வந்து பொருள் வேறுபடவில்லை. 'ஐ' காரம் நெட்டெழுத்தாயினும் ஏனைய நெட்டெழுத்-துக்கள் போல மெய்யெழுத்துப் பெற்று முடிவதில்லை. ஆர், ஈர், ஊர், ஏர், ஓர் ஆனால் ஐர் இல்லை. பால், தேள், போல், கேள், கோள், ஆனால் ஐள் / ல் இல்லை.எனவே மற்றைய நெட்டெழுத்துக்களிலிருந்தும் வரன்முறை வேறுபாடு உடையதால் தனி எழுத்தாகக் கொள்ளாது கூட்டொலியாகக் கருதலாம்.

3. கொண்டல் சு. மகாதேவன், ஐகார ஔகாரங்கள்; மறு மதிப்பீடு, ''ஒரு காலத்தில் கூட்டு வடிவங்களாகக் குறுக்கி ஒலயில் எழுதப்பட்டுவந்த அ / ய், அ / வ் தொடர்ஒலிக-ளாய் வடமொழிச் சந்தியட்சரங்களான ஐ, ஔ ஒலிகள் போலக் கருதிக்கொண்ட தொல்காப்பியரும் அவற்றய் உயிர் வரிசயில் வய்த்து எண்ணியதோடு இரண்டு மாத்தி-ரய்கொண்ட நெட்டுயிர்கள் என்றும் அறிவித்துவிட்டார்.''

4. க. முருகய்யன், ஐகார ஒளகாரங்களின் ஒலி நிலை ''பிராமி எழுத்துக்களைத் தமிழ் மொழியில் எழுதப் பயன் படுத்தியபோது அதில் உள்ள ஐ, ஒள ஒலிகளையும் ஏற்றுக்கொண்டிருக்கலாம். அந்த அடிப்படையிலேயே தமிழ் நெடுங்கணக்கில் ஐ, ஒள இடம்பெற்றிருக்கலாம்,,.

4. பார்க்க, நடன. காசினாதன், கல்லெழுத்துக்கலை.

5. தொல். எழுத்து. இளம்பூரணம், கு. சுந்தரமூர்த்தி பதிப்பு, ப. 19.

6. Iravatham Mahadevan, Corpus of the Tamil Bhrami Inscriptions, கல்வெட்டுக் கருத்தரங்கு, ப. 74
கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த யானைமலை, திருப்பரங்குன்றம் கல்வெட்டுக்களில் 'இ' கரத்திற்கு முப்பாற்புள்ளி (ஃ) யிட்டு எழுதியுள்ளதைக் காணலாம்.

7. இரா. கோதண்டராமன், தமிழ்ப் பொழில் (பிப்-மார்ச் '71) பக். 341 - 342.

8. இரா. கோதண்டராமன், தமிழ்ப் பொழில் (பிப் மார்ச் '71) பக். 340 - 341.

9. யாப்பருங்கலம், ப. 29.
கஃசு, கஃதம், கஃசம் என அகரத்தோடு ஆய்தம் வந்து கைசு, கைதம், கைசம் என்னும் ஐகாரத்தின் பயத்தனவாயினவாறு.

10. கல் + தீது > கஃறீது.
அவ் + கடிய > அஃகடிய
முள் + தீது > முஃடீது

# தொகைச்சொற்களில் காணப்பெறும் சிக்கல்கள்

ஏ. ஆதித்தன்

## 5

தொகைச்சொல் விளக்கத்தில் தொல்காப்பியத்திற்கும் பிற இலக்கணநூல்களுக்குமிடையே வேறுபாடுகள் காணப்பெறுவ-தால் இளங்கலையில் நன்னூலைக் கற்றுவரும் மாணவர்களுக்கு முதுகலையில் தொல்காப்பியத்தினைக் கற்கும் நிலையில் சில சிக்கல்கள் தோன்றுகின்றன. அவற்றை ஆய்ந்தறிவதே இக்கட்-டுரையின் நோக்கமாகும்.

### தொகையின் இலக்கணம்

தொல்காப்பியர் தொகையின் இலக்கணத்தை வெளிப்-படையாகச் சுட்டவில்லை. தொகைக்குரிய பண்பாகச் சிலவற்-றைத் தொல்காப்பியத்தினின்றும் உய்த்துணரமுடிகின்றது. தொல்காப்பியத்திற்குப் பின்வந்த இலக்கணநூல்கள் தொகை-யின் இலக்கணத்தைத் தெளிவாகச் சுட்டியுள்ளன.

தொல்காப்பிய முறைமைப்படி உருபோ அன்றிச் சொல்-லோ இரு சொற்களிடையே தொக்கு வந்து, அவை இரண்டும்

பிளவுபட்டிசைத்தலின்றிப் (தொ. சொ. 420) பெயரின் ஒத்த பெயர்த்தொடராகச் (தொ. சொ. 67) செயலாற்றுவதையே தொகையெனக் கருதலாம.

தொல்காப்பியம் தொகையின் பண்புகளாக உருபு அன்றிச் சொல் தொக்கு வருதல், ஒரு சொன்னீர்மையதாய் அமைதல், பெயரின் ஒத்த பெயர்த் தொடராகச் செயல்படுதல் ஆகியவற்றைக் குறிப்பிட, பிற இலக்கணநூல்கள் உருபு அன்றிச் சொல் தொக்கு வருவதனையே முதன்மைப் பண்பாகக் குறிப்பிடுகின்றன.[1] இவை முற்றிலும் மாறுபட்ட தொகைக் கோட்பாட்டினைச் சுட்டுவதால் பல தவறான சான்றுகள் இலக்கணக்காரர்களாலும் உரையாசிரியர்களாலும் தரப்பெற்றுள்ளன.[2]

## தொகையின் வகை, நிலைக்களன்

தொல்காப்பியம் (தொ. சொ. 412) வேற்றுமைத்தொகை, வினைத்தொகை, உவமத் தொகை, பண்புத்தொகை, உம்மைத் தொகை, அன்மொழித்தொகை என அறுவகைத் தொகைகளைக் குறிப்பிடுகின்றது. இது முன்னர்க் குறிப்பிடப்பெற்ற மூன்று பண்புகளின் அடிப்படையில் தொகை அமையப்பெறும் எனக் குறிப்பிடுகின்றது. பிற இலக்கண நூல்கள் பெரும்பான்மையும் உருபு அன்றிச் சொல் தொக்கு வருதலை மட்டுமே தொகையின் நிலைக்களனாய்ச் சுட்டுகின்றன.

## தொகையின் வைப்புமுறை

தொல்காப்பியம்(தொ. சொ. 412) வேற்றுமைத் தொகை, உவமத் தொகை, வினையின் தொகை, பண்பின் தொகை, உம்மைத் தொகை, அன்மொழித் தொகை என்ற முறையில் தொகைகளை விளக்குகின்றது.

அனைத்து இலக்கணநூல்களும் முதலில் வேற்றுமைத் தொகையினையும் இறுதியில் அன்மொழித் தொகையினையும் கூறுகின்றன. ஏனைய நான்கு தொகைகளின் வைப்புமுறையில்தான் வேறுபாடு காணக்கிடைக்கின்றது. தொகைப் பாகுபாட்டிற்கு முறையான அடிப்படை இன்மையால் பண்பு, உவமை, வினை, உம்மைத் தொகைகளின் வைப்பு முறையில் திரிபு காணப்படுகின்றது.

## தொகைகளின் விளக்கம்

தொல்காப்பியம் குறிப்பிடும் அறுவகைத் தொகைகளையும் தொல்காப்பியச் செய்திகளினின்று கிடைக்கப்பெற்ற தொகையின் இலக்கணத்தையும் பொருத்திக் காணலாம்.

## வேற்றுமைத் தொகை

தொல்காப்பியம் (தொ. சொ. 413) வேற்றுமைத் தொகையின் பண்பினைக் கூற, பிற இலக்கணநூல்கள் வேற்றுமைத் தொகையின் நிலைக்களன்களைக் குறிப்பிடுகின்றன. தமிழிலுள்ள வேற்றுமை உருபுகள் தொக்குவந்து இரு சொற்கள் பிளவுபட்டிசைத்தலின்றிப் பெயர்த்தொடராகச் செயலாற்றுங்கால் அது வேற்றுமைத் தொகை எனப்படும்.

வேற்றுமை உருபு மட்டுமின்றி அதன்பயனாகிய பெயரெச்சமும் தொக்குவரும் நிலையில் அதனை உருபும் பயனும் உடன் தொக்கதொகை என்பர் உரையாசிரியர்.

## உவமத் தொகை

உவம உருபு தொக்கிவர, உவமையும் உவமிக்கப்படும் பொருளும் விட்டிசைத்து நில்லாதுச் செறியநின்று, பெயர்த்தொடராகச் செயல்படுவது உவமைத்தொகை எனப்படும்.

உவமத்தொகைக்குச் சான்றாகப் 'பொன்மேனி' என்பது தரப்பெற்றுள்ளது. இத்தொடரின் புதைவடிவமாகிய முற்றுவாக்கியம் 'மேனி பொன்னைப் போன்றது' என்பதாகும். ஈண்டு இரண்டாம் வேற்றுமை உருபும் அதன் பயனாகிய உவம உருபென்னும் பெயரெச்சமும் தொக்கு வருகின்றன. இச்சான்றில் வேற்றுமை உருபும் அதன் பயனும் தொக்குவர, வேற்றுமை உருபின் பயனாகிய உவம உருபிற்கு முதலிடம் தந்து இதனை உவமத்தொகையாகக் கருதுதல் பொருந்து மாறில்லை.

பொருட்சிறப்பினைக் கருதி உவம உருபிற்கு முதன்மை இடமளித்தால் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க

தொகையிலும் அதன் பயனுக்கு முதன்மையிடம் கொடுக்க வேண்டிய நிலை ஏற்படும். எனவே உவமத்தொகையினை வேற்றுமைத் தொகையாகவோ அன்றி வேற்றுமைத் தொகையின் ஒரு வகையாகவோ கருதுதல் ஏற்புடையதாகும்.

## உம்மைத் தொகை

இரு சொற்களுக்கிடையே 'உம்' உருபு தொக்குவந்து ஒரு சொன்னீர்மையதாய் அமைந்து, பெயர்த்தொடராகச் செயல்படும் நிலையில் அது உம்மைத்தொகை எனப்படுகின்றது. உம்மைத்தொகை ஆறுநிலைகளில் அமையப்பெறும் என்பதனைத் தொல்காப்பியம் (தொ. சொ. 417) குறிப்பிடுகின்றது. நன்னூல் (368), முத்துவீரியம் (99) ஆகியன நான்கனைக் குறிப்பிடுகின்றன.

பெரும்பான்மையான இலக்கணநூல்கள் (தொ.சொ.421 ; நன். 372 ; மு.வீ. 104 ; நேமி. சொ. 64) உயர்திணையில் உம்மைத்தொகை பலர்பால் பயனிலையைப் பெற்றுவருமெனக் கூறுகின்றன.

## வினைத்தொகை

இரு சொற்களிடையே காலப்பொருண்மையினைக் குறிக்கும் பகுதி தொக்குவந்து ஒரு சொன்னீர்மையதாய் அமைந்து பெயரின் ஒத்த பெயர்த்தொடராகச் செயலாற்றுங்கால் அது வினைத்தொகை எனப்படும்.

இலக்கண விளக்கம் (338), நன்னூல் (364), முத்துவீரியம் (95) ஆகியன காலங்கரந்த பெயரெச்சமே வினைத்தொகை எனச் சொல் தொக்கு வருவதற்கே முதலிடம் கொடுத்துள்ளன.

வினைத்தொகையின் முன்மொழி பெயரே என்று சில அறிஞர்கள் கருதுகின்றனர். வினைத்தொகையின் முன்மொழி பெயராக அமைந்தால் அதனை வேற்றுமைத் தொகையாகத்தான் கருதுதல் இயலுமே அன்றி வினைத்தொகையாகக் கொள்ள முடியாது.

வினைத்தொகை முக்காலத்திற்கும் உறழ்ந்து வரும் என்ற கருத்து உரையாசிரியர்களால் வினைத்தொகைமேல் ஏற்றிக் கூறப்பட்ட கருத்தாகும். வினைத்தொகை மொழியில் செயல்படும் போது ஒரு குறிப்பிட்ட காலப் பொருண்மையினதாகத்தான் வருமே அன்றி முக்காலத்திற்கும் உறழ்ந்து. வருதல் இல்லை. தனி நிலையில் வினைத்தொகையின் அமைப்பினை முக்காலத்திற்கும் உரியதாகக் கூறலாமே அன்றி மொழியில் அது செயல் படும் போது முக்காலத்திற்கும் உரியதாகக் கூறவியலாது.

வினைத்தொகை உணர்த்தும் பொருண்மை அடிப்படையில் இதனை எதிர்மறை வினைத்தொகை எனவும் உடன்பாட்டு வினைத்தொகை எனுவும் இருவகைப்படுத்துதல் இயலும். ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சத்தினை எதிர்மறை வினைத்தொகையாக (ஏ. ஆதித்தன், 1982 பக். 49) கருதுதல் இயலும்.

## பண்புத்தொகை

இன்னது இதுவென வருஉம் இயற்கைக் குணம் நுதலும் நிலையில் பண்புத்தொகை அமையுமெனத் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. இதன் நிலைக்களன்களாகத் தொல்காப்பியம் (தொ. சொ. 416) வண்ணம், வடிவு, அளவு, சுவை என நான்கனைக்குறிப்பிடுகின்றது. இலக்கணக்கொத்து (99) பண்புத்தொகையில் பண்படை பல்வேறு பொருளில் செயல்படுவதனைக் குறிப்பிடுகின்றது.

இரு சொற்களுக்கிடையே பண்பு உருபு தொக்கு வந்து அவை இரண்டும் பிளவுபட்டிசைத்தலின்றி ஒரு சொன்னீர்மைதாய் அமையும் நிலையில் பண்புத்தொகை அமையப் பெறும் எனக் கருதப்படுகின்றது. 'நல்லூர்' என்பது பண்புத்தொகைக்குச் சான்றாகக் கூறப்பெற்று, இது 'நன்மை', 'ஊர்' என்னும் இருசொற்களின் சேர்க்கை எனக் குறிக்கப்பட்டுள்ளது.

'நல்லூர்' என்பதன் புதைவடிவமாகிய முற்று வாக்கியம் 'ஊர் நன்மையை உடையது' என்பதாகும். 'நல்லூர்' எனும் தொடரில் இரண்டாம் வேற்றுமை உருபும் அதன் பயனாகிய பெயரெச்சமும் தொக்கு வருவதனைக்காண முடிகின்றது. ஈண்டு 'நன்மை', 'ஊர்' என்னும் இரு சொற்களிடையே பண்பு உருபு

தொக்கு வரவில்லை. அடையாக வரும் சொல்லின் பண்பு கருதியே பண்புத்தொகை எனக் குறிக்கப்படுகின்றது.

அடையாக வரும் சொல்லின் பண்பிற்கு முதலிடம் தந்து இதனைப் பண்புத்தொகையாகக் கருதினால் ஏனைச் சில தொகைச் சொற்களின் அடைச்சொற்களும் பண்புச்சொற்களாக வருகின்றமையால் அவற்றையும் பண்புத்தொகையாகக் கருத வேண்டிய நிலை ஏற்படும். பண்புத் தொகைக்குச் சான்றுகளாகக் கூறப்பெறுபவை அனைத்தும் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகையாக அமைவதால் பண்புத்தொகை-யினை வேற்றுமைத் தொகையாகக் கருதுவதே சிறப்புடைத்து.[3]

## அன்மொழித்தொகை

தொல்காப்பியம் (தொ. சொ. 418) அன்மொழித்தொகை பண்பு, உம்மை, வேற்றுமை ஆகிய தொகைகளின் ஈற்றில் நின்-றியலும் எனச் சுட்டுகின்றது. ஏனைய இலக்கண நூல்கள் (நே. சொ. 62; நன். 369; இ.வி. 341; மு.வீ, 100) ஐந்தொகை மொழிமேல் பிறதொகல் அன்மொழி என்று குறிப்பிடுகின்றன.

தொல்காப்பியம் தொகைக்குரிய இலக்கணத்தினைத் தெளி வாகக் குறிப்பிட்டிருந்த போதிலும் இது அன்மொழித் தொகை யினை ஒருவகைத் தொகையாகக் கருதுவதுபொருந்துமாறில்லை. இதற்குச் சான்றாகத் தரப்பெறும் 'பூங்குழல் வந்தாள்' என்பதில் எழுவாயாகிய 'பூங்குழல்' 'பூவை உடைய குழல்' எனும் நிலை யில் வேற்றுமைத் தொகையாகவும், பின்னர் பூவை உடைய குழலை உடையவளைச் சுட்டும் நிலையில் அன்மொழியாகவும் கருதப்பெறும்.

ஈண்டு அல்லாத மொழி தொகுதலின் அன்மொழியாயிற்று எனக் குறிப்பிடப்பெறுகின்றது. 'பூங்குழல்' என்பது 'பூவை உடைய குழல்' என்னும் பொருண்மையில் அமையும்போதும் 'பூங்குழலை உடையவள்' என்னும் பொருண்மையில் அமையும் போதும் வேற்றுமைத் தொகையாகத்தான் செயல்படுகின்றது. பிற தொகைச சொற்களில் பொருண்மை நிலையில் மாற்றம் ஏற்படும்போது அவை அன்மொழியாகச் செயல்படுமேயின்றித் தனியொரு வேறுபட்ட தொகையாக அமையப் பெறுதலில்லை.[4]

அன்மொழி என்பது பொருண்மைநிலையில் தொகைச் சொற்களில் ஏற்படும் பொருள்மாற்றமே. ஈண்டுக் குறிப்பிடப் பெற்றுள்ள சான்றில் சொல்நிலை மாற்றம் (name transfer) பூங்குழல்; 'பூங்குழலை உடையவளாகிய ஒரு பெண்' எனும் இரு சொல்வடிவங்களின் பொருள்களுக்கிடையே காணப்பெறும் தொடர்பு (contiguity) காரணமாக நடைபெறுகின்றது.

தொகைச் சொற்களில் ஏற்படும் சொல்நிலை மாற்றம் அன்றிப் பொருள்நிலை மாற்றம் (sense transfer) அன்மொழி எனக் குறிப்பிடப் பெறுகின்றது. இம்மாற்றம் இரு சொற்களின் பொருள்களுக்கிடையே காணப்பெறும் ஒப்புமை (similarity) அன்றித் தொடர்பு (contiguity) காரணமாக நடைபெறலாம்.

மேலும் இரு சொற்களுக்கிடையே உருபு அன்றிச் சொல் தொக்குவந்து இவ்விரு சொற்களும் ஒரு சொன்னீர்மையதாய் அமைதலே தொகை எனில் தொக்குவரும் பகுதி புறத்தே அமை-வதாலும் அன்மொழித் தொகையினைத் தனியொருவகையாகக் கருதுதல் இயலாது. தொல்காப்பியம் அன்மொழித்தொகை-யினைத் தனியொரு வகையான தொகையாகக் கருதுவது வட-மொழி பகுவ்ரீஹி சமாஸத்தின் காரணமாகவே எனும் கருத்து ஏற்றுக் கொள்ளக்கூடியதாகவே அமைந்துள்ளது.

தொல்காப்பியர் குறிப்பிடும் தொகை இலக்கணத்தினை அவர் கூறும் ஆறு தொகைகளுக்கும் பொருத்திக் காணுங்கால் இவ்வாறனையும் மூன்றனுக்குள் அடக்கிக் காணுதல் இயலும்.

| | |
|---|---|
| பண்புத்தொகை<br>உவமத் தொகை<br>வேற்றுமைத் தொகை | 1. வேற்றுமைத் தொகை |
| வினைத் தொகை | 2. வினைத்தொகை |
| உம்மைத் தொகை | 3. உம்மைத்தொகை |

அன்மொழித்தொகையினை ஏனைய தொகைச் சொற்-களின் பொருண்மை நிலையில் ஏற்படும் மாற்றமாகக் கருதலா-மேயன்றித் தனியொரு தொகையாகக் கருதுதல் இயலாது.

தொகைகளை வகைப்படுத்துவதற்கு முறையான அடிப்-படையினை இலக்கணநூல்கள் பின்பற்றாமையால் பண்புத்-

தொகை, உவமத்தொகை, வேற்றுமைத் தொகை ஆகியவற்றுக் கிடையே மயக்கம் காணப்படுகின்றது.

வேற்றுமைத் தொகையில் வேற்றுமை உருபிற்கு முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளது. உவமத்தொகையில் வேற்றுமை உருபின் பயனாகிய உவம உருபிற்கு முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளது. பண்புத்தொகையில் தொகையின் முதலுறுப்பாகிய அடைச்-சொல்லுக்கு முதன்மையிடம் கொடுக்கப்பட்டுள்ளது. தொகை-களை வகைப்படுத்துவதற்குச் சீர்மையான அடிப்படையினை இலக்கணநூல்கள் குறிப்பிடாமையால் இவை குறிப்பிடும் தொகை வகைகளுக்குள் முறையான முரண் (contrast)அமையப்-பெறவில்லை.

## தொகையில் பொருள்நிலையல்

தொல்காப்பியம் (தொ. சொ. 419), இன்னும் சில இலக்-கணநூல்கள் முன்மொழி, பின்மொழி, இருமொழி, அன்மொழி ஆகிய நான்கிடங்களில் தொகைப் பொருள்நிலை சிறக்குமென்று குறிப்பிடுகின்றன. பிரயோக விவேகம் (25) இந்நான்கு தவிர முன்மொழியுள் ஒரு காலும் பின்மொழியுள் ஒரு காலும் பொருள் சிறந்து நிற்றல் என ஐந்தாவது வகை ஒன்றினைச் சுட்டுகின்-றது.

தமிழ்த்தொகைச் சொற்களைப் பொறுத்தமட்டில் முன்-மொழி, இருமொழி என்ற இருவகை நிலைக் களன்களே அமை-தல் இயலும்.

| | |
|---|---|
| செந்தாமரை<br>பொன்மேனி<br>மட்குடம்<br>சுடுசோறு | — பின்மொழியில் பொருள் சிறத்தல் |
| கபில பரணர் | — இருமொழியில் பொருள் சிறத்தல் |

ஈண்டு நான்கு வகையான நிலைக்களன்களைத் தமிழ் இலக்கண நூல்கள் குறிப்பிடுவது வடமொழியினைப் பின்பற்-றியே கூறுகின்றன எனலாம்.

## முடிவுரை

தொகைக்கு இலக்கணம் சுட்டுவதில் தொல்காப்பியம் முதன்மையிடம் பெறுகின்றது. பிற்கால இலக்கண நூல்கள் பெரும்பான்மையும் உருபு அன்றிச் சொல் தொக்கு வருவதற்கே முதலிடம் கொடுத்தமையால் பிற்காலத்தில் தொக்கு வருவதே தொகை என்னும் தவறான கோட்பாடு நிலைபெற்றுவிட்டது.

தொகைகளை வகைப்படுத்துவதற்கு இலக்கண நூல்களிடத்தே முறையான அடிப்படை இன்மையால் சில தொகைகளுக்கிடையே மயக்கம் காணப்படுகின்றது.

தமிழிலுள்ள அறுவகைத் தொகைகளையும் மூன்றனுக்குள் அடக்கிக்காணலாம். அன்மொழித் தொகையினைத் தொல்காப்பியமும் பிற இலக்கண நூல்களும் குறிப்பிடுவது வடமொழி அடிப்படையில்தான் எனும் கருத்து ஏற்புடையதாகத் தெரிகின்றது.

தொகைச் சொற்களின் பொருள் சிறக்குமிடத்தினைப் பொறுத்த மட்டிலும் இருவகை நிலைக்களன்களுக்கு மட்டுமே இடமிருக்க இலக்கண நூல்கள் நான்கினைக் குறிப்பிடுகின்றன.

தொகைக் கோட்பாட்டில் தொல்காப்பியத்திற்கும் பிற இலக்கண நூல்களுக்குமிடையே மிகுந்த வேறுபாடு காணப்படுகின்றது. பிற்காலத்தில் தவறான தொகைக் கோட்பாடு நிலை பெற்று விட்டது. வீரசோழியம், பிரயோக விவேகம் போன்றன தொகைகளை முற்றிலும் வடமொழி அடிப்படையிலே விவரிக்கின்றன.

## குறிப்புக்கள்

1. தொக்குவருதல் எனும் பண்பிற்கே முதலிடம் கொடுத்தமையால் இலக்கணக்கொத்து (79) படுதொகை எனவும், வீரசோழியம், பிரயோக விவேகம் ஆகியன அவ்வியயீபாவம், துவிகு எனவும் புதிய தொகைகளைக் குறிப்பிடுகின்றன.

2. ‘நிலம் கடந்தான்’ எனும் வாக்கியம் தொகைக்குச் சான்றாக பல உரையாசிரியர்களால் சுட்டப்பெற்றுள்ளது. இவ்வாக்-

கியம் பெயர்த்தொடராகச் செயலாற்றுதல் இல்லை, 'நிலங்-கடந்தான் வந்தான்' என்பதில் 'நிலங்கடந்தான்' என்பது பெயர்த்தொடராகச் செயல்படும் தொகையாகும்.

3. பண்புத்தொகைக்குச் சுட்டப்பெறும் இருபெயரொட்டு மட்-டுமே இக்கருத்திற்கு முரண்பட்டு அமைகின்றது. இருபெய-ரொட்டினைப் பண்புத்தொகையாகக் கூறுவது மேலும் ஆராய்தற்குரியது.

4. தனிச்சொற்களில் ஏற்படும் பொருள்மாற்றம் ஆகுபெயரென-வும் தொகைச்சொற்களில் ஏற்படும் பொருள் மாற்றம் அன்-மொழி எனவும் (ஏ. ஆதித்தன், 1987, பக். 45) கருதப்-படுகின்றது.

## உடனுதவியவை


அண்ணாமலை, சுப., 'தொகையும் தொடரும்', ஆய்வுக்கோவை, தொகுதி - 2 (1974), பக். 525 - 530.

ஆதித்தன், ஏ., 'எதிர்மறை வினைத்தொகை', இலக்கணப்-புதுமை, பக். 49-53, மதுரை, 1982.

———— 'தமிழ் இலக்கண நூல்களில் தொகைக்கோட்பாட்டு வளர்ச்சி', இலக்கணக்கோட்பாட்டு கருத்தரங்கு, தஞ்சாவூர், 1985.

———— 'ஆகுபெயரும் அன்மொழியும்' தமிழ்மொழியியல் கழக இரண்டாவது கருத்தரங்க மலர் (1987), பக். 35 - 46.

———— 'மரபிலக்கணங்கள் சுட்டும் தொகைகள்'' வியாழ-வட்டக்கருத்தரங்கு, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1986.

ஆறுமுகன், கு., 'தொகைபற்றித் தொல்காப்பியர்', தொல்காப் பிய மொழியியல், பக். 66-79, அண்ணாமலைநகர் 1972.

இசரயேல், மோ., 'பெயரினாகிய தொகை', ஆய்வுக் கோவை (1976), பக் 518 - 522.

கணேசய்யர், ச., 'தொகைநிலை', செந்தமிழ், 26: 1 (1927), பக். 1 - 10.

'இருபெயரொட்டாகு பெயரும் அன்மொழித் தொகையும்', செந்தமிழ், 28 : 12 (1930), பக். 331 - 341.

கோதண்டராமன், பொன்., 'ஆகுபெயர் அன்மொழித்தொகை', **இலக்கண உலகில் புதியபார்வை**, பக். 4-25, சென்னை, 1973.

சிவலிங்கனார், ஆ., 'வினைத்தொகையின் முன்மொழி பெயரா? வினையா?', **ஆய்வுக்கோவை** (1977), பக். 125 - 129.

சுப்பிரமணிய சாஸ்திரி, பி.சா., 'தமிழ் தொகை மொழி', **செந்தமிழ்**, 52 : 1 (1969), பக். 16 - 23.

Annamalai, E., 'The Transference Noun in Tamil Grammar', XV All India Conference of Linguists, Madurai, Kamaraj University, Madurai, 1986.

Bright, W., 'Dravidian Metaphony', **Language**, Vol. 42 (1961), pp : 311 - 322.

Meenakshi, K., 'Treatment of Compounds in Astatyayi and Tolkappiyam, **Ayvukkovai** (1972), pp : 469 - 474.

Subrahmanya Sastri, P.S. 'Compounds in Tamil Language', **Journal of Oriental Research** (1928), pp. 105 - 110.

Ullmann, S., Semantics, Oxford, 1959.

Vardas, D., 'A Study of Akupeyar and Anmolittakai' M.A. Dissertation, University of Karala, Trivandrum. 1961.

Vijayavenugopal, G., **'Nominal Composition in Tamil'**, Madurai, 1980.

# இலக்கணிகளின் மொழிக்கலப்புச் சிந்தனை

இ. பேச்சிமுத்து

## 6

தமிழில் பிறமொழிக் கலப்பு என்பது சங்காலந் தொட்டே நிகழ்ந்துவருகிறது; காலத்திற்குக் காலம் கலப்பின் விகிதம் அதிகமாகிக் கொண்டேயிருக்கிறது; கலக்கும் பிறமொழிகளும் அதிகமாகிக் கொண்டுவருகின்றன. என்றாலும் இதுவரை தமிழின் தனித்தன்மை எவ்விதத்திலும் சிதைந்துவிடவில்லை. இதற்கு அடிப்படைக் காரணம் தமிழில் பிறமொழிகள் கலந்துவரும் காலச் சூழலை மனத்தில் கொண்டு இலக்கண வரையறை செய்த இலக்கணிகளின் சீரிய சிந்தனையே எனலாம்.

இன்றைய நிலையில் பிறமொழிக் கலப்பு என்பது தமிழின் தனித்தன்மையைப் பாதித்துவிடுமோ என்கிற அச்சத்தைத் தரும் வகையில் அமைந்துள்ளது. எனவே இவ்வெண்ணத்தின் அடிப்படையில் தமிழ்மொழி வரலாற்றின் மைல் கற்களாக விளங்கும் தொல்காப்பியம் மற்றும் நன்னூல் காட்டும் மொழிக்கலப்புச் சிந்தனையை அறிவதும், அவற்றோடு இன்றைய நிலையைத் தொடர்புபடுத்திக் காண்பதும், இம்மொழிக் கலப்பால் தமிழ்

கற்பித்தலில் வரும் இடர்ப்பாடுகள் சிலவற்றைச் சுட்டிக்காட்டுவதும் இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## மொழிக்கலப்பு

அரசியல், சமூக, பொருளாதார வளர்ச்சியினாலும் மாற்றத்தினாலும் ஓரினம் மற்றோர் இனத்தோடு கலப்பது இயற்கையாகும். இதற்கு எம்மொழியும் விலக்கன்று. தமிழ்மொழியிலும் காலந்தோறும் பல்வேறு மொழிகள் கலந்துள்ளன. சங்க காலத்தில் ஆரியர் வரவும், அவர்களின் வைதீக சமயத்தின் செல்வாக்கும் சமஸ்கிருதம் கலக்க வழிவகுத்தது. சங்கம் மருவிய காலத்தில் சமண, பௌத்த சமயங்களால் பாலியம் பாகதமும் கலந்தன; இசுலாமியர் வரவு உருது, பாரசீகம் கலக்கக் காரணமாயிற்று; இதையடுத்துக் கிறிஸ்தவர் வரவால் ஆங்கிலம் கலந்தது. இவ்வாறு தமிழக வரலாற்றில் சமயச் செல்வாக்குத் தமிழில் பிறமொழிகள் கலந்துவிடக்காரணமானதோடு, தமிழகத்தில் பல்வேறு காலத்தில் நிகழ்ந்த அரசியல் மாற்றமும் மற்றொரு முக்கியக் காரணமாக அமைந்துவிட்டது. களப்பிரர்கள் தமிழகத்தைக் கைப்பற்றிய காலமுதல் பல்வேறு அரசுகள் தமிழகத்தை ஆண்டு வந்துள்ளன. இந்த அரசுகள் பெரும்பாலும் தமிழைப் புறக்கணித்துப் பிறமொழிகளைப் போற்றிவந்துள்ளன. இதற்குச் சான்றாகப் பல்லவ, விஜயநகர, மகாராஷ்டிர, மொகலாய, ஆங்கிலேய வல்லரசுகளின் ஆதிக்கத்தைக் கொள்ளலாம்.

சமணர்கள் தமிழில் வடமொழியை வரம்பின்றி மிகுதியாகக் கலந்தனர். அதற்கு மணிப்பிரவாளம் என்று பெயரிட்டனர். இதனை ஸ்ரீபுராணம் என்ற நூலால் அறியமுடிகின்றது இதனைத் தொடர்ந்து வைணவர்கள் பிரபந்த உரையை மணிப்பிரவாள நடையில் எழுதினர்.

சேனாவரையர், பரிமேலழகர் போன்ற உரையாசிரியர்கள் வடமொழி மரபைப் பின்பற்றி உரை எழுதியுள்ளனர். அணி இலக்கண நூல்களும் வடமொழி மரபைப் பின்பற்றியே தோன்றியுள்ளன. ஆங்கிலேயர் வரவுக்கு முன்னால் தமிழில் பல மொழிகள் கலந்தபோதும் வடமொழிதான் ஆதிக்கம் செலுத்திவந்துள்ளதை அறியமுடிகின்றது. அதேபோல் இன்று ஆங்கிலமொழி

அதனளவில் செலுத்தவில்லையென்றாலும் ஆக்கிரமித்துக் கொண்டுள்ளதை எவரும் மறுக்கமுடியாது.

### தொல்காப்பியரின் மொழிக்கலப்புச் சிந்தனை

தொல்காப்பியர் எச்சவியலின் முதல் நூற்பாவில் செய்யுள் இயற்றுவதற்குரிய சொற்கள் என்று இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்ற நான்கையும் குறிப்பிட்டுள்ளார். இதற்கு உரையெழுதிய சேனாவரையர் 'இயற்சொல்லானும் செய்யுட் சொல்லாகிய திரிசொல்லானுமேயன்றித் திசைச்சொல்லும், வடசொல்லும் இடைவிராய்ச் சான்றோர் செய்யுள் செய்யுமாறு கண்டு ஏனை பாடைச் சொல்லும் செய்யுட்குரியனவோ என்றையுற்றார்க்கு இந்நான்கு சொல்லுமே செய்யுட்குரியன; பிற பாடைச்சொல் உரியவல்லவென்று வரையறுத்தவாறு' என்று விளக்குகிறார். அதோடு திசைச் சொல்லுள் ஏனைச்சொல்லும் உளவேனும், செய்யுட்குரித்தாய் வருவது பெயர்ச் சொல்லேயாம். வடசொல்லுள் பெயரல்லது செய்யுட்குரியவாய் வாரா என்றும் குறிப்பிடுகிறார். சேனாவரையரின் இவ்விளக்கத்தால் வடமொழிக் கலப்பினை ஏற்கும் தொல்காப்பியரது உள்ளத்தை அறியமுடிகிறது. அதோடு பெயர்ச்சொல் மட்டுமே கலக்க வேண்டும் என்பதால் மொழியின் கட்டமைப்புச் சிதையக் கூடாது என்ற மொழிக்காப்பு நோக்கமும் புலப்படுகிறது.

மேலும் திசைச்சொல் பற்றிய தொல்காப்பியரின் விதிக்கு உரையாசிரியர்கள் இருவேறுபொருள்கள் தருகின்றனர். செந்தமிழ் நிலம் என்பது சோழநாடு என்ற கருத்தில் அதைச்சுற்றிய பன்னிரு தமிழ் நிலத்தில் வழங்கும் சொற்கள் திசைச்சொற்கள் என்கிறார் சேனாவரையர். தெய்வச் சிலையாரோ வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகமே செந்தமிழ் நிலம் என்றும், அதைச்சுற்றிய பன்னிரு நிலத்தில் வழங்கும் சொல்லே திசைச்சொல் என்றும் கூறுகிறார். இதன்படி தமிழோடு இடத்தால் நெருங்கிய தொடர்புடைய பிறமொழிச் சொற்களே திசைச்சொற்கள் என்று கூறப்படுகின்றன. நச்சினார்க்கினியர் இவ்விரு கருத்தையும் ஏற்கின்றார். இவ்விரு கருத்தையும் ஏற்றுத்தான் நன்னூலார் திசைச்சொல் இலக்கணம் வகுத்துள்ளார்.

வடசொற்கிளவிக்கு இலக்கணம் வகுக்கும் தொல்காப்பியர் வடசொற்கேயுரிய சிறப்பெழுத்து நீங்கித் தமிழுக்கும் வட-

மொழிக்கும் பொதுவாகிய எழுத்தானியன்றது வடசொல் என்கிறார். தொல்காப்பியரின் இக்கருத்தால் வடமொழி தமிழில் கலந்தாலும் தமிழ் ஒலிப்புமுறை மாறலாகாது என்று வரம்பு கட்டியது புலப்படுகிறது. இச்சிந்தனை மாறிவரும் சமூகச் சூழல் அடிப்படையில் எழுந்தது எனலாம்.

'கடிசொல் இல்லை காலத்துப் படினே'

என்றவிதி இச்சிந்தனையையே நமக்கு அறிமுகம் செய்கிறது.

## நன்னூலாரின் மொழிக்கலப்புச் சிந்தனை

நன்னூலார் காலத்தில் வட.மொழிக் கலப்புமிகுதியானது. எனவே தொல்காப்பியரின் சிந்தனையோடு தம்கால மொழி வழக்கையும் எண்ணி விதிவகுக்கிறார். வடமொழியாக்கம் என்ற தனிப்பகுதியைப் பதவியலின் கடைசிப் பகுதியாக அமைக்கிறார். இச்சிந்தனை ஐந்து நூற்பாவால் கூறப்படுகிறது. வடமொழிச் சொற்கள் தமிழில் கலந்துநிற்கும் தன்மையும் ஒலிக்கவேண்டிய முறையும் விதந்து சொல்லப்படுகின்றன. மேலும் புணரியல்களுக்குப் புறனடையான நூற்பாவில் வடசொல் புணர்ச்சி குறித்துக் குறிப்பிடப்படுகிறது.

அடுத்துத் திசைச் சொல்லை விளக்கவந்த நன்னூலார் செந்தமிழ் நிலத்தோடு சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலப்பகுதிச் சொல்லும், சொல்லப்பட்ட பதினெட்டு மொழியுள் தமிழ், ஆரியம் ஒழிந்த பதினாறு மொழிச் சொல்லும் திசைச் சொற்கள் என்கிறார். இதனால் வடமொழியோடு ஏனைய மொழிச் சொற்களையும் திசைச்சொல் என்ற பெயரில் தமிழில் ஏற்றுக்கொள்ள விதிவகுத்திருப்பதை அறியமுடிகிறது. இதனை, நன்னூலாரின் சொற்பாகுபாட்டிற்கு வைப்புமுறை கூறவந்த சங்கர நமச்சிவாயரும் 'திசைச்சொல் கொடுந்தமிழாயும் அன்னிய மொழியாயும் வருதலானும் வடசொல் அன்னிய மொழியேயாய் வருதலானும்' என்கிறார்.

மேலும் வடசொல்லிற்கு இலக்கணம் கூறவந்த நன்னூலார், தமிழிற்கும் ஆரியத்திற்கும் பொது வெழுத்தானும் ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்தானும் இவ்விருவெழுத்தானும்

செந்தமிழ்ச் சொல்லை ஒத்துத் தமிழ் நிலத்து வந்து வழங்குவன வடசொல் என்று விதிவகுக்கிறார்.

இத்தகைய நன்னூலாரின் சிந்தனையைப் பார்க்கும் பொழுது பல்வேறு மொழிச்சொற்கள் தமிழில் கலந்துள்ளமையும், அவற்றைப் புறக்கணிக்காது தமிழ்த் தன்மையோடு ஏற்றுள்ளமையும் புலப்படுகின்றன.

## இன்றைய நிலையில் மொழிக்கலப்பு

இன்றைய தமிழில் பல்வேறு மொழிகளின் கலப்பினைக் காணமுடிந்தாலும். பண்டு வடமொழி தமிழில் கலந்த கலப்பிற்கு இணையாக ஆங்கிலம்தான் மிகுதியும் கலந்துவருகிறது. முன்னர்க் கலந்த பிறமொழிக் கலப்பு தமிழின் தனித்தன்மையைப் பாதிக்கவில்லை. அப்படியே தமிழின் தனித்தன்மை பாதிக்கும் நிலையில் சிலகாலகட்டம் அமைந்தாலும், அத்தகைய கலப்புநிலைதான் காணாமல் போயுள்ளது; தமிழ் தன்னைத் தற்காத்துக் கொண்டுள்ளது. இதற்குக் காரணம் தமிழ் இலக்கணிகளின் மொழிக்கலப்புப் பற்றிய சிந்தனைகளேயாகும்.

இன்று பெரும்பாலும் இலக்கணிகளின் மொழிக்கலப்புச் சிந்தனை போற்றப்படவில்லை. வரம்பின்றிப் பிறமொழிச் சொற்கள் ஏற்கப்படுகின்றன. இதனால் தமிழின் தனித்தன்மை பாதிப்படைய வாய்ப்புள்ளது. இந்நிலையில் மொழிக் கலப்புப் சிந்தனையோடு மொழிக்கலப்பை ஏற்கவேண்டிய காலகட்டத்திலிருக்கிறோம். உலகநாடுகளின் தொடர்பும், அறிவியல் வளர்ச்சியும் மேலோங்கிய இந்நாளில் மொழிக் கலப்பு என்பது தவிர்க்க முடியாத்து என்பது மட்டுமன்று, அவசியமானது என்றும் கூறலாம். இல்லையென்றால் தமிழினம் த்னிமைப்படுவதோடு பின்தங்கியும் விடும். அதேநேரத்தில் தமிழின் தனித்தன்மை காக்கும் எண்ணத்தோடு இதனைச் சிந்திக்க வேண்டும். இக்கருத்தின் அடிப்படையில் அறிஞர் ம.பொ. சிவஞானத்தின் சிந்தனைகள் மனங்கொள்ளத்தக்கனவாகும். அவை.

1. பொருத்தமான வழக்குச் சொல் இருக்க அதற்கு மாறாகப் பிறமொழிச் சொற்களைக் கையாளலாகாது.

2. முடிந்தவரை தமிழ் ஒலிப்புக்கு ஏற்ற வகையில் பிற மொழிச் சொற்களை மாற்றி வழங்கலாம்.

என்பனவாகும். இதோடு பொருள் மயக்கமற்ற புதியசொல்லாக்கப் பணியும் தொடரவேண்டும். இவைதாம் புதுப் புதுத்துறைகள் பெருகிவரும் இந்நாளில் தமிழுக்கு ஆக்கமாக அமையும்.

## மொழிக்கலப்பால் தமிழ் கற்பித்தலில் இடர்ப்பாடு

மொழி முதல் எழுத்து குறித்து நாம் தொல்காப்பியரை மட்டும் பின்பற்றவில்லை; நன்னூலாரையும் பின்பற்றுகிறோம். சகரம் மொழிமுதலாகாது; யகரம் ஆகாரத்தோடு மட்டும் மொழி முதலாகும் என்பன போன்ற பல விதிகள் நன்னூலாரால் மாற்றம் பெற்றுவிட்டன. இன்று நன்னூலார் காலத்திற்கும் நமக்கும் நீண்டகால இடைவெளியினால் பலமாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. சமூக வளர்ச்சிக்கேற்ப மொழியில் பல மாறுபாடுகள் ஏற்படுகின்றன. இதனை மனங் கொண்டு மொழி கற்பித்தலில் சில நெகிழ்ச்சிகளைப் பின்பற்றவேண்டிய நிலையிலிருக்கிறோம்.

தமிழ் ஒலிப்புக்குப் பொருத்தமற்ற மொழிமுதல் எழுத்துக்களை உடைய எத்தனையோ சொற்கள் தமிழில் வழங்குகின்றன.

டேவிட் என்ற சொல்லைத் தாவீது என்று ஒலி பெயர்த்தாலும் பயன்பாட்டில் ஏற்கப்படவில்லை. டப்பா என்ற சொல் மாற்றமின்றித் தாராளமாக வழங்குகிறது; ‘டுமீல்’ என்று சுடப்படுகிறது; ‘டமால்’ என்று வெடிக்கிறது; இப்படி டகரம் பல்வேறு நிலைகளில் மொழிமுதலாகி நிற்கிறது. இதனைப் புறக்கணிக்க முடியாது.

ரோசா, ரீட்டா என்பன போன்ற சொற்களுக்கு முன் இகரம் சேர்த்து வழங்குவதாக அறியமுடியவில்லை.

லீலா, லூர்து போன்ற பெயர்ச் சொற்களுக்கு முன் இகர, உகரம் சேர்த்து வழங்கமுடியவில்லை.

இவைபோன்ற சொற்கள் தவிர்க்க முடியாதனவாகவும் பெரும்பான்மையாகவும் ஆகிவிட்டதால்இவையும் தமிழில் மொழி முதல் எழுத்துக்கள் என்று கொள்ள வேண்டியதாகிறது.

மொழியிறுதி எழுத்துக்களைப் பொறுத்தவரை தொல்-காப்பியர், நன்னூலார் இருவருமே வல்லினம் மொழியிறுதி ஆகாது என்கின்றனர். இந்த விதி காலங்காலமாகப் பின்பற்றப் பட்டு வந்த போதிலும் இன்றைய நிலையில் மறுபார்வைக்-குரியதாக நிற்கிறது.

டேவிட், எட்மண்ட் என்ற சொற்களில் டகரம் மொழியி-றுதியாக நிற்கிறது.

கோபிநாத், ரசினிகாந்த் என்ற சொற்களில் தகரம் மொழி-யிறுதியாக வருகிறது.

'சதக்' என்று குத்துவதில் ககரம் மொழி இறுதியாக அமைகிறது.

இவ்வல்லின இறுதி எழுத்து வழக்கும் அதிகமாகித் தவிர்க்க முடியாமலும், தமிழ் ஒலிப்புக்கேற்ப ஒலிப்பு மாற்றம் செய்ய முடியாமலும் வழங்கப்படுகிறது. இந்நிலையில் மொழி-யிறுதியாகா என்ற வல்லினமும் மொழியிறுதியாகும் என்று விதி வகுக்கவேண்டிய நிலையைக் குறிப்பிட்டேயாகவேண்டும்.

உடம்படு மெய்யினை மாணவர்களுக்குக் கற்பிக்கின்ற பொழுது

'இ ஈ ஐ வழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏ முன் இருமையும்...

என்ற விதியின்படி குற்றியலுகரம் தவிர்த்த ஏனைய உயிர்முன் உயிர் வந்தால் யகர, வகர உடம்படுமெய் தோன்றும் எனக் கற்பிக்கின்றோம். ஆனால் பிறமொழிக் கலப்பின் காரணமாக, குறிப்பாக வடமொழிக் கலப்பின் காரணமாக இவ்விதி மாறுபடு கிறது. உயிரீற்று, மெய்யீற்றுப் புணர்ச்சி சிலவும் இவ்வாறே மாறுபடுகின்றன. எடுத்துக்காட்டாக மடாதிபதி, சேனாதிபதி, சூரியோதயம் போன்ற பல சொற்புணர்ச்சிகளைக் காட்டமுடியும்.

எனவே உடம்படுமெய் கற்பிக்கின்ற பொழுது மொழிக் கலப்பினால் ஏற்பட்ட மாறுபட்ட புணர்ச்சியைச் சுட்டிக் காட்டி-

யாக வேண்டியுள்ளது. இரண்டையும் ஒப்பிட்டு வேறுபட்ட தன்மையினை விளக்கவேண்டியுள்ளது.

## முடிவுரை

மொழிக்கலப்பு என்பது வளர்கின்ற சமூகத்தின் எந்த வொரு மொழிக்கும் பொதுவானதும் தவிர்க்க முடியாததும் ஆகும். தமிழில் எந்த இலக்கணியும் மொழிக்கலப்பைப் புறக்கணிக்கவில்லை; மாறாகத் தமிழின் தனித்தன்மை கெடாத நிலையில் ஏற்றுக்கொள்ள விதி வகுத்துள்ளனர். இன்றைய நிலையில் அவ்விதிகளிலும் சற்று நெகிழ்ந்து கொடுத்து ஏற்கவேண்டியுள்ளது. அதற்காகத் தகுதிவாய்ந்த தமிழ்ச் சொல்லிருக்கப் பிற மொழியைப் பயன்படுத்தும் போக்கு வருந்தத்தக்கதும் கண்டிக்கத்தக்கதும் ஆகும். பிற மொழிப் பெயர்ச் சொற்களை மட்டுமே ஏற்றுக் கொள்ளவேண்டும். முடிந்தவரை தமிழ் ஒலிப்புக்கு ஏற்றவகையில் மாற்றி ஏற்கவேண்டும். அவ்வாறு மாற்றும் பொழுது பொருள் மயக்கம் தரும் நிலையிலிருந்தால் அவ்வாறே ஏற்றுக்கொள்ளலாம்.

வளர்ந்து வரும் சமூக, அறிவியல், பொருளாதாரச் சூழலில் மொழிக்கலப்பை வடி கட்டலாமேயொழிய அணை கட்ட முடியாது. எனவே, பிறமொழிக் கலப்பைத் தமிழின் தனித்தன்மை சிதையாதவாறு தவிர்க்க முடியாதபோது ஏற்போம். தமிழையும் தமிழ்ச் சமூகத்தையும் உலக வளர்ச்சியில் பின்தங்காதவாறு காப்போம்.

''பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே''

# இலக்கணம் கற்பித்தலிலுள்ள இடர்ப்பாடுகள்

வி. கோபால்

7

## முன்னுரை

மாணவர்களிடையே 'இலக்கணம்' என்றாலே 'வேப்பங்காய்' என்ற நினைப்பு அடிமனதில் நிலைபெற்று இருப்பதை மாற்ற முயற்சிக்க வேண்டும். இலக்கணப் பாடவேளை என்று அட்டவணையில் இருந்தால், அவ்வேளை மாணவருக்கு ஓய்வு. ஆயிரம் ஆண்டுகளுக்குமுந்தியுள்ள இலக்கணங்களையே இன்றும் மாணவர்களுக்குச் சொல்கிறோம். தேர்வில் இலக்கணத்திற்கு என்று ஒதுக்கப்படும் மதிப்பெண்கள் மிகவும் குறைவு, எனவே மாணவர்கள் இலக்கணப் பாடத்தையே ஒதுக்கிவிடுகின்றனர். சிறப்புப் பாடமாகத் தமிழ் எடுத்துப் படிக்கும் மாணவர்கள் இலக்கணத் தேர்வில் வெற்றிபெற்றால் போதும் என்றே எண்ணுகின்றனர். முதுகலை மாணவரைப் பொறுத்தமட்டில் தொல்காப்பியம் – நன்னூல் ஒப்பீடு, அத்துடன் மொழியியல் பாடத்தையும் ஒப்பிட்டு வினாக்கள் அமையும் என்று பல்கலைக் கழகத்தில் கூறப்பட்டுள்ளது. இதைச் சொன்னதுமே, இதில் ஓரிரு பாடத்தை ஒதுக்கிவிட்டு ஏதாவது ஒன்றைப் படித்தால் போதும்

என்ற எண்ணம் அவர்களிடம் நிலைபெற்றுவிட்டது. இதனால் இலக்கணம் முழுமையாக அவர்களைச் சென்றடையவில்லை. இதழியல், திரைப்படத் துறை, வானொலி, தொலைக்காட்சி போன்றவற்றில் இலக்கண வரையறை குறிப்பாகக் கையாளப்படுவதில்லை. இதைப்போன்ற பற்பல இடர்ப்பாடுகள் இலக்கணம் கற்பித்தலில் காணப்படுகின்றன. இவ்விடர்ப்பாடுகளைப் பற்றி ஆய்வதாக இக்கட்டுரை அமைகின்றது.

இக்கட்டுரை பொது, சிறப்பு என்ற இரண்டு பிரிவில் அமைகிறது. பொதுப் பிரிவு இளங்கலை, முதுகலை வகுப்பில் இலக்கணம் கற்பிக்கின்றபோது ஏற்படும் இடர்ப்பாடுகள் பற்றி எடுத்துக்கூறுகிறது. சிறப்புப் பிரிவு தொல்காப்பியம், நன்னூல், மொழியியல் தொடர்பான நூல்களைக் கற்பிக்கும்போது ஏற்படும் இடர்ப்பாடுகள் குறித்து விளக்குகிறது.

## பொதுப் பிரிவு

இளங்கலை வகுப்பில் சிறப்புப் பாடமாகத் தமிழ் எடுத்துப்படிக்கும் மாணவர்கள் மேனிலை வகுப்புகளில் சிறப்புப் பாடமாக எந்தப்பாடம் படித்தாலும் சேர்த்துக்கொள்ளப்படுகிறார்கள்.

இளங்கலை வகுப்பில் நன்னூல் - எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும் பாடமாக உள்ளன. இளங்கலையில் மூன்றாம் பருவத்தில் நன்னூல் எழுத்ததிகாரம் பாடமாக இருக்கிறது. இப்பருவத்தில் எழுத்துக்கள் எண்ணிக் கற்பிக்கப்படுகின்றன. ஆனால் மாணவர்கள், இதெல்லாம் ஏற்கனவே பள்ளியில் படித்த பாடம்தான். இதில் என்ன இருக்கிறது என எண்ணி அதில் அதிகமாகக் கவனம் செலுத்துவதில்லை. இப்பருவத்தில் தமிழ் மொழியின் சிறப்பாக அமைந்துள்ள உயிர் எழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய்யெழுத்து, ஆய்தம் போன்றன தொடக்கத்தில் கற்பிக்கப்படுகின்றன. இதிலும் குறிப்பாக மாணவர்களிடம் உயிர் எழுத்துப் பன்னிரண்டு, அதில் குறில் ஐந்து, நெடில் ஏழு என்றும் மெய்யெழுத்துக்கள் வல்லினம், மெல்லினம், இடையினம் என்ற மூன்று பிரிவில் அமைகிறது என்றும், இந்த மெய்யெழுத்துக்களும் உயிரெழுத்துக்களும் சேர்ந்துதான் உயிர்மெய் எழுத்துக்கள் பிறக்

கின்றன என்றும் எடுத்துச் சொல்லும்போது வகுப்பில் புரிகிறது என்கிறார்கள். குறிப்பிட்டு ஒரு மாணவரிடம் கேட்கும்போது எதுவுமே புரியவில்லை என்கிறார். காரணம் மேனிலை வகுப்புகளில் சிறப்புத் தமிழ்ப் பாடம் கற்காதவரையும் நாம் இளங்கலைத் தமிழ்ப்பாடத்தில் சேர்ப்பதால் ஏற்படும் இடர்ப்பாடு.

## நடைமுறையிலுள்ள இடர்ப்பாடுகள்

நன்னூல் எழுத்ததிகாரத்திலுள்ள இயல்கள் பொதுப்பாயிரத்தின் இலக்கணம், எழுத்தியல், பதவியல், உயிரீற்றுப் புணரியல், மெய்யீற்றுப் புணரியல், உருபு புணரியல் என்றும்; சொல்லதிகாரத்தில் பெயரியல், வினையியல், பொதுவியல், இடையியல், உரியியல் என்றும் இயல்களின் வரிசை அமைந்துள்ளன. ஆனால் இயல்களின் வரிசைப்படி ஆசிரியர்கள் பாடம் சொல்வதில்லை. இலக்கணப் பாடத்திற்குக் குறைந்தது மூன்று ஆசிரியர்கள் வகுப்பிற்குச் செல்கின்றனர். இவர்களில் முதலில் செல்கிறவர் அவருக்கு ஒதுக்கப்பட்டுள்ள மெய்யீற்றுப் புணரியல் பாடத்தை முதலில் சொல்லுகிறார். இப்பகுதியில் நிலைமொழியீறு, வருமொழி முதல் என்ற இரண்டு பிரிவுகளைக் கூறி, இதில் வருமொழி முதலில் வல்லெழுத்து வந்தால் எவ்வாறு புணர்ச்சி விதி அமைகிறது, மெல்லெழுத்தும் இடையெழுத்தும் வந்தால் எவ்வாறு புணர்ச்சி விதிகளின்கீழ்ப் புணருகின்றன என்று கூறினால், இதில் மாணவர்களுக்கு நிலைமொழி, வருமொழி, வல்லினம், மெல்லினம், இடையினம் எதுவும் புரியவில்லை. ஏனென்றால் இப்பிரிவுகள் எல்லாம் முன்னால் உள்ள இயல்களில் உள்ளன. இயல்களின்வரிசைப்படி இலக்கணப்பாடம் நடத்தினால் தான் மாணவர்களுக்கு எளிதில் புரியவைக்க முடியும்.

நன்னூல் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் ஆகிய இரண்டிலும் நூற்பாக்கள் அதிகமாக உள்ளன. இதில் குறிப்பாகத் தேர்வு நோக்கத்தில் சிந்திக்கவேண்டியவை என்று இருந்தால், அப்பகுதிக்கு மட்டும் சிறப்புக் கவனம் செலுத்திப் படிக்க வாய்ப்பு உள்ளது. தேர்வு நேரத்தில் எல்லா நூற்பாக்களையும் படித்துச் செல்கின்றபோது,வினாவிற்கு ஏற்ற பதில் நூற்பா எது என்பதைக் கவனத்தில் கொண்டுவருவது கடினமாக இருக்கிறது என்கின்றனர் மாணவர்கள்.

சில வினாக்கள் நூற்பா வழி அமைவதால், தேர்வில் மாணவர்கள் பதில் எழுத முடியாமல் போய்விடுகிறது. சான்றாக 'உயிர்வரின் உடம்படு மெய்யென்றாகும்' என முடியும் நூற்பாவை எழுதி, விளக்குக எனல். இவ்வாறு நூற்பா வழியில் அமையும் வினாக்களைத் தவிர்க்கலாம்.

## பாடவேளை (கால அட்டவணை முறை)

இளங்கலையின் பொதுக் கால அட்டவணையின் (General Time Table) சிறப்புப்பாடம் இலக்கணம் சில நேரங்களில் காலையில் இறுதி மணி அல்லது மாலையில் இறுதி மணி அமைகிறது. இப்பாடவேளையில் ஆசிரியர் இலக்கணம் கற்பிக்கும்போது மாணவர்களது கவனத்தை ஒருமுகப்படுத்த முடியவில்லை. இப் பாடவேளைகளில் பாடம் நடத்திவிட்டு, மறுநாள் வினாக்கள் கேட்கும்போது மாணவர்கள் சரியாகப் புரிந்துகொள்ளாத தன்மையே அப்பொழுது வெளிப்படுகிறது.

இப்பகுதியில் காணலாகும் இடர்ப்பாட்டை நீக்க இலக்கணப்பாடம் இறுதி மணியில் அமைவதைத் தவிர்க்கலாம்.

## பொதுத் தமிழ் (பகுதி ஒன்று)

முதற் பகுதி தமிழ்த் தேர்விற்கு மூல நூல்களைப் படிக்காமல் உரை நூல்களில் (Notes) உள்ள வினா விடைகளைத்தான் மாணவர்கள் கற்றுச் செல்கின்றனர். இதனால் இலக்கணப் பாடம் முழுமையாகச் சொல்லிவிட்டோம் அல்லது மாணவர்களுக்கு அது புரிந்துவிட்டது என்று சொல்ல வாய்ப்பில்லை. பொதுவாக எல்லா மாணவர்களுக்கும் பகுதி ஒன்றில் குறிப்பிட்ட அளவு இலக்கணப்பாடம் உள்ளது. இப்பாடத்திற்காகத் தேர்வில் ஒதுக்கப்படும் மதிப்பெண்கள் மிகவும் குறைவு. ஆசிரியர் அதிக அளவு எடுத்துக்கொண்டு பாடம் நடத்தினாலும் மாணவர்கள் இதெல்லாம் தங்களால் ஒதுக்கப்பட்ட பாடம் என்று எண்ணி, அதில்கவனம் செலுத்துவதில்லை. மேலும் பொதுத்தமிழ் பாடத்திலெல்லாம் வெற்றி பெற்றால் போதும், அதிலும் குறிப்பாக முதற் பகுதியில் பெறும் மதிப்பெண்கள் மொத்த சதவிகிதக் கணக்கிற்கும் ஏற்றுக்கொள்வதில்லை. எனவே, இதில் அவர்கள் கவனம் செலுத்துவதில்லை. இலக்கணப் பாடத்தில் மாண-

வர்களது கவனத்தை ஈர்க்க வேண்டுமானால் தேர்வில் அப்பகுதிக்கு மதிப்பெண்களை அதிகப்படுத்தவேண்டும்.

## முதுகலைப் பிரிவு

இளங்கலையில் வெவ்வேறு சிறப்புப் பாடம் படித்த மாணவர்கள் முதுகலை வகுப்பில் சேர்த்துக்கொள்ளப்படுகின்றனர். சிலர் அறிவியல் பாடம் படித்தவர்களாகவும் வருகின்றனர். இவர்களுக்கு இலக்கணப் பாடத்தில் போதுமான அளவு பயிற்சி இருக்க வாய்ப்பில்லை. இவர்களுக்கு இலக்கணம் கற்பிப்பதில் அதிகளவு இடர்ப்பாடுகள் உள்ளன.

முதுகலை முதற் பருவத்திலேயே தொல்காப்பியம் எழுத்ததிகாரம் பாடமாக உள்ளது. இலக்கணம் கற்பது என்பது மாணவர்களுக்கு வேண்டாத ஒன்று என்ற நிலை இருந்து வருகிறது. மாணவர்களது கொள்திறன் புரியாமலேயே அவர்கள்மீது பொதுவாகப் பாடங்கள் திணிக்கப்படுகின்றன. இதில் குறிப்பாக இலக்கணமும் ஒன்று. முதற்பருவத்தில் அவர்களை அறிந்துகொண்டு அவர்களுக்கு ஏற்றவாறு இரண்டாம் பருவத்திலிருந்து இலக்கணப் பாடம் நடத்தினால் அதில் வெற்றி பெறலாம்.

## ஒப்பீடு வேண்டாம்

முதுகலையில் தொல்காப்பியம், நன்னூல், மொழியியல் என்ற மூன்றையும் ஒப்பிட்டுக் கற்கவேண்டிய சூழ்நிலை தற்பொழுது உள்ளது. இதைத் தவிர்க்கலாம். தொல்காப்பியம் நன்னூல் இரண்டும் பல நிலைகளில் ஒத்தும் பெரியளவிலும் உள்ளன.எனவே இவற்றில் ஏதேனும் ஒரு நூலை மட்டுமே எடுத்துக்கொண்டால் அதில் முழுமை பெறலாம்.

மூன்று பாடத்தையும் ஒப்பிட்டுப் படிக்கும் பொழுது தேர்வு நேரத்தில் கவனம் செலுத்தமுடியவில்லை. குறிப்பாகத் தேர்வில் சில நேரங்களில் மொழியியலில் மட்டுமே அதிகளவிலான வினாக்கள் இடம்பெறுகின்றபோது அத்தேர்வில் மாணவர்கள் வெற்றிபெற முடியாமல் போகிறது. இப்பகுதியில் மாணவர்களது நிலை, தொல்காப்பியம், நன்னூல், மொழியியல் பாடங்களில் ஏதாவது

ஒன்றிரண்டை அவர்களே ஒதுக்கிவிட்டு ஒரு நூலை மட்டுமே கவனத்துடன் படிக்கிறார்கள். இதனால் மாணவர்களுக்கு இலக்கணம் தொடர்பான முழு அறிவும் சென்று அடைவதில்லை. இக்கருத்தை மனதில் கொண்டு முதற் பருவத்தில் நன்னூல் மட்டும் அல்லது மொழியியல் மட்டும் தேர்வில் இடம்பெறச் செய்யலாம். மீதியுள்ள மூன்று பருவங்களில் தொல்காப்பியம் மூன்று அதிகாரங்களையும் (எழுத்து, சொல், பொருள்) கற்பிக்கலாம். இவ்வாறு தனித்தனியாகக் கற்பிக்கின்றபொழுது மாணவர்கள் ஒவ்வொரு இலக்கணத் தேர்விலும் முழுமையான கவனம் செலுத்தி அதிகமாக மதிப்பெண்கள் பெற வாய்ப்பை ஏற்படுத்தித்தரலாம்.

முதுகலை இரண்டாம் பருவத்தில் தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையர் உரை என்று இலக்கணப் பாடம் ஒதுக்கப்பட்டுள்ளது. இத்தேர்வில் சேனாவரையர் உரையின் மூலம் வினாக்கள் இடம்பெறுகின்றன. அவரது உரை சிறப்பிற்குரியதே, ஆனால், மாணவர்கள் உரை வழியாகப் பதில் எழுதுவதில் அதிகளவு இடர்ப்படுகின்றனர்.

## சிறப்புப் பிரிவு

தேர்வுக்கு என்று சிறப்பாகச் சில நூற்பாக்களைத் தேர்ந்தெடுத்து இலக்கணப் பாடம் கற்பிக்கவேண்டும். அவ்வாறு தேர்ந்தெடுக்கப்படும் நூற்பாக்களுக்குப் பழைய எடுத்துக்காட்டுகளைத் தவிர்த்து, தற்காலத்தில் ஏற்புடைய நிலையிலுள்ள எடுத்துக்காட்டுகளைக் கூறவேண்டும்.

வேறு எம்மொழியிலும், எம்மாநிலத்திலும் இல்லாத நிலை, தமிழ் மொழிக்குத்தமிழ் மாநிலத்தில் மட்டுமே உண்டு. அதாவது, தமிழ்ப்பாடம் படிக்காமலேயே இளங்கலை, முதுகலை பட்டம் பெற்றுச் செல்கின்ற வாய்ப்பு இங்குதான் உண்டு. மொழியறிவு, மொழி பற்றிய சிந்தனை, மொழி உணர்வு எல்லாம் இன்று நம்மிடையே இல்லை என்றுகூடச் சொல்லலாம். தமிழ்மொழியை எல்லாவகுப்பிலும் கட்டாயப் பாடமாக இடம்பெறச் செய்யவேண்டும். அதேபோல் கல்லூரியில் நடத்தப்பெறும் எல்லா வகுப்புகளுக்கும் தமிழ்ப் பாடம் கட்டயாமாக்கப்பட வேண்டும்.

அப்பாடத்தின் மூலம் பெறப்படும் மதிப்பெண் மேல்படிப்பிற்குச் செல்லும்போது கணக்கில் எடுத்துக்கொள்ளவேண்டும். இந்நிலை வழக்கத்திற்கு வந்தால் தமிழ் மொழியின் நிலையும், குறிப்பாக இலக்கணப் பாடம் கற்பிக்கும் முறையும் மேன்மை அடையலாம்.

## இதழ்கள் திரைப்படம் பற்றிய சிந்தனை

''இலக்கணம் என்று ஒன்றிருப்பதைத் தமிழ் இதழ்கள்
நினைத்துப் பார்ப்பதே இல்லை!
ஒற்றுக்கள், பன்மை விகுதி, மொழிக்கு முதலில் வராத
எழுத்துக்கள், வல்லின
இடையின வேறுபாடுகள் முதலியவற்றை இதழ்கள் கண்டு
கொள்வதே இல்லை.
இப்பிழைகள் யாவும் மொழியறிவு இல்லாத இதழாசிரி-
யரின் குறைகளே யாகும்''

என்று வலியுத்திக் கூறுகிறார் பேராசிரியர் இரா.கோதண்டபாணி தமது 'இதழியல்' எனும் நூலில் (ப. 210).

நாளிதழ்களில் வரிகள் ஒற்றெழுத்துடன் தொடங்குகின்றன. வார இதழ்களில், பருவ இதழ்களில் எல்லாம் ஆங்கிலச் சொற்களை அதிகமாகக் கையாளுகின்றனர். சான்றாக 'ஜூனியர் விகடன்', 'நக்கீரன்' போன்ற இதழ்களில், 'டைலாக்', 'பாரஸ்ட் ஆபீஸர்', 'ரேஞ் ஆபீஸர்' போன்ற பிறமொழிச் சொற்கள் அதிகளவில் இடம்பெறுகின்றன. அத்துடன் இவ்விதழ்களில் இலக்கணப் பிழைகள் மலிந்து காணப்படுகின்றன. பத்திரிகையில் இடம்பெறும் செய்திகளே மாணவர்கள் மனதில் இடம்பெறுகின்றன. இலக்கணம் அங்கு இரண்டாவது இடத்திற்குச் செல்கின்றது.

உதாரணமாக நன்னூல் மெய்யீற்றுப் புணரியலில் 24வது நூற்பா,

''ளள வேற்றுமை றடவு மல்வழி
அவற்றோ டுறழ்வும் வலிவரின் மெலி
மேவின் னணவும் இடைவரின் இயல்பும்
ஆகும் இருவழி யானும் என்ப''

இங்கு நிலைமொழியீறு ல, ள என்ற ஈறுகொண்டு முடிந்து, வருமொழி முதல் வல்லெழுத்தைக் கொண்டு தொடங்குமானால் புணர்ச்சியில் முறையே ற், ட் என்ற மெய் அங்கு வரும் என்று விளக்கப்படுகிறது.

(உம்) கால் + குறை = காற்குறை
முள் + குறை = முட்குறை

இந்நூற்பாவின் கருத்தை எத்தனை இதழாசிரியர்கள் உணர்ந்திருப்பார்கள். அடிப்படியிருக்க நமது மாணவர்கள் இதழ்களின் வழியாகப் பெற்ற செய்திகளையே உண்மை என்று எண்ணி அதையே மனத்தில் கொண்டு செயல்படுகின்றனர். ஆகையால் இலக்கணக் கருத்து அவர்களிடம் நிலைபெற வாய்ப்பில்லை.

திரைப்படத்துறை என்று எடுத்துக்கொண்டால், எழுத்துக்களின் எண்ணிக்கை அடிப்படையில் தலைப்பு அமையவேண்டுமென்று எண்ணி, எழுத்துக்களைச் சுருக்கியும் விரித்தும் தலைப்புகள் அமைக்கின்றனர். இத்துறையில் ஆங்கிலச் சொற்கள் அதிகமாகக் கையாளப்படுகின்றன. 'லவ் பேர்ட்ஸ்', 'Bக்பாஸ்', 'லவ் டுடே' போன்றன. இதையெல்லாம் மனதில் கொண்ட நமது மாணவர்கள் தேர்வுத்தாளில் 'அல்லது' என்று எழுதுவதற்குப் பதிலாக 'OR' என்று ஆங்கிலத்தில் எழுதுகிறார்கள். இதனால் இலக்கணம், பாடம் என்ற நிலையில் வகுப்பறையளவில் நின்றுவிடுகிறது. வகுப்பறையைவிட வெளி உலகமே மாணவர்களை அதிகமாகப் பிடித்துக்கொண்டுள்ளதால் எழுதுவதிலும் பேசுவதிலும் இலக்கணம் முறையாகக் கையாளப்படுவதில்லை.

முடிவாக

* இறுதிமணி நேர இலக்கணப்பாட வகுப்பைத் தவிர்க்கலாம்.
* நூற்பாவழிக் கேட்கும் வினாக்களை நீக்கலாம்.
* ஒப்பிட்டுக் கற்கும் முறை தற்பொழுது வேண்டாம்.

* உரையாசிரியரின் உரைவழி கேட்கப்படும் வினாக்களை மாற்றி அமைக்கலாம்.

* பழைய எடுத்துக்காட்டுகளை நீக்கி, தற்காலத்திற்குப் பொறுத்தமான எடுத்துக்காட்டுகளை இடம்பெறச் செய்யலாம்.

* மேற்படிப்பிற்குச் செல்லும்போது பகுதி ஒன்றில் பெறப்படும் மதிப்பெண்ணையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும்.

* திரைப்படம், விளம்பரம், நாளிதழ்கள், பருவ இதழ்களில் இடம்பெறும் பிறமொழிச் சொற்களை நீக்கினால் நலம் பயக்கும்.

# தொல்காப்பியப் பொருளிலக்கணம் கற்பித்தலில் சில சிக்கல்களும் சிந்தனைகளும்

அ. பிச்சை

8

முன்னுரை

தமிழ் மொழி இலக்கணநலமும் இலக்கியவளமும் உடை-யது. தமிழின் இலக்கண அமைப்பை விளக்கும் தொல்காப்பியம் மூன்று அதிகாரங்களைக் கொண்டது. மூன்றாம் அதிகாரமான, பொருளதிகாரத்திலிருந்து யாப்பு, அணி பாட்டியல் என இலக்-கணங்கள் கிளைத்தன ! நிகண்டுநூல்களும் தோன்றின புலமை யிலக்கணம் புதுமையிலக்கணமாக மலர்ந்தது. பொருளதிகாரம் கற்பித்தலில் பல சிக்கல்கள் உள்ளன. அவற்றுள் கீழ்க்காணும் நான்கினை மட்டும் பரிசீலனைக்கும் தேடலுக்கும் வைத்துக் கொள்ளலாம்.

1. தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் நோக்கம் என்ன ? அது தமிழரின் வாழ்விற்கு வரம்பு கட்டுகின்றதா ?

2. தொல்காப்பியப் பொருளதிகார இயல்களின் வரிசை முறை கற்பித்தலுக்கு ஏற்றதா ? பொருத்தமானதா ?

3. தொல்காப்பியப் பொருளதிகார இலக்கண விதிகளை விளக்குவதில் இடர்ப்பாடுகளுக்குக் காரணம் இது ஒருவரால் எழுதப்படவில்லை என்பதா ?

4. தொல்காப்பியப் பொருளதிகாரம் இலக்கியத் திறனாய்வுக் கொள்கைகளைத் தருகின்றதா ? இலக்கியங்களைப் படைக்க வழிகாட்டுகின்றதா ?

### பொருளதிகாரத்தின் நோக்கம்

19-ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் பொருளதிகாரத்தைக் கற்பித்த-ஆராய்ந்த தமிழறிஞர்கள் பொருளதிகாரம் தமிழரின் வாழ்விற்கு வரம்பு கட்டி வாழ்விற்கு இலக்கணம் கூறுகின்றது என்றும், தமிழரின் பண்பாட்டையும் நாகரிகத்தையும் எடுத்துரைக்கின்றது என்றும் விளக்கினார்கள். இக்கருத்தையே மு. வரதராசனார் அ. ச. ஞானசம்பந்தன், சி. இலக்குவனார், ச.வே. சுப்பிரமணியன் ஆகியோர் வழிமொழிந்தார்கள்... "இப்பொருளதிகாரம் வெறும் மொழிக்கும் மொழியாலாகிய இலக்கியத்திற்கும் மட்டும் இலக்கணம் வகுக்கவில்லை. அம்மொழியைப்பேசும் மக்களுக்கும் அவர்கள் வாழ்க்கை முறைக்குக் கூட இலக்கணம் வகுத்தது. இதனால் தொல்காப்பியப் பொருளதிகாரத்தை ஒரு சமுதாய நூல் என்று கூடக் கூறலாம்'' (ப. 285) என்று அ.ச. ஞானசம்பந்தன் இலக்கியக் கலையில் குறிப்பிடுகின்றார். இதே கருத்தையே "பொருள் இலக்கணங்கள் இவ்வாறு இலக்கிய இயல்பையும் பொருண்மையையும் சுட்டுவதோடு நில்லாது, சமுதாயப் பிரதிபலிப்பாகவும் அமைகின்றன. இலக்கியம் காலக்கண்ணாடி எனவும், மக்கள் வாழ்வின் பிரதிபலிப்பு எனவும் கூறுவதற்கேற்ப இலக்கணமும் அமைதல் தமிழின் தனித்தன்மை'' (ப.6) என்று தமது கட்டுரையில் (பொருளிலக்கணம்) ச.வே. சுப்பிரமணியன் வலியுறுத்துகின்றார்.

ஆனால் இன்று சில அறிஞர்கள் 'வாழ்க்கைக்கு இலக்கணம் கூறுவது பொருளதிகார நோக்கமன்று; இலக்கிய நெறிகளையே வரையறுக்கின்றது. அது காட்டுகின்ற வாழ்வுமுறை-

கள் இலட்சிய வாழ்வே. தமிழ் மக்களின் வாழ்வுமுறைகள் அல்ல' என்று விளக்கியுள்ளார்கள். குறிப்பாக எஸ். ஆரோக்கியநாதன் இவ்வாறு கருதுகின்றார் 'பொருளதிகாரத்தில் பேசப்படும் நிலம், பிரிவொழுக்க முறைகள்-தாழ்வான ஒழுக்கங்கள் முதலியன தொல்காப்பியரால் தரப்படும் இலக்கியப் பொருள்களும் மரபு-களுமே யன்றி, பண்டைத் தமிழர்களின் நாகரீகம், வாழ்க்கை முதலியவற்றின் படப்பிடிப்பு அல்ல' என்று (ப.34) தம் கட்டு ரையில் ஆணித்தரமாகக் கூறுகின்றார். தா. மணி என்பவரும் 'வாழ்க்கைக்கு இலக்கணம் கூறுவது பொருளதிகார நோக்க-மன்று இலக்கிய நெறிகளையே வரையறுக்கின்றது' என்று (ப. 617) மொழிந்துள்ளார். எனவே, பொருளதிகாரத்தின் நோக்கம் இளம்தலைமுறை ஆய்வாளர்களாலும் தெளிவுபடுத்-தப்பட்டு வருகின்றது என்பதை அறியலாம்.

## இயல்களின் வரிசை முறை

தொல்காப்பியப் பொருளதிகார இயல்கள் 1. அகத்தி-ணையியல் 2. புறத்திணையியல் 3. களவியல் 4. கற்பியல் 5. பொருளியல் 6. மெய்ப்பாட்டியல் 7. உவமயியல் 8. செய்-யுளியல் 9. மரபியில் என்ற வரிசை முறையில் அமைந்துள்-ளன. இளம்பூரணர் போன்ற உரையாசிரியர்கள் இயல்களின் வரிசை முறைக்குக் காரணம் கூறியுள்ளார்கள். இந்த வரிசை முறை தொல்காப்பியரால் தரப்பட்டதா? முற்காலத்தில் தொகுத்-தவரால் தரப்பட்டதா என்பது தெரியவில்லை. நாவலர் சோம-சுந்தர பாரதியார், வெள்ளைவாரணனார் போன்றோர் இதே வரிசை முறையைப் போற்றி விளக்கியுள்ளனர்; சிலர் வேறுபடு-கின்றனர்.

''தொல்காப்பியரும் தமிழ்ச் செய்யுட் பொருளை அகப்-பொருளும், புறப்பொருளும் ஆக இரு கூறாக்கி, அவற்றின் பொது இயல்புகளை அல்லது இலக்கணங்களைத் தம் நூலின் பொருட்படலத்தில் முதற்கண் அகத்திணை, புறத்திணை என முறையே வகுத்தமைத்துப் பிறகு அவற்றுள் அகத்தின் சிறப்-பியல்புகளைக் களவியல், கற்பியல், பொருளியல்களில் விளக்கி அவற்றின் பிறகே அப்பொருள்களை அறியக் கூறும் கருவிக-

ளாகிய செய்யுளியல்புகளை மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல் என்னும் மூன்று பகுதிகளில் கூறி இறுதியில் செய்யுள் செய்வார் தமிழ் மரபு பிறழாமல் காத்தற்கு வேண்டியவற்றை மரபியலில் விளக்கிப் போந்தார்' என்று நாவலர் சோமசுந்தரபாரதியார் பொருட்படலத்தில் விளக்கியுள்ளார். இதே வரிசை முறையை ஏற்றுக் கொண்டு அ.ச. ஞானசம்பந்தன் மனோதத்துவ அடிப்படையிலும் திறனாய்வுநெறி முறையிலும் காரணம் கற்பிக்கின்றார். (பக் : 291 - 295) மேலும், அவர் புறத்திணையில் ஏழு திணைகள் ஒன்றன்பின் ஒன்றாக அமைந்து வருவதற்கும் அமைதி காண்கின்றார்.

முற்கூறிய மரபான வரிசை முறையிலிருந்து சிறிது மாற்றம் செய்து சிந்திக்கின்றனர் சி. இலக்குவனாரும் புலவர் குழந்தையும். அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் என்று அகத்திணை தொடர்பான நான்கு இயல்களை முதலில் கூறி, அடுத்து புறத்திணையைச் சொல்லி, இறுதியில் இரண்டிற்கும் பொதுவான மீதமுள்ள நான்கு இயல்களை எடுத்துரைத்துள்ளார் சி. இலக்குவனார். புலவர் குழந்தை இக்காலத்தமிழ் மக்கள் யாவரும் எளிதில் புரிந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தில் பொருளதிகார உள்ளடக்கத்தை ஆறு இயல்களில் - அகத்திணையியல், பொதுவியல், களவியல், கற்பியல், மெய்ப்பாட்டியில், புறத்திணையியல் என்னும் இயல்களில் - புத்துரை எழுதியுள்ளார். காந்திகிராம கிராமியப் பல்கலைக் கழக முதுகலைத் தமிழ்ப்பாடத் திட்டம் 1. செய்யுளியல் 2. அகத்திணையியலும் களவியலும் 3. கற்பியலும் பொருளியலும் 4. மெய்ப்பாட்டியலும் உவமையியலும் 5. புறத்திணையியலும் மரபியலும் என்னும் ஐந்து அலகுகளில் (units) இலக்கியக் கொள்கை அடிப்படையில் பொருளிலக்கணத்தை மாணவர்களுக்குக் கற்பித்து வருகின்றது. எனவே, தொல்காப்பியப் பொருளதிகாரத்தைப் பாடத்திட்ட வரைவியல், இலக்கியத் திறனாய்வு, இலக்கியப் படைப்பு முறை ஆகியவற்றுக்குத் தக்கவாறும், கற்பவரின் உளவியல் மற்றும் புரிதிறன் ஆகியவற்றுக்கு ஏற்றவாறும் வரிசைப்படுத்தும் முறை பரிசோதனை செய்யப்பட்டு வருகின்றது என்பது அறியத்தக்கது.

### ஒருவரால் எழுதப்படவில்லை

பொருளதிகார உள்ளடக்கத்தை விளக்கும் செய்திகளில் கூறியது கூறல், பொருள் விளங்காமை, பொருத்தமின்மை,

முரண்பாடு போன்ற குழப்பங்கள் / இடர்ப்பாடுகள் காணப்படு-கின்றன. சங்க காலத்திற்கு முன் வாழ்ந்த தொல்காப்பியர் அகத்-தியரின் மாணவராகிய தொல்காப்பியர், ஆகிய இருவரின் வெட்-சித்திணைச் செய்திகள் கலந்துள்ளன என்று தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் விளக்கித்; தொல்காப்பியப்பொருளதிகாரம்ஒருவரால் எழுதப்படவில்லை என்று கூறியுள்ளார். இருவரால் அல்லது பலரால் எழுதப்பட்டிருக்கலாம் என்ற கருது கோளை அறிஞர்-கள் முன் வைத்துள்ளார். ஆனால், எந்த அறிஞரும் இந்தக் கோணத்தில் தொல்காப்பியத்தை ஆராய்ந்து சிக்கலைத் தீர்க்க-வில்லை.

1. களவியலிலும் கற்பியலிலும் மாந்தர்களின் கூற்று-வகைகள் விளக்கப்பட்டுள்ளன. அகத்திணையில் பொதுப்படக் கூறும் பொழுது, அங்கும் நற்றாய், தோழி, கண்டோர், தலை மகன், ஆகியோரின் கூற்றுக்கள் இடம் பெற்றுள்ளன (நூ :39 - 45)இவை ஏன்களவியலில் இடம்பெறக்கூடாது? இவை இரு/பல தொல்காப்பியர்களில் ஒருவரால் இயற்றப்பட்டதா; இவற்றுக்கு அறிஞர்கள் அமைதிகண்டு பழமை காக்க வேண்டி-யுள்ளது.

2. 'முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே'

என்று முதற் பொருளைச் சொன்ன தொல்காப்பியர்,

'புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்
ஊடல் அவற்றின் நிமித்தம் என்றவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே'

என உரிப்பொருளைச் சொல்லும்போது இவற்றின் வரிசை-முறையைமாற்றிவிடுகின்றார். இவ்வரிசைமுறை மாற்றம் இருவ-ரால் /பலரால் எழுதப்பட்டதால் அல்லது தொகுக்கப்பட்டதால் ஏற்பட்டதா? முதற் பொருளைச் (நிலம்)சொல்வதற்கு ஒரு வரிசை முறையும், அவற்றிற்குரிய உரிப்பொருளைச் சொல்வதற்கு மற்றொரு வரிசை முறையையும் ஏன் சொல்ல வேண்டும்?

ஒன்றாக இருந்தால் கற்பவர்களுக்கு எளிமையாக இருக்குமல்லவா? இங்கும் இருவகையான முறைமைக்கும் காரணம் கண்டு தெளிவு அடைய முயற்சி செய்கின்றோம்.

3. 'உரிப் பொருள் அல்லன மயங்கவும் பெறுமே' என்று பொதுப்படக் கூறியவர், 'நிலன் ஒருங்கு மயங்குதல் இல்லென மொழிப' என்று முரண்படக் கூறுவது போலத் தோன்றுகிறது. 'முதலெனப்படுவது நிலம், பொழுது இரண்டு' என்று பகுத்துக் கூறியவர் 'முதல் எனப்படுவது ஆயிருவகைத்தே' என்று தொகுத்துக் கூறுகின்றார். இதுவும் கூறியது கூறலாகத் தோன்றுகிறது.

4. மரபு பற்றிச் செய்யுளியலில் ஒரு விதமாகவும் (நூ : 76) மரபியலில் இன்னொரு விதமாகவும் (நூ : 92 - 94); இது போலவே நூல் வகை பற்றி இரண்டு இயல்களிலும் இரு முறைகளில் விளக்குகின்றார். தூக்கு, பா என்ற உறுப்புக்களிடையே வேறுபாடு தெளிவாகக் கிடைக்கவில்லை. இதுபோலவே தூக்கு, பண்ணத்தி என்பதற்கும் நுட்பமான வேறுபாடு புலப்படவில்லை. இதனால் தானோ என்னவோ பிற்கால யாப்பிலக்கண நூல்களில் தூக்கு, பண்ணத்தி ஆகியவைகள் உறுப்புக்களாக இடம் பெறவில்லை; விடுபட்டுள்ளன.

5. ஒரே பொருளை ஒரே இடத்தில் பேசாமல் வெவ்வேறு இயல்களில் பேசுவதால் கற்பவர்களுக்கு இடர்ப்பாடு தோன்று கிறது. எடுத்துக்காட்டாக உவமையை அகத்திணையியலிலும், பொருளியலிலும், உவமயியலிலும் கூறுகின்றார். அகத்திணையி யலில் (நூ : 49 - 52) உள்ளுறை உவமம் பற்றி விளக்கியுரைக்கப்படுகின்றது. உள்ளுறை வகைகள் பற்றி பொருளியல் விளக்குகின்றது. பொருள் புலப்பாட்டு உத்திகள் ஒரே இடத்தில் தொகுத்துத் தரப்படுமானால் கற்பவர்கள் சிரமமின்றிக் கற்கலாம். இதைப் போலவே செய்யுளியலில் ஒரு வகையான உரைவகைப்பாகுபாடும் (நூ : 166, 167), மரபியலில் இன்னொரு வகையான உரைவகைப்பாகுபாடும் (நூ : 103 - 106) சொல்லப்படுகின்றன. இவையெல்லாம் கற்பவர்களுக்கு மயக்கத்தைத்தரும் இடங்களாகும்.

6. அகத்திணையியலில் களவு, கற்பு என்னும் இரண்டிற்குப் பொதுவானவற்றைப் பேசுவதோடு 'பாலைத் திணைப் பிரிவு' இவ்வியலில் அதிகமாகக் குறிப்பிடப்படுகின்றது. இதனை ஏன் களவியலில் கூறக்கூடாது? இதற்கும் ஒரு சமாதானம் கற்பித்துக் கொள்கிறோம். பிரிவுகள் பற்றிக் கூறும் பொழுது நூற்பாக்கள் அடுத்து அடுத்து தொடர்புபடுத்தப்படவில்லை. சான்றாக, இருவகைப் பிரிவைப் பற்றிக் கூறும் பதின் மூன்றாவது (இரு வகைப் பிரிவும்...) நூற்பாவிற்கு அடுத்து திணை மயக்கம் பற்றிய நூற்பா அமைகின்றது. பதினேழாவது நூற்பா பிரிதலின் வேறுவகையைப் பற்றிக் குறிப்பிட்டாலும் பதினான்காவது நூற்பாவாக இடம் பெறவில்லை. ஆகவே வரிசைப்படுத்தல் புதிய கோணத்தில் செய்யவேண்டி உள்ளது.

7. முதற்பொருள் (நிலன்கள்), உரிப்பொருட்கள் ஆகிய இரண்டுக்கும் நிரல்நிறையான வரிசைமுறை இல்லாதது போலவே, யாப்பின் ஏழு பகுதிகளை (பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல்) விளக்கியமுறையிலே (நூ:75) அவற்றை அளவியல் பற்றிக்கூறும்பொழுது நிரல்படுத்தவில்லை. நூல், உரை, பிசி, முதுமொழி, மந்திரம், அங்கதம் என்னும் வரிசையில் யாப்புவகைகளை விளக்கியுரைக்கிறார். செய்யுளை இருவகைப்படுத்தும்பொழுது (நூ : 123) அங்கதம் ஒருவகையான செய்யுளாகச் சொல்லப்படுகின்றது. (நூ : 120, 125) எழுவகையாப்பு வகையிலும் ஒன்றாகவும் குறிப்பிடப்படுகின்றது. (நூ : 75) ஆகவே, தொல்காப்பியத்தைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் வரிசைமாற்றம், கூறியது கூறல், மாறுபடக்கூறல், வேறுபடக்கூறல் ஆகியவற்றுக்குத் தொல்காப்பியம் ஒருவரால் எழுதப்படவில்லை என்பதைக் கருத்திற்கொண்டு விளக்கமளிக்க வேண்டும்.

8. பொருளியலில் உள்ள உணர்வுகளைக்காட்டும் (நூ :51) நூற்பா ஏன் மெய்ப்பாட்டியலில் சேர்க்கப்படவில்லை? மெய்ப்பாடு என்பது பொருட்புலப்பாடு என்பதால், பொருளியலின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளதா ? பொருளியலைத் தொடர்ந்து வருவது மெய்ப்பாட்டியல் என்பதால் அதனை இணைப்பதற்காக வைக்கப்பட்டுள்ளதா? அது ஏன் பொருளியலின் இறுதியில் இடம்-

பெறுகின்றது? புறத்திணையின் வெட்சியின் கரந்தைத்துறைகள் 21-உம், உழிஞையின் கீழ் நொச்சித்துறைகள் 12-உம் தொகுத்துத்தரப்படுகின்றன. உழிஞைத்திணையில் ஏழும், பதினெட்டும் இரண்டு தொகுப்புகளாகத் துறைகள் தரப்பட்டுள்ளன. காஞ்சித்தணை 'துறையிரண்டு உடைத்தே' என்று கூறப்படுகின்றது. பாடாண்துறைகள் இரண்டு தொகுப்புக்களாகத் தரப்படுகின்றன. பாடாண் பகுதிகளை விளக்குவதுபற்றி உரையாசிரியர்கள்தரும் செய்திகளும் விளக்கங்களும் மாணவர்களையும் ஆசிரியர்களையும் குழப்ப நிலைக்குத் தள்ளிவிடுகின்றன. புறத்திணையியலில் ஏற்படும் மயக்கத்திற்கும் குழப்பத்திற்கும் இடர்ப்பாடுகளுக்கும் காரணம் தொல்காப்பியம் பலரால் எழுதப்பட்ட தொகுப்பு நூல் என்று கூறலாம்.

9. மேலும் யாப்பருங்கல விருத்தியுரையில் 'செய்யுளியல் உடையார்' என்னும் பெயரில் பல நூற்பாக்கள் காணப்படுகின்றன. அவற்றைத் தொகுத்துக்காணும் பொழுது சில தொல்காப்பிய நூற்பாக்களோடு ஒத்துக்காணப்படுகின்றன ; சில காணப்படவில்லை ; வேறுபட்டுள்ளன. எனவே, செய்யுளியல் உடையாரின் சில நூற்பாக்களும் பெயர் ஒற்றுமை கருதி, தொல்காப்பியச்செய்யுளியலில் புகுந்திருக்கக்கூடும். தொல்காப்பியச்செய்யுளியல் மருட்டும் சில குழப்பங்களுக்கு இது ஒரு காரணமாக அமைகின்றது. ஆகவே, தொல்காப்பியம் பலரால் இயற்றப்பட்டிருக்கலாம் என்னும் கருத்து வலுவுடையதாகின்றது.

## இலக்கியப் படைப்பாக்க நூல்

தொல்காப்பியப் பொருளதிகாரம், செய்யுள், அதாவது இலக்கியத்தின் பொருளையும் மரபுகளையும் விளக்குகின்றது என்று கூறுவர். இதனால், செய்யுளையும் அதன் உறுப்புக்களையும் விளக்கும்வகையில் பொருளதிகார இயல்களை நிரல்படுத்திக்கற்பிக்கலாம். இப்படிக்கற்பிக்கும் பொழுது செய்யுளியல் முதல் இயலாகவும் பிற இயல்கள் அதன் விளக்கமாகவும் அமையும். தொல்காப்பியப் பொருளதிகாரம் 'இலக்கியக்கோட்பாட்டை' விளக்குவது என்பது உறுதிப்படும். இந்தப்புதிய அணுகுமுறையை மேற்கொள்வது பொருளதிகாரத்தைக் கற்பதில் ஆர்வத்தைத் தூண்டும்.

மேலும், பொருளதிகாரம் இலக்கியத்திறனாய்வுக்கொள்கையைக் கூறுவதாகக் கருதுவர். சிலர் இலக்கியப் படைப்பாக்கத்திற்கான இலக்கண விதிகளை உரைப்பதாகக் கூறுவர். நிறைய இலக்கியங்களைப் படைக்காத அக்காலகட்டத்தில், இலக்கியங்களுக்குப் போட்டிகளும் விருதுகளும் வழங்காத அக்காலச்சூழலில் இலககியத்திறனாய்வு மற்றும் மதிப்பீடு என்பது பற்றிய சிந்தனை எழுந்திருக்காது. ஆகவே, தொல்காப்பியப் பொருளதிகாரம் இலக்கியப்படைப்புக் கொள்கையை (Theory of Literary Production) எடுத்துரைக்கும் பகுதியாகக்கருதலாம். இதனைப் பிற்காலத்தில் செய்யுட்களைத் தொகுப்பதற்குரிய மேல் வரிச்சட்டகமாகக் கருதினார்கள். இன்று சங்க இலக்கியங்களை ஆராய்வதற்குரிய இலக்கியக் கொள்கையை வழங்கும் மூலாதாரமாகக் கொள்கிறார்கள்.

## முடிவுரை

முதலில் மாணவர்கள் 'தொல்காப்பியப் பொருளதிகார மூலத்தை நன்கு கசடறக்கற்று தொல்காப்பியத்தின் ஆன்மா'-வைப் புரிந்து கொள்ளவேண்டும். பின்பு உரையாசிரியர்களின் விளக்கங்களையும் சர்ச்சைகளையும் உள்வாங்கிக் கொள்ளவேண்டும். இறுதியில் இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் அறிஞர்களின் புதிய சிந்தனைகளைத் தொகுத்துக்காண வேண்டும். இன்று தொல்காப்பியப் பொருளதிகாரம் அமைப்பியல், பின்னை அமைப்பியல், பின்னை நவீனத்துவம் (பெண்ணியம், தலித்தியம் உள்பட) ஆகியவற்றின் அடிப்படையில் அலசி ஆராயப்படுகின்றது. இப்புதிய கருத்தாக்கங்களின் குறை, நிறைகளையும், வரம்புகளையும் தெரிந்து மாணவர்கள் தெளிவு படுத்திக்கொள்ள வேண்டும். இதற்குக் கற்றுத்துறைபோகிய ஆசிரியர்கள் துணை புரிய வேண்டும்.

## துணைநூற்பட்டியல்

அருணாசலம், ப., தொல்காப்பியர், தமிழ்ப்புத்தகாலயம், சென்னை - 5, 1975.

அழகியநம்பி, புலவர் குழந்தையின் தொல்காப்பிய உரைத்திறன் **ஆய்வுக்கோவை : 1, 1994, பக் : 67—71.**

ஆரோக்கியநாதன், எஸ். தொல்காப்பியரின் பொருளதிகாரமும் பண்டைத்தமிழரின் வாழ்க்கையும், **ஆய்வுக்கோவை : 6, 1974,** பக் : 31 - 35

இலக்குவனார், சி. **தொல்காப்பிய ஆராய்ச்சி**, வள்ளுவர் பதிப்பகம், புதுக்கோட்டை, 1971 (2-ம் பதிப்பு)

சுப்பிரமணியன். ச. வே. பொருளிலக்கணம், **தமிழ் இலக்கியக் கொள்கை - 3**, உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, 1978, பக் : 1 - 19

ஞானசம்பந்தன், அ.ச. *இலக்கியக்கலை*, கழக வெளியீடு, சென்னை, 1984 (மறுபதிப்பு)

புலியூர்க்கேசிகன் (பதி,) **தொல்காப்பியம்**, பாரிநிலையம், சென்னை - 108, 1996 (9-பதி)

மணி, தா. பொருளதிகாரத்தின் நோக்கும் போக்கும், **ஆய்வுக்கோவை : 22,** பக் : 616 — 621.

தமிழவன், **அமைப்பியல் வாதமும் தமிழிலக்கியமும்**, காவ்யா, பெங்களூர், 1991

வரதராசன், மு. **இலக்கிய மரபு**, பாரிநிலையம், சென்னை - 1 1979

# சந்திவிதிகளைக் கற்பித்தல்

தூ. சேதுபாண்டியன்

## 9

தமிழ் எழுத்து இலக்கணத்தில் சந்திவிதிகள் பெரும் இடத்தைப் பெற்றுத் திகழ்கின்றன. மொத்தம் ஒன்பது இயல்களைக் கொண்டு விளங்கும் தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் ஆறு இயல்கள் புணர்ச்சி விதிகளைப் பற்றிப் பேசுகின்றன. தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் மொத்தம் 483 நூற்பாக்கள் உள்ளன. இவற்றுள் 380 நூற்பாக்கள் புணர்ச்சி விதிகளைப் பற்றியனவாய் அமைந்துள்ளன. இதே போன்று நன்னூல் எழுத்ததி காரத்தில் இடம் பெறும் ஐந்து இயல்களில் மூன்று இயல்கள் புணர்ச்சி விதிகளையே பேசுகின்றன. நன்னூல் எழுத்ததிகாரத்தில் இடம் பெற்றுள்ள 202 நூற்பாக்களுள் 107 நூற்பாக்கள் புணர்ச்சி விதிகள் பற்றியனவாகும். இவை எல்லாம் எழுத்ததிகாரத்தில் புணர்ச்சி விதிகள் பெறும் இன்றியமையாமையை உணர்த்துகின்றன. இத்தகைய புணர்ச்சி விதிகளை மாணவர்களுக்குக் கற்பிக்கும்போது தோன்றும் சிக்கல்களை இனங்காணுவதே இந்த ஆய்வின் நோக்கமாகும். இங்குக் கற்பிக்கும்போது தோன்றும் சிக்கல்கள் என்பது ஆசிரியர்களின் பார்வையில் கூறப்பட்டாலும்; மாணவர்களின் பார்வையில் கற்கும்போது தோன்றும் சிக்கல்களையும் உள்ளடக்கியே இந்த ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

இந்த ஆய்வுக்குத் தொல்காப்பிய எழுத்ததிகாரமும், அதனைக் கற்பிக்கும்போது பெற்ற பட்டறிவுமே முதன்மைச் சான்றாகின்றன. சந்திவிதிகளைக் கற்பித்தபொழுது தமிழ் முதுகலை மாணவர்களும், தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாத வெளிநாட்டு மாணவர்களும் செய்த சந்திப்பிழைகள், மற்றும் சந்திவிதிகள் குறித்து வெளிவந்துள்ள ஆய்வுகள் ஆகியவை துணைமைச் சான்றாகின்றன.

பொதுவாகத் தமிழ் இலக்கணம் கற்பிப்பதில் உள்ள குறையாக - சிக்கலாக - எல்லோரும் கூறுவது, வகுப்பில் கற்பிக்கும் தமிழ் இலக்கண விதிகள் இன்றைய வழக்கில் உள்ள தமிழுக்குப் பொருந்துவதாய் இல்லை என்பதும், தொல்காப்பியர் ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் தம் காலத்தமிழின் அமைப்பை விளக்கக் கூறிய விதிகளையே இன்றும் கூறிக்கொண்டிருக்கிறோம் என்பதும் ஆகும். இக்கூற்று, சந்திவிதி களைக் கற்பிப்பதற்கும் பொருந்தும்.

அவை, இவை என்னும் பலவின்பால் சுட்டுப் பெயர்கள் வேற்றுமை உருபை ஏற்கும்போது வற்றுச் சாரியை பெற்றே வேற்றுமை உருபோடு புணர்தல் வேண்டும் என்பது தொல்காப்பியர் கூறும் விதி.

> சுட்டுமுத லாகிய ஐயென் இறுதி
> வற்றொடு சிவணி நிற்றலும் உரித்தே (178)

என்ற நூற்பா 'இவை', 'அவை' என்னும் சுட்டுமுதல் ஐகார இறுதியில் பலவின்பால் சுட்டுப் பெயர்கள் வற்றுச் சாரியை பெற்றுப் பின்னரே வேற்றுமையுருபை ஏற்கும் என்று கூறுகிறது. இந்நூற்பாவுக்குஉரையாசிரியர்கள், அவையற்றை, இவையற்றை அவற்றை, இவற்றை என்பனவற்றைச் சான்றாகக் காட்டுவர். ஆனால் இன்றைய தமிழில் இவ்விதி பின்பற்றப்படுவதில்லை. அவை, இவை என்னும் பலவின்பால் சுட்டுப் பெயர்களோடு — **கள்** என்னும் பன்மை உருபை இணைத்துப் பின்னர் வேற்றுமை உருபை இணைக்கும் வழக்கு இன்றைய தமிழில் பரவலாகக் காணப்படுகின்றது.

(எடு) அவைகளை
இவைகளுக்கு

தனிச் சுட்டுப்பெயராகமட்டும் வழங்கும்போது — கள் என்னும் பன்மை உருபைச் சேர்ப்பது குறைவு. ஆனால் வேற்றுமை உருபு சேர்க்கும்போது — கள் உருபு சேர்ப்பது பெருவழக்கில் உள்ளது (சண்முகம், செ.வை. 1993 : 36).

அஃறிணை ஒருமைச் சுட்டுப் பெயராகிய அது, இது என்பவை வேற்றுமை உருபு ஏற்கும்போது அன் சாரியை பெற்றுப் பின்னரே வேற்றுமை உருபு ஏற்கும் என்பது தொல்காப்பியர் கூறும் விதி.

சுட்டுமுதல் உகரம் அன்னொடு சிவணி
ஒட்டிய மெய்யொழித்து உகரம் கெடுமே (177)

என்ற நூற்பா இது, அது என்னும் சுட்டு முதல் உகர ஈற்றுச் சுட்டுப் பெயர்கள் வேற்றுமை உருபொடு இணைவதற்கு முன் அன் சாரியை ஏற்றுப் பின்னரே வேற்றுமை ஏற்கும்; அப்போது அது, இது என்ற சுட்டுப் பெயர்களில் உள்ள உகர இறுதி கெடும் என்கிறது, இதற்கு உரையாசிரியர்கள் அதனை, இதனை, அதனொடு, இதனொடு என்பவற்றைச் சான்றாகக் காட்டுவர். இது பழந்தமிழ் வழக்கு. ஆனால் இவ்விதியும் இன்றைய தமிழில் பின்பற்றப்படுவதில்லை. இன்றைய தமிழில் சுட்டுப் பெயர்கள் நேரடியாக வேற்றுமை உருபை ஏற்கின்றன.

(எடு) அதை, இதை

இவ்வாறு பழந்தமிழ் வழக்கிலிருந்த சந்திவிதிகள் பல இன்றைய தமிழில் பயன்பாட்டில் இல்லை (பரமசிவம். கு. 1983 : 93). லகர ளகரங்களை அடுத்து மெல்லின எழுத்துக்கள் வருமானால் அவை முறையே னகர ணகரமாய்த் திரிவது பழந்தமிழில் காணப்பட்ட ஒரு மாற்றமாகும். இதனைப் பின் வரும் சான்றுகளால் உணரலாம்.

கல் + நார் > கன்னார்
முள் + முடி > முண்முடி

இத்தகைய மாற்றங்களை விளக்குவதற்காகத் தொல்காப்பியத்தில் புள்ளி மயங்கியலில் சில நூற்பாக்கள் இடம் பெறுகின்றன.

ல கார இறுதி னகார இயற்றே (367)
மெய்யெழுத் தியையின் னகார மாகும் (368)
ள கார இறுதி ணகார இயற்றே (397)
மெல்லெழுத் தியையின் ணகார மாகும் (398)

இந்நூற்பாக்கள் கூறும் செய்தி இன்றைய தமிழுக்குப் பயன்படுவதாய் இல்லை. இன்றையதமிழில் யாரும் இவ்வாறு பயன்படுத்தவில்லை. இது போன்று தொல்காப்பியத்தில் உள்ள பல சந்தி விதிகள் இன்றைய தமிழில் பயன்பாட்டில் இல்லை. இத்தகைய விதிகளை மாணவர்க்குக் கற்பித்தல் தேவைதானா? தேவை எனின் அதன் நோக்கம் என்ன? தேவை இல்லை எனில் ஏன் கற்பிக்கவேண்டும்?என்ற வினாக்கள் தோன்றுவது இயல்பே. இத்தகைய வினாக்கள்தான் தமிழ் இலக்கணம் கற்பித்தலின் நோக்கம் யாது என்று வரையறுக்க உதவுகின்றன. இலக்கணப் பாடம் கற்பிப்பதன் நோக்கம் என்ன? தமிழ் மொழியைப் பிழையின்றிப் பேசவும், எழுதவும், பயன்படுத்தவும் அறிந்து கொள்ளச் செய்வதற்கே இலக்கணம் கற்பிக்கிறோம் என்பதில் இருவேறு கருத்துக்கு இடமில்லை. அங்ஙனமாயின் வழக்கில் இல்லாத விதிகளை ஏன் கற்பிக்கிறோம்? இங்குக் கற்கும் மாணவர்களின் நிலை கருத்திற் கொள்ளப்பட வேண்டியுள்ளது முதுகலையில் தமிழ் படிக்கும் மாணவர்களுக்கு இத்தகைய விதிகள் கற்பிக்கப்படுதல் தேவைதான். ஏனெனில் இவர்கள் இன்றைய தமிழ் மொழியின் அமைப்பைமட்டுமின்றிப் பழந்தமிழின் அமைப்பையும் தெரிந்துகொள்ளுதல் வேண்டும். பழந்தமிழ் இலக்கியங்களைத் தாமே படித்து மகிழும் திறன் பெற்றுத் திகழவேண்டும் என்று கருதுவதால் பழந்தமிழ் மொழியின் அமைப்பைத் தெரிந்து கொள்ள இத்தகைய விதிகளையும் கற்க வேண்டும். இத்தகைய வழக்கிழந்தனவாகக் கருதப்படும் விதிகளைக் கற்பிக்கும் போது அவை தற்காலத்தமிழில் வழக்கிழந்தமையையும் சேர்த்துக் கூறி விளக்குதல் வேண்டும். பழைய இலக்கியங்களில் இத்தகைய விதிகள் செயல்பட்டுள்ளன என்று கூறிச் சான்றுகள் கொடுக்கப்படுதல் வேண்டும். அப்போதுதான் மாணவர்கள் இன்றைய தமிழுக்குரிய விதிகள் எவை என்றும், இன்றைய தமிழில் பயன்பாட்டில்

இல்லாத பழந்தமிழுக்கு மட்டும் உரிய விதிகள் எவை என்றும் பகுத்தறிந்து கொள்ள இயலும்.

தொல்காப்பியத்தில் சந்திவிதிகளைக் கூறியுள்ள முறை கற்பவர்க்கும் கற்பிப்பவர்க்கும் சற்றுக்குழப்பத்தை விளைவிக்கும் வகையில் உள்ளது. சான்றாகச் சிலவற்றைக் கூறலாம். உயிர் மயங்கியலில் ஒவ்வொரு உயிர் ஈறாக எடுத்துக்கொண்டு விளக்க முயல்கிறார் தொல்காப்பியர். இது எளிய முறையில் புரியவைக்க வேண்டும் என்ற எண்ணத்தோடு விளக்க முயன்ற முயற்சியே எனினும், வைப்பு முறையிலும், கூறிய முறையில் கையாண்ட உத்தியாலும் குழப்பமே விளைகிறது. உயிர்மயங்கியல் முழுமை-யும் மாட்டேற்று உத்திமுறை கையாளப்படுகிறது. பின் வரும் நூற்பாக்கள் இதற்குச் சான்றாகின்றன.

| | | | | |
|---|---|---|---|---|
| 'ஆகார | இறுதி | அகர | இயற்றே' | (222) |
| 'ஈகார | இறுதி | ஆகார | இயற்றே' | (250) |
| 'உகர | இறுதி | அகர | இயற்றே' | (255) |
| 'ஊகார | இறுதி | ஆகார | இயற்றே' | (265) |
| 'ஏகார | இறுதி | ஊகார | இயற்றே' | (275) |
| 'ஓகார | இறுதி | ஏகார | இயற்றே' | (290) |

என நூற்பாக்கள் அமைந்துள்ள மாட்டேற்று முறை ஒவ்-வொரு முறையும் அகர ஈற்றுக்குக் கூறியது என்ன என்பதைக் கவனிக்கச் செய்கிறது. இவற்றைக் கற்பிக்கும்போது எல்லா-வற்றையும் ஒருசேரத் தொகுத்துக் கற்பத்தல் வேண்டும். இல்-லையேல் மாணவர்க்குக் குழப்பமே எஞ்சும்.

இதுபோன்றே ஒவ்வோர் உயிர் ஈற்றுக்கும் அல்வழிப்-புணர்ச்சிக்குரிய விதியைக்கூறிப்பின்னர்-சில நூற்பாக்கள் இடை-வெளிக்குப்பின்னர் 'வேற்றுமைக் கண்ணும் அதனோரற்றே' என்ற நூற்பாவைக் கூறுவார். இவ்விடங்களில் எல்லாம் அல்-வழிப்புணர்ச்சிக்குக் கூறிய விதி என்ன என்பதை மாட்டேற்-றாகக் கருத்திற்கொள்ள வேண்டியுள்ளது. 'வேற்றுமைக் கண்ணும் அதனோரற்றே' என்ற நூற்பா உயிர்மயங்கியலில் ஏழு இடங்களில் இடம் பெற்றுள்ளது. ஏழு இடத்திலும் ஒரே பொருளைத்தான் குறிக்கிறது. எனினும் ஏழு உயிர் எழுத்துக்-

களின் ஈற்றை அடிப்படையாகக் கொண்டு தனித்தனியாக விளக்குவதால் இந்தநிலை. இவை தவிர இகர ஈறு ஐகார ஈறு இவற்றிற்குரிய அல்வழிப்புணர்ச்சி பற்றிய செய்தி உயிர் மயங்கியலில் இடம் பெறவில்லை. இதற்கான காரணத்தை இளம்பூரணரின், ''இகர வீற்றுப்பெயர்க்கு அல்வழி முடிபு தொகை மரபினுட் கூறிநின்றமையின்'' என்ற விளக்கத்தாற் பெற முடிகிறது. இவற்றையெல்லாம் மனதிற்கொண்டே உயிர் மயங்கியலில் உள்ள விதிகளைக் கற்பித்தல் வேண்டும்.

ஒரே மாதிரியான சாரியைகளைப் பெற்றுப் புணரும் சொற்களான வளி, பனி, மழை, வெயில், இருள் ஆகியவை இவற்றின் ஈற்றின் அடிப்படையில் முதல் மூன்றும் உயிர்மயங்கியலிலும், இறுதி இரண்டும் புள்ளி மயங்கியலிலும் இடம் பெறுகின்றன. இவற்றை ஈற்றின் அடிப்படையில் வேறு வேறு இடங்களில் விளக்கும் தொல்காப்பியர் இவற்றிற்கிடையே உள்ள பொதுத்தன்மை காரணமாக விதிகளை மாட்டேற்று உத்தியுடன் கூறுகின்றமையைப் பின்வரும் நூற்பாக்கள் விளக்கும்.

பனியென வருஉம் கால வேற்றுமைக்கு
அத்தும் இன்னும் சாரியை ஆகும் (242)

வளியென வருஉம் பூதக் கிளவியும்
அவ்வியல் நிலையல் செவ்விது என்ப (243)

மழையென் கிளவி வளியியல் நிலையும் (288)

வெயிலென் கிளவி மழையியல் நிலையும் (378)

இருளென் கிளவி வெயிலியல் நிலையும் (403)

மேற்கண்ட நூற்பாக்களில் முதல் நூற்பாவில் மட்டுமே முழுமையான விதிவிளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. ஏனையவற்றில் எல்லாம் முன் கூறிய நூற்பாவை அடியொற்றியே முழுவிதியைப் புரிந்து கொள்ளும் வகையில் மாட்டேற்று உத்தி பின்பற்றப்பட்டுள்ளது. இதுபோன்றே மரப்பெயர்கள் குறித்த நூற்பாக்களும், திங்கள் நாட்பெயர் குறித்த நூற்பாக்களும், கிளைப்பெயர் குறித்த நூற்பாக்களும், தொழிற்பெயர் குறித்த

நூற்பாக்களும் அமைந்துள்ளன. இதனைப்பின்வரும் நூற்பாக்-கள் விளக்கும்.

'எகின்மர மாயின் ஆண்மர இயற்றே' (337)
'ஆண்மரக் கிளவி அரைமர இயற்றே' (305)
'சே என் மரப்பெயர் ஒடுமர இயற்றே' (279)
'ஒடு மரக்கிளவி யுதிமர இயற்றே' (263)
'இல்ல மரப்பெயர் விசைமர வியற்றே' (314)
'திங்களும் நாளும் முந்துகிளந் தன்ன' (287)
'தொழிற்பெய ரெல்லாந் தொழிற்பெய ரியல' (307)
(328), (377), (402)
'கிளைப்பெய ரெல்லாங் கிளைப்பெய ரியல' (339)

இவ்விடங்களில் எல்லாம் கற்பிக்கும் ஆசிரியர், மாணவர்-களுக்குப் புணர்ச்சிவிதிகள் பற்றிய ஓர் ஒட்டு மொத்தமான பார்வையோடு விளக்குதல் இன்றியமையாததாகும். இல்லேயேல் மாணவர்களுக்குக் குழப்பமே எஞ்சும். தொல்காப்பியத்தில் கூறப்-பட்டுள்ள புணர்ச்சி விதிகளை அவையுணர்த்தும் பொருள் அடிப் படையில் தொகுத்தும் பகுத்தும் ஒட்டு மொத்தமாகப் பார்க்கும் பார்வையை மாணவர்களுக்கும் உருவாக்குதல் வேண்டும்.

தொல்காப்பியர் சில விதிகளைக் கூறும்போது தம் உளக் கருத்து சரியாக வெளிப்படாத வகையில் கூறியுள்ளார். அதனால் சரியான புரிதல் இல்லாமல் சில தவறுகள் நிகழ்கின்றன. இத்-தகைய தவறுகள் தமிழைத் தாய் மொழியாகக் கொண்டவர்-களிடம் ஏற்படுவதில்லை. வெளிநாட்டு மாணவர்களின் பயிற்சி ஏடுகளில் காணப்படுகின்றன. சாரியை பெற்றுப் புணரும் புணர்ச்சிகளைப் பற்றிப் பேசுமிடமாகிய உருபியலில் பின் வரும் நூற்பா இடம் பெறுகிறது.

'மஃகான் புள்ளிமுன் அத்தே சாரியை' (186)

இந்த நூற்பாவின்படி மகர ஈற்றுப் பெயர்ச் சொல் வேற்-றுமை உருபை ஏற்கவேண்டுமாயின் முதலில் அத்துச் சாரியை பெற்றுப் பின்னர் வேற்றுமை உருபை ஏற்கும் என்பது கருத்து. இந்த விதியை வெளிநாட்டு மாணவர்க்கு நடத்திய இக்கட்டு-ரையாசிரியர் தொல்காப்பியரின் உள்ளக்கிடக்கையைச் சரியாகப்

புரிந்து கொள்ளாமல் நூற்பாவில் உள்ள சொற்களை அப்படியே பொருள் கொண்டு - மகர இறுதிச் சொற்கள் அத்துச் சாரியை பெற்று வேற்றுமை உருபேற்கும் என்று அமெரிக்க மாணவர்களுக்குச் சொல்லித்தந்து, அம் மாணவர்களின் பயிற்சி ஏட்டில்.

* என் ஐஸ்கிரீத்தில் ஈ விழுந்தது
* அஸ்ஸாத்தில் கலவரம் நடக்கிறது
* சிக்கித்தில் வெள்ளம்

என்று எழுதிய தவறுகளைத் திருத்தும் போதுதான் இந்த விதி எவ்வாறு தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டுள்ளது என்பது தெளிவானது. இதனைக் கட்டுரையாளர் தன் நண்பர்களோடு கலந்துரையாடிய போது தொல்காப்பியரின் விதி தமிழ்ச் சொற்களுக்குத்தான் உரியதே தவிர வேற்று மொழிச் சொற்களுக்குப் பொருந்தாது என்றனர். ஆனால் 'பிளாட் பாரத்தில் நடந்து வந்தேன்' என்ற தொடரிலும், ராஜத்தைப் பார் என்ற தொடரிலும், 'கமலத்தைக் கூப்பிடு' என்ற தொடரிலும் உள்ள பிறமொழிச் சொற்களுக்கு இவ்விதி பொருந்திவருகிறதே என்ற ஐயம் எழுப்பப்பட்டது. அப்போதுதான் பிறமொழிச் சொல் என்பதை விட — அம் ஈறு உடைய எந்த மொழிச் சொல்லுக்கும் இவ்விதி பொருந்தும் என்பது தெளிவாயிற்று. அதன்பின்னர் இவ்விதியைச் சற்று மாற்றி — அம் என்று முடியும் பெயர்ச் சொற்கள் வேற்றுமை யுருபு ஏற்கும் போது அத்துச் சாரியை ஏற்கும் என்று விளக்கவேண்டியிருந்தது. இதே நிலையைத்தான்

மகர இறுதி வேற்றுமை யாயின்
துவரக் கெட்டு வல்லெழுத்து மிகுமே (311)

என்ற நூற்பாவுக்குப் பொருள் கொள்ளும்போது கருத்திற்கொள்ள வேண்டியுள்ளது. இங்கும் மகர இறுதி என்பது — அம் ஈறு என்ற பொருளிலேயே பயன்படுத்தப்பட்டுள்ளது.

பழந்தமிழிலும் சரி இன்றைய தமிழிலும் சரி — அம் ஈறு பெற்ற சொற்களே இந்த விதிப்படி புணர்கின்றன. மகரத்திற்குமுன் அகரம் தவிர்த்த ஏனைய ஒலிகள் வருமாயின் இவ்விதிபொருந்தாது. இங்குத் தமிழ்ச் சொல் வேற்றுமொழிச் சொல் என்றபாகுபாடில்லை. இதனைச் சரியாகப்புரிந்து உணர்த்தாதபோது

மாணவர்கள் தவறுசெய்ய ஏதுவாகின்றது. இத்தகைய நூற்பாக்களில் தொல்காப்பியரின் கருத்தைச் சரியாகப் புரிந்து கொள்வது இன்றியமையாத் தேவையாகும். நூற்பாவின்கண் அமைந்துள்ள சொற்களின் அடிப்படையிலான பொருள்மட்டும் போதாது என்பதற்கு இஃது ஒரு சான்று ஆகும்.

வினைத்திரிபுகளின் அடிப்படையில் புணர்ச்சியில்—குறிப்பாக அகப்புணர்ச்சியில் (interal sandhi) — ஏற்படும் மாற்றங்கள் குறித்த செய்திகள் தொல்காப்பியத்தில் தெளிவாக இல்லை. லகர இறுதியின் முன் வல்லினம் வருமாயின் லகரம் நகரமாய்த்திரியும் என்கிறது தொல்காப்பியம் கூறும் சந்திவிதி (367). இதுபோன்றே ளகர இறுதியின் முன் வல்லொலிகள் வரின் ளகரம் டகரமாய்த்திரியும் என்கிறது இன்னொரு விதி (397).

கல் என்னும் வினைச்சொல் வியங்கோள் விகுதி ஏற்கும் போது கற்க என்றும்: செல் என்னும் வினைச்சொல் வியங்கோள் விகுதி ஏற்கும்போது செல்க என்றும் உருவாகின்றன. இதுபோன்றே கேள் என்னும் வினைச்சொல் வியங்கோள் விகுதி ஏற்கும்போது கேட்க என்றும், கொள் என்னும் வினைச்சொல் வியங்கோள் விகுதி ஏற்கும்போது கொள்க என்றும் உருவாகின்றன.

இங்கு முதலில் உள்ள நிலைமொழிகள் இரண்டும் லகர ஈற்று மொழிகளாக அமைந்திருக்க வியங்கோள்விகுதி ஏற்கும் போது எப்படி இருவேறு வடிவங்கள் உருவாகின்றன? இரண்டாவது உள்ள நிலைமொழிகள் இரண்டும் ளகர ஈற்று மொழிகளாக அமைந்திருக்க வியங்கோள்விகுதி ஏற்கும்போது எப்படி இருவேறு வடிவங்கள் உருவாகின்றன? அதாவது ஒன்று இயல்பாயும் மற்றொன்று திரிந்தும் புணர்ந்தமை எங்ஙனம்? இதற்குரிய காரணம் எதுவும் தொல்காப்பியத்தில் தெளிவாக உணர்த்தப்படவில்லை. தாய்மொழியாளர்களுக்கு இதுபற்றிய ஐயம் தோன்றுவதில்லை. ஆனால் வெளிநாட்டு மாணவர்களுக்கு இவ்விடங்களில் எல்லாம் விளக்கம் தேவைப்படுகிறது. வியங்கோள் விகுதிகள் என்று தொல்காப்பியர் வினையியலில் எதனையும் குறிப்பிட்டுக் கூறவில்லை. ஆனால் நன்னூலில் —க, —ய, —ர் என மூன்று உருபுகள் வியங்கோள் விகுதிகள் என்று குறிக்கப்-

படுகின்றன. இம்மூன்றிலும் -க என்ற வியங்கோள் விகுதியே செல், கல், கேள், கொள் ஆகிய வினைச்சொற்களுடன் இணைகின்றது என்று கொண்டால்மேலே குறித்தவேறுபாட்டை விளக்க இயலாது. வியங்கோள் விகுதியின் மாற்றுருபுகள் பற்றிய செய்தி ஏதும் இல்லை. இங்கு வியங்கோள் விகுதியான – க என்ற வடிவத்திற்கு - க, – க்க என இரண்டு மாற்றுருபுகள் உள்ளன என்று விளக்கி அவை பின் வருமாறு வழங்குவதாக மொழியியலார் விளக்குவர்.

செல் + க > செல்க
கல் + க்க > கற்க
கொள் + க > கொள்க
கேள் + க்க > கேட்க

இத்தகைய விளக்கங்கள் தொல்காப்பியத்தில் இடம் பெற வில்லை எனினும், மாற்றுருபுகள் பற்றிய சிந்தனை தொல்காப்பியத்தில் இலைமறை காயாகக் காணப்படுகின்றன. இம்மாற்றுருபுகள் பற்றிய சிந்தனையும் சந்திவிதிகளைப் புரிந்து கொள்ளத் துணைபுரிகின்றன. மாற்றுருபு என்ற கலைச்சொல் தொல்காப்பியத்தில் பயன்படுத்தப்படவில்லை. எனினும் புணரியல் விதிகள் பலவற்றுள் அச்சிந்தனை காணப்படுகின்றது. ஏழ் என்னும் எண்ணுப் பெயரின் மாற்றுவடிவம் எழு என்றும் (390); பத்து என்னும் எண்ணுப் பெயரின் மாற்றுவடிவம் பஃது (391) என்றும் தொல்காப்பியத்தில் செய்திகள் உள்ளன. இவ்வாறு எண்ணுப் பெயர்கள் ஒவ்வொன்றுக்கும் மாற்றுவடிவங்கள் உள்ளன என்பதைக் குற்றியலுகரப் புணரியலின்கண் அமைந்துள்ள பல நூற்பாக்கள் விளக்குகின்றன. சில நூற்பாக்களைச் சான்றாகக் கூறலாம்.

எட்டன் ஒற்றே ணகாரம் ஆகும் (444)

என்ற நூற்பா எட்டு என்னும் எண்ணுப் பெயர் பத்து என்ற சொல்லுக்கு முன் எண் - என்ற மாற்று வடிவம் ஏற்கும் என்கிறது.

ஐந்தன் ஒற்றே மகாரம் ஆகும் (443)

என்ற நூற்பா பத்து என்னும் எண்ணுப் பெயர் வரு-மொழியாகும்போது ஐந்து என்னும் எண்ணுப் பெயர் ஐம்-என்ற மாற்று வடிவத்தை ஏற்கும் என்கிறது. இவ்வாறு பல எண்ணுப் பெயர்களுக்குரிய மாற்றுருபுகள் பற்றிய செய்தி தொல்காப்பியத்-தில் இடம் பெற்றுள்ளன. தொல்காப்பியத்தில் உள்ள சந்திவிதி-களைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் மாணவர்களுக்கு மாற்றுருபுகள் பற்றிய சிந்தனையையும் இணைத்துக் கற்பித்தல் வேண்டும். இச்சிந்தனை புதியதன்று. தொடக்கப்பள்ளித் தமிழ்ப் பாட நூல்களிலேயே இடம் பெற்றுள்ளன. கீழ்வகுப்புக்களில் கொடுக்கும் பிரித்து எழுதுக, சேர்த்து எழுதுக பயிற்சிகளில் சந்திவிதி களையும், மாற்றுருபுகள் பற்றிய கருத்தையும் சேர்த்தே கொடுத்துள்ளனர். தொடக்கப் பள்ளிப் பாட நூல்களில் உள்ள மொழிப் பயிற்சிப் பகுதியில் பிரித்து அறிக என்ற பகுதியில்,

இளமை + பருவம் > இளம்பருவம்
செம்மை + வாழை > செவ்வாழை
பழமை + மொழி > பழமொழி
சிறுமை + ஊர் > சிற்றூர்
நன்மை + பழக்கம் > நற்பழக்கம்
நுன்மை + கிருமி > நுண்கிருமி

என்று பல சொற்கள் பிரித்து எழுதப்பட்டுள்ளன. இதன்மூலம்

இளமை என்ற வடிவமும் இளம் - என்ற வடிவமும்,
செம்மை என்ற வடிவமும் செவ் - என்ற வடிவமும்,
பழமை என்ற வடிவமும் பழ - என்ற வடிவமும்,
சிறுமை என்ற வடிவமும் சிற் - என்ற வடிவமும்,
நன்மை என்ற வடிவமும் நற் - என்ற வடிவமும்,
நுண்மை என்ற வடிவமும் நுண் - என்ற வடிவமும்,

மாற்றுருபுகள் என்பது, மாற்றுருபு என்ற கலைச் சொல்-லைப் பயன்படுத்தாமலே அந்தக் கருத்தாக்கம் (Concept), பள்ளி மாணவர்களுடைய மனதில் உணர்த்தப்படுகிறது. பள்ளி மாணவர்களுக்கே மாற்றுருபு பற்றிய சிந்தனை சந்திவிதிகளுடன் இணைத்துக் கற்பிக்கப்படுகிறது எனில் முதுகலை நிலையில் மாணவர்களுக்கு உறுதியாக மாற்றுருபு குறித்த சிந்தனையை-யும் இணைத்தே சந்திவிதிகள் கற்பித்தல் வேண்டும். முதுகலை

நிலையில் மொழியியலறிவும் பெற்றிருப்பதால் அவர்கள் இது-குறித்து மேலும் தெளிவு பெற முடியும்.

தொல்காப்பியர் கூறியுள்ள சந்திவிதிகள் ஒலிமாற்றங்கள் பற்றியவை இவை ஒலியன்களோடு மட்டும் தொடர்புடையவை என்ற எண்ணம் தவறு என்பது ஏற்கனவே பல மொழியியல் அறிஞர்களால் நிறுவப்பட்டுள்ளன. அவற்றை மனத்திற்-கொண்டு சந்திவிதிகள் எந்த எந்த அடிப்படையில் உருவாகி-யுள்ளன என்பதை மாணவர்களுக்குத் தெளிவாகக் கற்பித்தல் வேண்டும். தொல்காப்பியத்தில் காணப்படும் சந்தி விதிகள் நான்கு அடிப்படையில் அமைந்துள்ளன. முதல் வகை வெறும் ஒலியனியல் அடிப்படையிலமைந்த விதிகள். இதற்குச் சான்றாக

ல ன வென வரூஉம் புள்ளி முன்னர்
த ந எனவரிற் றன வா கும்மே (150)

என்ற நூற்பாவைக் கூறலாம்.

இரண்டாவது வகை உருபனடிப்படையில் (சொல்லடிப்படை-யில்) அமைந்த விதிகளாகும். இவற்றிற்குச் சான்றாக,

நிலாவென் கிளவி அத்தொடு சிவணும் (229)

என்ற நூற்பாவைக் கூறலாம்.

மூன்றாவது வகையான விதிகள் அசையமைப்பை அடிப்படை-யாகக் கொண்டு அமைந்தவை. இவற்றிற்கு,

நெடியதன் முன்னர் ஒற்றுமெய் கெடுதலும்
குறியதன் முன்னர்த் தன்னுரு பிரட்டலும்
அறியத் தோன்றிய நெறியிய லென்ப (161)

என்ற நூற்பாவைச் சான்றாகக் கூறலாம்.

நான்காவது வகையான விதிகள் தொடரியல் அமைப்பில் — நிலைமொழி வருமொழி இவற்றிற்கு இடையிலான தொடரியல் உறவு அடிப்படையில் — அமைந்துள்ளன. இவற்றிகுச் சான்றாக,

அன்ன என்னும் உவமக்கிளவியும்
அண்மை சுட்டிய விளிநிலைக் கிளவியும்

செய்ம்மன என்னும் தொழிலிறு சொல்லும்
ஏவல் கண்ணிய வியங்கோட் கிளவியும்
செய்த என்னும் பெயரெஞ்சு கிளவியும்
செய்யிய என்னும் வினையெஞ்சு கிளவியும்
அம்ம என்னும் உரைப்பொருட் கிளவியும்
பலவற் றிறுதிப் பெயர்க்கொடை உளப்பட
அன்றி யனைத்தும் இயல்பென மொழிய

என்ற நூற்பாவைக் கூறலாம். இவ்வாறு தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ள புணர்ச்சி விதிகள் பற்றிய செய்திகள் நான்கு அடிப்படைகளில் அமைந்துள்ளன என்பதை மாணவர் உணரும் வகையில் உணர்த்த வேண்டும். இவ்வடிப்படைகளை உணர்ந்தோரே சந்திப் பிழையின்றி எழுதவியலும். சந்திவிதிகளை அனைத்தையும் இவ்வடிப்படையில் பகுத்தும் தொகுத்தும் விளக்குதல் வேண்டும். விளக்கும்போது இன்றைய தமிழில் உள்ள சான்றுகள் தருதல் வேண்டும்.

ஒற்று மிகுமிடம் ஒற்று மிகா இடம் குறித்த ஐயம் மாணவர்களிடம் பெருங்குழப்பத்தை விளைவிக்கும் இடமாக உள்ளது. அவற்றை வெறும் பட்டியலாகக் கொடுக்காமல் ஒவ்வொரு சூழலையும் சில விதிகளாகத் தொகுத்துத் தகுந்த காட்டுகளுடன் விளக்கினால் மாணவர்கள் புரிந்து கொள்வர். இங்குத் தொல்காப்பியர் ஒற்றுமிகும் இடம், மிகா இடம் குறித்த செய்திகளைத் தனித்தனியீறுகளின் அடிப்படையில் பரவலாகக் கூறிச் சென்றுள்ளமை கற்பிக்கும் ஆசிரியருக்கும் கற்கும் மாணவர்க்கும் சிக்கலாக அமைகிறது. இப்பகுதியை நடத்துவதற்கு முன்னால் ஆசிரியர் பொது விதியையும், அதற்கான சான்றுகளையும், விதி விலக்குகளையும் அதற்குரிய நடைமுறைச் சான்றுகளையும் தொகுத்து மாணவர் உளம் ஏற்குமாறு கொடுப்பாரேயாயின் இப்பகுதியை எளிமையாகக் கற்பிக்க முடியும். சான்றாகச் சிலவற்றைக் காணலாம்.

இலக்கண நூலார் விரிவாகக் கூறியுள்ள விதிகளில் பல ஒரு புணர்ச்சிக்குப் பொருத்தமாய் அமைவதும் மாணவர்களின் குழப்பத்துக்குக் காரணமாகின்றது. அவற்றை எல்லாம் தொகுத்து எளிமைப்படுத்திக் கொள்ளலாம்.

1. நான்காம் வேற்றுமைத் தொடரில் வல்லெழுத்து மிகும் — என்பது ஒரு விதி.
2. செய்து வாய்பாட்டு வினை யெச்சங்களில் தகரம் இரட்டித்து வரும் வினையெச்சங்களை அடுத்து வல்லெழுத்து மிகும் — என்பது ஒரு விதி.
3. எட்டு, பத்து ஆகிய சொற்களுக்குப்பின் வரும் வல்லொலி மிகும் — என்பது ஒரு விதி.

இங்குக் கூறப்பட்டுள்ள மூன்று விதிகளையும் இணைத்து. இவற்றின் கருத்துக்களை உள்ளடக்கி - 'வன்றொடர்க் குற்றியலுகரத்தை அடுத்து வல்லெழுத்து மிகும்' என்று ஒரு விதியாகத் தொகுத்துத் தரலாம்.

1. இரண்டாம் வேற்றுமையை அடுத்து வலி மிகும் — என்பது ஒரு விதி.
2. ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சத்தை அடுத்து வலி மிகும் — என்பது ஒரு விதி
3. ஓரெழுத்து ஒரு மொழியைத் தொடர்ந்து வலி மிகும் — என்பது ஒரு விதி.

இம் மூன்று விதிகளையும் உள்ளடக்கி 'நிலைமொழியில் நெடிலுயிர் ஈறாகும்போது வலி மிகும்' என ஒரு விதியாக்கலாம். இதுபோன்ற முயற்சிகள் கற்பிக்கும் ஆசிரியரால் மேற்கொள்ளப்பட வேண்டும். இத்தகைய முயற்சிகளே சந்திவிதிகளை எளிமையாகக் கற்பிக்கத்துணைபுரியும்.

இலக்கண நூல்கள் கூறும் விதிகள் ஒரு புறம் இருக்க நடைமுறையில் உள்ள சில தொடர்கள் மாணவர்களைக் குழப்பு கின்றன. அத்தகைய சில தொடர்களை மாணவர் வகுப்பில் ஆசிரியரிடம் கூறுகின்றனர். அவ்வாறு மாணவர்கள் கூறிய இன்றைய தமிழில் காணப்பெறும் சந்திகளில் உள்ள ஒருமையின்மையைக் கீழே காணலாம்.

அ) தொலை + பேசி > தொலைபேசி
தொலை + காட்சி > தொலைக்காட்சி

ஆ) பெரிய + பையன் > பெரியபையன்
சின்ன + பையன் > சின்னப்பையன்

இ) எதிர் + காலம் > எதிர் காலம்
எதிர் + கட்சி > எதிர்க்கட்சி

ஈ) கொலை + காரன் > கொலைகாரன்
கொள்ளை + காரன் > கொள்ளைக்காரன்

இங்குள்ள எடுத்துக்காட்டுக்களில் முதலில் உள்ளனவற்றில் ஒற்று மிகாமலும் இரண்டாவது உள்ளனவற்றில் ஒற்று மிகுந்தும் காணப்படுகின்றது. இவ்வேறுபாட்டை ஏதேனும் பொது விதி கொண்டு விளக்கமுடியுமா? கொடுக்கப்பட்டுள்ள நான்கு இணைகளிலுமே ஒவ்வொரு இணையிலும் உள்ள நிலைமொழி ஈறுகளும், வருமொழி முதல் ஒலிகளும் ஒரே தன்மையன. எல்லா இணைகளிலும் உறவுநிலையிலும் இணைகள் ஒத்துள்ளன. இந்நிலையில் எந்த விதியால் இந்த வேறுபாட்டை விளக்குவது?

இவ்விணைகளில் நிலைமொழி வருமொழி இவற்றின் அசையமைப்பு (Syllabic Structure) இச் சந்தியில் முக்கிய இடம் பெறுகிறது எனத் தோன்றுகின்றது. அவ்வாறு சிந்திக்கும்போது கீழ் வருமாறு ஒரு விதியை உருவாக்கலாம்.

''நிலை மொழியிலோ வருமொழியிலோ முதல் அசையில் அசையீறு (code) இருக்குமானால் அச்சந்தியில் வருமொழி முதல் ஒற்று மிகும்.''

இவ்வாறு மாணவர்கள் சிந்தனையைத் தூண்டினால் மாணவர்கள் விருப்புடன் இலக்கணத்தைக் கற்பார்கள்.

## துணையாய் நின்றவை

சண்முகன், செ.வை. 1993, புதிய தமிழில் புணரியல் நெறிகள், புலமை, சென்னை.

பரசுராமன், த. 1991, பள்ளிப் பாடநூல்களில் வல்லெழுத்து மிகும் மிகா இடங்கள், தமிழ்ப் பாட நூல் ஆய்வு, தமிழகத் தமிழாசிரியர் கழகம், ஈரோடு.

பரமசிவம், கு. 1983, இக்காலத் தமிழ் மரபு, அன்னம், சிவ-கங்கை.

Kothandaraman, P. 1972, **Studies in Tamil Linguistics**, Tamil Nulagam, Madras.

# இலக்கணக் கல்வி

செ. வை. சண்முகம்

## 10

### 1. முன்னுரை

இருபத்தோராம் நூற்றாண்டு துவங்க இன்னும் நான்கு ஆண்டுகளே இருக்கின்றன. இந்த நிலையில் இந்த நூற்றாண்டின் சோதனைகளையும் சாதனைகளையும் மதிப்பிட்டு அறிந்து கொண்டால்தான் அடுத்த நூற்றாண்டில் காலடி எடுத்து வைக்கும்போது அதற்கான எதிர்காலத் திட்டத்தோடு தன்னை நிலை நிறுத்திக்கொண்டு மனிதன் செயல்படமுடியும். இந்த உண்மை எல்லாத்துறைக்கும் பொருந்தும்.

இங்குக் கல்வி, ஆய்வு என்ற இரண்டு கூறுகள் குறிப்பிடப்பட்டிருப்பது பொருள் உடையது. கல்வியும் ஆய்வும் பிரிக்க முடியாதபடி உறவு உடையது. ஒன்று மற்றொன்றைச் செல்வாக்குப்படுத்தவல்லது. ஆனாலும் கல்வியே அடிப்படையானது, பரந்தது, ஆய்வோ கல்வியைவிடக் குறுகியது; உயர் நிலையானது. பொதுவாகக் கல்வி அறிவுப் பரப்பலையும் ஆய்வு அறிவு வளர்ச்சியையும் குறிக்கும். கல்வியே ஆராய்ச்சிப் பொருளாகவும் அமையும். ஆராய்ச்சி வளர்ச்சி கல்விக்குப் புதுமை சேர்க்கும்.

எனவே கல்வி நிகழ்கால நோக்கு; ஆராய்ச்சி எதிர்கால நோக்கு என்றுகூடக் கூறலாம்.

இலக்கண ஆராய்ச்சிபற்றி முன் பகுதியில் (சண்முகம், இலக்கண ஆய்வு) உள்ளதால் இங்கு இலக்கணக் கல்விபற்றி மட்டுமே விளக்கப்படுகிறது.

## 2. கல்வி

கல்வியைக் கற்றல் (Education), படித்தல் (Reading) என்று இரண்டு வகைப்படுத்தலாம். முன்னது நிறுவனங்கள் மூலம் மாணவனாக இருந்து தன்னை அதிகாரபூர்வமாகத் தகுதிப் படுத்திக்கொள்வது ; பின்னது பொழுதுபோக்காகவும் சில சமூக நோக்காகவும் எல்லா நிலையிலும் மேற்கொள்ளப்படுவது. இலக்கியத்துக்கு இந்த இரண்டு நிலையும் உண்டு. ஆனால் இன்று இலக்கணத்துக்கு முதல் நிலையே காணப்படுகிறது. ஆராய்ச்சிக்காக ஒருசிலர் தனி நிலையில் படிப்பது வேறு விஷயம். இலக்கணக் கல்வி இன்று நிறுவன நிலையிலேயே நடைபெறு-கிறது. எனவே கல்வி நிறுவனங்கள் எப்படி இலக்கணக்கல்வியை அமைத்துக் கொண்டிருக்கின்றன என்று முதலில் பார்ப்போம்.

தமிழைப் பொருத்தவரையில் இலக்கணக் கல்வி என்பது மொழியின் கட்டமைப்பை விளக்கும் கல்வி (எழுத்து, சொல்) மட்டும் அல்ல இலக்கியத்தின் பொருளையும் (இது பழங்கால இலக்கியப் பொருள் அதாவது சங்க இலக்கிப் பொருளான அகம், புறம் மட்டுந்தான்), இலக்கிய வடிவையும் (யாப்பு), இலக்கிய அழகு (அணி), இலக்கிய வகை (பாட்டியல் நூல்) ஆகியவையும் உள்ளடக்கியது ஆனால் பரவலாக, எழுத்து, சொல், பொருள் ஆகியவைகளுக்கே பாடத்திட்டத்தில் முக்கியத் துவம் கொடுக்கப்படுகிறது. சொற்களஞ்சியத்தையும், சொற்-பொருளையும் மரபு வழியில் விளக்கும் நிகண்டுகள் மொழிய-மைப்பை விளக்கும் இலக்கணமாக இன்னும் பலரால் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை என்பதும் குறிப்பிடத்தகுந்தது.

## 3 நிறுவனங்களும் கல்வியும்

ஆரம்பக் கல்வி, உயர்நிலை/மேனிலைக் கல்வி, கல்லூரி/ பல்கலைக்கழகக் கல்வி என்று மூன்று நிலைகளில் இன்று நிறு-

வனக்கல்வி அமைந்துள்ளது. முதல் நிலையில் மூன்றாம் வகுப்பிலேயே இலக்கணக்கல்வி ஆரம்பம் ஆகி உயர்நிலைப்பள்ளி வரை தொடர்கிறது. கல்லூரி அளவில் முதல் பாடமாகத்தமிழ் படிப்பவர்களுக்கு இலக்கணம் கிடையாது. சிறப்புப்பாடமாகப் படிப்பவர்களுக்கே இலக்கணம் உண்டு. அதனால், கல்லூரி / பல்கலைக்கழகங்களில் இலக்கணக்கல்வி பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும்.

## 3.1. இளநிலை

பல்கலைக்கழக அளவில் இரண்டு பட்டப்படிப்பு - இளங்கலை, முதுகலை உண்டு. தமிழைப் பொருத்தவரையில் இளநிலையில் இரண்டு பட்டப் படிப்பு இருப்பது தமிழ் அறிஞர் சமூகத்தின் இரண்டு வித மொழி உணர்வின் பிரதிபலிப்பு. இளங்கலை (B.A), இளம் இலக்கியம் (B.Lit.) என்ற இரண்டு பட்டத்துக்கும் முன்கல்வித் தகுதி - மேனிலைப்பள்ளித்தேர்வு வெற்றி ஒன்றே. இரண்டுவிதப்பாடத் திட்டமும் அவைகளின் வரலாற்றுப் பின்னணியும் தமிழ் அறிஞர் சமூகத்தின் மாறுபட்ட மொழி உணர்வின் வெளிப்பாடாகக் கருதத் தகுந்தது. இளங்கலை படிப்புக்கு இரண்டாம் பிரிவு ஆங்கிலம்; முதல் பிரிவு தமிழ் எல்லா இளங்கலை மாணவருக்கும் உரியதே. மூன்றாம் பிரிவு தமிழே சிறப்புப் பாடம். இளம் இலக்கிய மாணவருக்கு எல்லாப் பாடமும் தமிழே; அவர்களுக்கே உரிய சிறப்புப் பாடங்கள் உண்மையில் இளம் இலக்கியப் பாடங்கள் அதற்கு முன்னிருந்த புலவர் பாடத் திட்டத்தை ஒட்டியவை. இங்கு இரண்டு செய்திகள் கவனிக்கத்தகுந்தவை: 1. ஆங்கிலம் - பிறமொழிக் கல்வி இல்லாதது. 2. புலவர் படிப்புக்கு - பட்டயப் (Diploma) படிப்புக்கு மாற்றானது. முதல் செய்தியை மொழித்தூய்மை போலக் கல்வித் தூய்மை என்று பொதுமைப்படுத்தலாம்.[1] இரண்டாவது செய்தி பள்ளிகளில் வேலை செய்த தமிழாசிரியர்களின் சமூக, அரசியல் செல்வாக்கைப் பிரதிபலிக்கிறது. இலக்கணப் பாடத்திட்டத்திலும் இரண்டுக்கும்வித்தியாசம் உண்டு. முன்னதில் இடைக்கால இலக்கணங்களான நன்னூல், யாப்பருங்கலக்காரிகை, நம்பியகப்பொருள் முதலியவைகளை மட்டும் படிக்க, பின்னதில் இடைக்கால இலக்கணங்களோடு தொல்காப்பியமும்

(பழைய உரையோடு) படிக்கிறார்கள். முதுகலையில் எல்லோ-ருக்கும் தொல்காப்பியம் உண்டு.

### 3.2. முதுநிலை

முதுகலைப்படிப்பில் எல்லா மொழிக் கல்வியும் பிற துறைக் கல்வியிலிருந்து முன்கல்வித் தகுதியில் மாறுபடுகிறது. மொழித் தொடர்பான முதுகலைக் கல்விக்குமட்டும் இளங்கலையில் அந்தப் பாடத்தைச் சிறப்புப் பாடமாக எடுத்திருக்கவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. பட்டப் படிப்பு படித்த எல்லோரும் முதல் பிரிவிலோ அல்லது இரண்டாம் பிரிவிலோ படித்த மொழியின் முதுகலைப் படிப்பில் சேரலாம்[1]. அதாவது இளங்-கலையில் மூன்றாம் பிரிவில் படித்த பாட அறிவு முதுகலைப் படிப்பைத் தொடரத் தேவை இல்லை. இது முதுகலையின் பாடத் திட்டத்தைப் பாதிக்கிறது. இதனால் மொழியியலிலும், இலக்கிய இயலிலும் ஏற்பட்ட முன்னேற்றங்கள் நம்முடைய பாடத்திட்டங்-களில் சரியாகச் சேர்க்கப்படவில்லை; சேர்க்கப்பட முடிவதில்லை. ஏனென்றால், பிற பாடங்களை இளங்கலை மூன்றாம் பிரிவில் படித்தவர்களுக்கு பழைய இலக்கண நூல்களின் அறிவுகிடை-யாது. எனவே அவர்களுக்கு வசதியாக இருக்கும்பொருட்டு, இலக்கணப் பாடம் அமைக்கப்படுகிறது. அறிவியல், தொழில்-நுட்பம் ஆகியவற்றில் உலகளாவிய முன்னேற்றத்தைப் போற்-றிப் பின்பற்றும் நாம் மொழிக் கல்வியில் மட்டும் பழமையைப் பாராட்டிக்கொண்டிருப்பதற்கு இதுவும் ஒரு காரணம். கல்வியி-யல் நோக்கில் மொழிக்கல்வி சரியாகப் படிநிலைப்படுத்தவில்லை (Gradation) என்ற குறை ஏற்பட்டுவிட்டது. மேலும் நிறுவனப்-படுத்தப்பட்ட கல்வியின் சிறப்பே படிநிலைப்படுத்தத்தான். அது இங்குப் புறக்கணிக்கப்பட்டுவிட்டது.

### 3.3. தொலைதூரக்கல்வி

பல்கலைக்கழகக் கல்வியில் கடந்த கால்நூற்றாண்டு அள-வில் ஏற்படுத்தப்பட்ட மாற்றம் தொலைதூரக்கல்வி அறிமுகமே. இது நிறுவனப்படுத்தப்பட்ட கல்வியின் கோட்பாட்டையே மாற்-றினாலும், இந்தப் புதுமுறை பின்பற்றப்படுவதற்குக் காரணம்

அறிவியலில் - குறிப்பாகத் தகவல் தொடர்பு சாதனத்தில் ஏற்பட்ட வளர்ச்சியும் சமூக உணர்வு மாற்றமுமே.

கல்வியாளர்கள் கல்வி என்பது செய்தி (Information), அறிவு (Knowledge), பாடத் தொடர்பான செயல்திறன் (Skill), ஆகியவைகளை ஒருவர் (கற்பிப்போர் - ஆசிரியர்) மற்றொருவருக்கு (கற்போர் - மாணவர்) அளித்தலும் தெரிவித்தலும் ஆகும் என்பார்கள்[3]. எனவே மரபுவழிக் கல்வியில் ஒரு இடத்தில் கூடியிருந்து கற்பித்தலையும், கற்றலையும் வாய்மொழிவிரிவுரை மூலம் மேற்கொள்ளுவார்கள். தொலைதூரக் கல்வியில் கற்பிப்போரும் கற்போரும் வெவ்வேறுஇடத்தில் இருந்துகொண்டு எழுத்துமொழி மூலம் தொடர்புகொள்ளுகிறார்கள். தொலைதூரக் கல்வியில் சில பாடங்களுக்கு நேர்முக வகுப்பு (Contact Seminar) கட்டாயம் உண்டு; மொழிக் கல்விக்குக் கட்டாயம் இல்லை.

தொலைதூரக் கல்விக்குக் கல்வியாளர் கூறும் சமூகக் காரணம் உயர்கல்வி பெற விரும்புவோர் பொருளாதார வசதியின்மை, குடும்பப் பொறுப்பு, இளமைக் காலத்திற் கல்வியில் நாட்டமின்மை போன்ற காரணங்களால் தொடர முடியாதவர்கள் எந்த வயதில் வேண்டுமானாலும் இதில் சேர்ந்து பயன்பெறலாம் என்பது. தகவல்தொடர்பு சாதனத்தில் மின்னணு (Electronic media) ஏற்பட்டது என்பது அறிவியல் காரணம். கல்வியாளர்கள் தொலைதூரக் கல்வியின் முக்கிய நோக்கமாக இரண்டைக் குறிப்பிடுகிறார் : 1. தான் முன்னர் படித்த துறையில் ஏற்பட்ட அறிவு வளர்ச்சியை அறிந்துகொள்வது. 2. புதிய அறிவுத் துறையில் செய்திகளையும் அறிவுகளையும் தெரிந்து கொள்வது[4].

தொலைதூரக் கல்வி பற்றி இரண்டு செய்திகள் இங்குச் சுட்டிக்காட்டத்தகுந்தவை 1. நேரடிக்கல்விக்கும் இதற்கும் பாடத் திட்டங்களில் மாறுபாடு இல்லை என்று கொள்கை அளவில் கூறினாலும் இலக்கணப் பாடத்திட்டத்தில் மாறுபாடு காணப்படுவது (உ-ம். அண்ணாமலைப் பல்கலைக்கழக இலக்கணப் பாடத்திட்டத்தில் மாறுபாடு உள்ளது) 2. தொலைதூரக்கல்வியில் பாடங்கள் 20 அல்லது 25 அலகுகளாகப் பிரித்துப் பாடக்

குறிப்புகள் (Lessons) அமைப்பது. இதுவரை கல்வியின் தரம் பாடத்திட்டம், மாணவர்கள் தேர்ச்சி விகிதம் ஆகியவை கொண்டு மதிப்பிடப்பட்டது. தொலைதூரக்கல்வியில் பாடக் குறிப்புகளைக் கொண்டும் மதிப்பிட வாய்ப்பு உள்ளது என்று பாடம் எழுது-வோர் கவனம் கொள்ளவேண்டியது.

## 3.4. திறந்த வெளிப் பல்கலைக்கழகம்

கல்வித்துறையில் ஏற்பட்ட முன்னேற்றம் திறந்த வெளிப்· பல்கலைக்கழகம் என்ற புதிய நிறுவனம் துவங்கப்பட்டதே. இது இரண்டு நிலையில் தொலைதூரக் கல்வியிலிருந்து மாறுபடு-கிறது: 1. திறந்தவெளிக்கல்விக்கு முன்கல்வி வரையறை இல்லை; 2. குறிப்பிட்ட வயதும் நுழைவுத் தேர்வு வெற்றியும் போதுமானது. உதாரணமாக இளநிலைக் கல்விக்கு 18 வயதும், முதுநிலைக்கல்விக்கு 25 வயதுமே தகுதிகள். கொள்கை அளவி-லேயே இரண்டுக்கும் பாடங்களும் பாடத்திட்டங்களும் வேறுபாடு இல்லை என்று கூறுவது ஆச்சரியமாக இருக்கிறது. அப்படி-யானால் கற்பவருக்கேற்ற பாடத்திட்டம் இல்லை என்ற குறை ஏற்படுகிறதே?.

நிறுவனப்படுத்தப்பட்ட கல்வியில் மொழிக் கல்வியைப் பொருத்தவரையில் படிநிலைப்படுத்தம் இல்லாதது உலகளாவிய நிலையில் மொழிக் கல்வியிலும் இலக்கியக் கல்வியிலும் ஏற்பட்ட முன்னேற்றம் புறக்கணிக்கப்பட்டதற்குக் காரணமாகும். இது தமிழியல் கல்விக்கும் பொருந்தும். தமிழகத்தைப் பொறுத்த-வரையில் கடந்த பத்து ஆண்டுகளில் ஏற்பட்ட மாற்றம் தொலை-தூரக் கல்வியின் உள்துறையாகத் திறந்தவெளிப்பல்கலைக்-கழகம் (Open University) அமைக்கப்பட்டுள்ளது.

## 3.5. தேர்வுக்கெடுவு

தேர்வுக் கெடுவு இரண்டு முறையில் ஆண்டுத்தேர்வு, அறுதிங்கள் தேர்வு என்று நடத்தப்படுகிறது. இது மாணவர்-களைப் பற்றிக் கல்வியாளர்களின் சிந்தனையை ஓரளவு புலப்-படுத்துகிறது. அதாவது மாணவர்கள் ஆண்டுத் தேர்வுக்குக் கடைசி ஓரிரு மாதங்களே படிக்கிறார்கள்; மீதி நேரங்களில் படிப்-

பில் கவனம் செலுத்துவதில்லை. மாறாக அரசியல், சமூகப் பிரச்சனைகளில் ஈடுபட்டு வேலைநிறுத்தம் செய்கிறார்கள். அறு-திங்கள் தேர்வு மாணவர்களைப் படிப்பில் முழுக் கவனம் செலுத்-தச்செய்யும் என்பதே திட்டம். இது ஒரு கோணம். இதற்கு இன்னொரு கோணமும் இருப்பது சுட்டிக்காட்டத்தகுந்தது. இங்கு இரண்டு உண்மைகள் சுட்டிக் காட்டப்படவேண்டும் 1. தேர்வு முறை : அதாவது பாடத் திட்டத்தில் பாட நூல்கள் Text - books) மேற்பார்வை நூல்கள (Reference books) என்று இரண்டு வகை இருந்தாலும், கேள்விகள் பாடநூல்களிலிருந்து மட்டுமே கேட்-கப்படுவது கேள்விகள் நடுத்தர (Average)மாணவர்களை நோக்-கியவை. மாணவர்களைப் பாடநூல்களை மட்டுமே படித்தால் போதும் என்ற எண்ணத்தை உண்டாக்குபவை அந்தத் துறை-யில் ஈடுபாடு கொண்டு மாணவர்களைப் புதியதாக நூல்களைப் படிக்கத் தூண்டும்படி அமையவில்லை. 2. பொதுவாக நம் மாணவர்களிடம் பல்கலைக்கழகநிலையிலும் கூடப் பொது நூல்-களும், புதுநூல்களும் படிக்கும் பழக்கம் கிடையாது. அதற்கேற்ற பாடப்பொருள் பற்றிய படித்தரப்படுத்தப்பட்ட நூல்கள் கிடை-யாது தமிழியலைப் பொறுத்தவரையிலும், சங்க இலக்கியம் கடந்த ஐம்பது ஆண்டு படிக்கப்பட்டுவந்தாலும், இளங்கலை மாணவனுக்குச் சங்கஇலக்கியத்தை ஆய்வுப் பூர்வமாக அறிமுகப் படுத்தும் ஒரு நூலோ அல்லது சங்க இலக்கியம் பற்றிய நல்ல ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பு நூலோ கிடையாது மாண-வனைக் கல்வியில் நாட்டம் கொள்ளச் செய்கிற நிலை இன்று-கிடையாது. பிற பாடங்கள் பிறமொழியில் கற்பிக்கப்படுவதும் மாணவனைக் கல்வியில் நாட்டம் கொள்ளச் செய்யாததற்கு இன்னொரு காரணம். இவையெல்லாம் நம்முடைய கல்வித் திட்டத்தில் அடிப்படையிலேயே அமைந்துள்ள குறைகள். இதற்-கும் மேலாக நிறுவனப்படுத்தப்பட்ட கல்வியின் அடிப்படை பாடத் திட்டமே. இங்குக் கட்டுரைத் தலைப்புக்கு ஏற்ப இலக்கணக்-கல்வியின் பாடத்திட்டமே எடுத்துக்கொள்ளப்படுகிறது.

## 4. பாடத்திட்டம்

தமிழியல் கல்வியில் இளங்கலையிலும், முதுகலையிலும் இலக்கணக் கல்வி என்பது இடைக்காலத்திலும், பழங்காலத்-திலும் எழுதப்பட்ட ஐந்து வகை (எழுத்து, சொல், பொருள்

(அகம், புறம்), யாப்பு, அணி இலக்கணங்களின் கல்வியே. ஆனால், தமிழில் சொற்கோவை, சொற்களஞ்சியம் ஆகிய-வைகளை விளக்கும் நிகண்டு நூல்களும், இலக்கிய வகைகளை விளக்கும் பாட்டியல் நூல்களும் உள்ளன. அவை பாடத்திட்டத்தில் இடம்பெறவில்லை. தமிழின் தலை சிறந்த இலக்கணமான தொல்காப்பியத்திலும் இலக்கியக் கோட்பாட்டுக்கு உதவும் செய்யுளியல் சில ஆண்டுகளிலேயே, சில பல்கலைக்கழகங்-களிலேயே பாடமாக வைக்கப்பட்டுள்ளது.

இளங்கலையில் இடைக்கால இலக்கணங்கள் மூலம் மட்டுமே பாடம். இளம் இலக்கியத்தில் தொல்காப்பியம் பழைய உரையோடு பாடம். முதுகலையில் தொல்காப்பியம் மட்டும் (அதுவும் செய்யுளியல் நீங்கியது) பாடம் என்பதாலும் பொருள-திகாரத்தில் உரை மட்டுமே பாடம் என்பதாலும் இலக்கியக் கோட்பாட்டு ஆய்வு அறிமுகப்படுத்தாமலேயே போய்விடுகிறது. மொழியின் கட்டமைப்பை உணர்த்தும் எழுத்துக்கும், சொல்-லுக்கும் உரிய பாடத்திட்டம் சுவையான வரலாறு உடையது.[5] பாடத்திட்டத்தின் மாற்றம் தமிழ் அறிஞர்களின் - துறைத்தலை-வர்களின் மனநிலையைப் பிரதிபலிப்பதாக உள்ளது. (உண்-மையில் பாடத்திட்டங்கள் ஆசிரியர்களின் மனநிலையின் (அறி-வுநிலை, உணர்வுநிலை பிரதிபலிப்பே). ஐந்தாறு ஆண்டுகள் வரை எழுத்து இலக்கணங்களையும், சொல் இலக்கணங்களை-யும் புரிந்து கொள்ள வசதியாக மொழியியல் கூடுதல் பாடமாக இருந்தது. இன்று பல பல்கலைக்கழகப் பாடத்திட்டத்திலிருந்து எடுக்கப்பட்டுவிட்டது. அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழி-பற்றிய இலக்கணப் பாடத்திட்டத்தில்(அதாவது எழுத்து,சொல்) மூன்று தாள்கள் நேரடிக்கல்விக்கு மட்டும் உள்ளன. இலக்கணம் 1: தொல். எழுத்து, இளம்பூரணர் உரையுடன். இலக்கணம் 2: தொல். சொல். சேனாவரையர் உரையுடன். இலக்கணம் 3: இலக்கணக் கோட்பாடு. மூன்றாவது தாள் தொலைதூரக் கல்வி முதுகலையில் கிடையாது.

அழகப்பா பல்கலைக்கழகத்தில் முதுகலையில் நான்கு பரு-வத்திலும் இலக்கணப் பாடம் உள்ளது. முதல் பருவத்தில் இலக்கணம் எழுத்தியல் 10 கூறுகளாகப் பிரிக்கப்பட்டு முதல் ஆறு கூறுகளும் தொல்காப்பிய எழுத்ததிகார 9 இயல்களும்,

அடுத்த 2 கூறுகள் தொல்காப்பியம் - நன்னூல் ஒப்பீடும், கடைசி 2 கூறுகள் மொழியியல் என்றும் பாகுபடுத்தப்பட்டுள்ளன. பாட நூல் என்று தனியே குறிப்பிடாமல் பார்வை நூலாகத் தொல்காப்பிய மூலம், நன்னூல் மூலம், வெள்ளைவாரணன் தொல்காப்பியம் - நன்னூல் ஒப்பீடு, மொழியியல் நோக்கில் எழுத்திலக்கண ஆய்வுநூல்கள் (தமிழிலும், ஆங்கிலத்திலும் உள்ளவை), ஆங்கில மொழியியல் நூல் ஆகியவை கொடுக்கப்பட்டுள்ளன. இரண்டாம் பருவத்தில் இலக்கணம் சொல்லியல் என்ற தாள் அதே முறையில் பகுபட்டுள்ளது. ஆனால் பாடநூல் என்று சேனாவரையர் உரையும் பார்வை நூல்கள் என்று முன் குறிப்பிட்ட முறையில் பல நூல்கள் (ஆங்கிலத்திலும், தமிழிலும்) கொடுக்கப்பட்டுள்ளன. மூன்றாம் பருவத்தில் இலக்கணம்: தொல்காப்பியம் : பொருளியல் - முன்னைந்து இயல்கள் என்று ஒவ்வொரு இயலும் இரண்டிரண்டு கூறுகளாகப் பகுத்துக் கொடுத்து பாடநூல் என்று தொல்காப்பியம் - பொருளதிகாரம் - இளம்பூரணர் உரை மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளது. நான்காம் பருவத்தில் இலக்கணம்: யாப்பும் அணியும் என்ற தலைப்பில் தொல்காப்பிய மெய்ப்பாட்டியல் 2 கூறு, செய்யுளியல் 3 கூறு, மரபியல் 1 கூறு, உவமயியல் 1 கூறு, தொல் - தண்டியலங்கார உவமை, உருவக அணி 1 கூறு, யாப்பருங்கலக்காரிகை 2 கூறு என்று பகுத்துப்பாட நூலாகத் தொல்காப்பியம்-பொருளதிகாரம்-இளம்பூரணர் உரை - பின் நான்கு இயல்கள், யாப்பருங்கலக்காரிகை குணசாகரர் உரையுடன் என்ற இரண்டு மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளன. இங்குப் பொருளதிகாரப் பாடத்தில் இலக்கியக் கோட்பாட்டு நூல்களோ, தற்கால ஆய்வாளர் நூல்களோ சேர்க்கப்படவில்லை என்பது கவனத்துக்கு உரியது.

பொதுவாகப் பாடத்திட்டம் ஏதோ ஒரு வரலாற்று அடிப்படையில் - அதாவது இடைக்கால இலக்கணம் இளங்கலை - இளம் இலக்கியம் வகுப்புகளுக்கும், பழங்கால இலக்கணம் இளம் இலக்கிய வகுப்புகளுக்குப் பழைய உரையுடன், முதுகலை வகுப்புகளுக்குப் பழைய உரையுடன் சில மொழியியல் கருத்துகள் என்ற முறையிலேயே அமைக்கப்பட்டுள்ளது என்று பொதுமைப்படுத்தலாம். மாணவர்களின் பின்புலம், இன்றைய தேவை, பயன்பாடு, என்ற நிலையில் பாடத்திட்டத்தை வரையறுத்து ஆராய்ச்சி வளர்ச்சியைக் கோடிட்டுக் காட்டிப் புதிய

கருத்தாக்கத்துக்கும், ஆய்வு வேட்கைக்கும் தூண்டும்வகையில் படிநிலைப்படுத்திப் பாடத்திட்டத்தை அமைக்கவேண்டும்.

## 5. வகுப்புகள்

பாடங்களை யார் நடத்துவது என்பதும் பெரிய பிரச்சனையே. பொதுவாகத் துறைத்தலைவர் விருப்பப்படி யாரும் எந்தப் பாடத்தையும் நடத்தலாம். ஒருவர் ஒரு துறையில் தனிக் கவனம் செலுத்திச் சிறப்புப் பட்டம் பெற்றிருந்தாலும் அந்தப் பாடத்தை அவர் நடத்த அனுமதிக்கப்படமாட்டார். மேலும், ஒரு பாடத்தையே ஒன்றுக்கு மேற்பட்ட ஆசிரியர்கள் நடத்துவார்கள். அவர்களுக்குள் ஒருங்கிணைப்பு இருக்காது. மாணவர்கள்தான் முன் பகுதியில் ஒரு பங்கையும், பின்பகுதியில் ஒரு பங்கையும் பாடங் கேட்டு குழம்பவேண்டியிருக்கும். ஒரு பாடத்துக்குள்ளே ஒருங்கிணைப்பு இல்லாதபோது தொடர்புடைய பாடங்களுக்குள் ஒருங்கிணைப்பு எப்படி எதிர்பார்க்கமுடியும். உதாரணமாகச் சொல்லதிகார எச்சவியல் குறிப்பாக மொழிபுணர் இயல்பு - பொருள்கோள் நடத்தும்போது பாடப்பகுதியாக இருக்கும் இலக்கியப் பகுதிக்குப் பொருத்திப் பார்க்கும் முயற்சி மேற்கொண்டிருந்தால், மாணவர்களும் மொழியின் ஒரு பயன்பாட்டை இலக்கிய மொழிக் கட்டமைப்பு மூலம் அறிந்து, இலக்கியச் சுவை பெருகுவதை உணர்ந்துகொள்ளமுடியும்; இலக்கிய ஆய்விலும் பொருள்கோள் ஆய்வு நடைமுறைநிலையில் துவங்கி, வளர்ந்து, நடையியல் போன்ற புதிய முறை தமிழகத்திலேயே வளர்ந்திருக்கமுடியும். எனவே பாடங்களுக்கு இடையே இருக்கும் உறவைப் பாடத்திட்டமும், வகுப்பும் வெளிப்படுத்துவதாக அமையவேண்டும்.

சில சமயங்களில் ஆசிரியர்கள் மாணவர்கள் பாடங்களில் அக்கறை காட்டுவதில்லை என்று குறை கூறுவதையும் பார்க்கலாம். ஆசிரியர்களின் உண்மையான ஆர்வத்தைப் பொறுத்தே மாணவர்கள் ஆர்வமும் இருக்கும். சில நல்ல ஆசிரியர்கள் புதிய பாடத்திட்டம் வரும்போது இரண்டு மூன்று ஆண்டு பாடம் நடத்தி நல்ல பாட நூல்களைப் பிரசுரிப்பதும் உண்டு. வரதராசனாரின் மொழிநூல், மொழிவரலாறு, சில இலக்கியத் திறனாய்வு நூல்கள் அப்படி வெளிவந்தவையே. ராஜராஜவர்மா என்ற

மலையாள அறிஞர் 'கேரளபாணிணீயம்' என்ற நூல் அப்படி உருவானதாக முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். டிசசூர் என்ற மேலைநாட்டு மொழியியல் அறிஞரின் வரலாற்றுச் சிறப்பு மிகுந்த பொதுமொழியியல் பாடங்கள் (A Course in General Linguistics) என்ற நூல் அவர் இறந்த பிறகு அவருடைய மாணவர்கள் எழுதிவைத்திருந்த குறிப்புகளின் தொகுப்பே. மேலும், பல அறிஞர்களின் ஆய்வுக் கட்டுரைக்கான கரு பாடம் நடத்தும்போது உருவானதாக அந்த ஆய்வுக் கட்டுரையிலேயே குறிப்பிட்டிருப்பதையும் காணமுடியும். எனவே வகுப்பறை என்பது ஆசிரியர்களுக்குக் கிடைத்த வரப்பிரசாதம்.

## ௯. எதிர்காலத் திட்டம்

எதிர்காலத்தில் இலக்கணக் கல்வி சிறப்பாகத் தொடர இரண்டு நிலையில் திட்டம் வகுக்கலாம். 1. பாடத்திட்டத்தைச் செம்மைப்படுத்துவது; இன்று இலக்கணம் நூலிலுள்ள செய்திகளைத் தெரிந்துகொள்வதற்காகவே கற்பிக்கப்படுகிறது. அவைகளை இன்று நாம் படிக்கவேண்டிய அவசியத்தை வற்புறுத்தினால்தான் மாணவர்கள் ஆர்வமாகப் படிக்க முன்வருவார்கள். அதற்கு இலக்கண ஆய்வு பன்முகப்படுத்தப்படவேண்டும். இலக்கணத்தின் கோட்பாடு, இலக்கண ஆசிரியரின் சமூக உணர்வு - நூலை எழுதிய நோக்கம், அன்றைய கால இலக்கியம், வாழ்க்கை பற்றிய ஆசிரியரின் உணர்வு ஆகியவைகளை ஆராய்ந்து விளக்கினால்தான் அன்றும், இன்றும் இலக்கணமும் சமூகத் தேவை (Social relevance) உடையது என்பது தெளிவுபட்டு இலக்கணக் கல்வியில் ஆர்வத்தை உண்டாக்கும் (இது பற்றிய சில கருத்துக்களுக்கு, சண்முகம், 1994 பார்க்கவும்). இலக்கணக் கல்வியில் நடந்த ஆய்வு ஓரளவாவது பாடத்திட்டத்திலும் பிரதிபலிக்கவேண்டும். 2. இலக்கணக் கல்வி பரவலாக்கம்: அதுவே இலக்கணக் கல்வி, இலக்கியக் கல்விக்கும் – ஆய்வுக்கும் மட்டும் அல்லாமல், மொழியைச் சிறப்பாகப் பயன்படுத்துவது பற்றி அறிந்துகொள்ளவும் உதவும். 3. இதற்கும் மேலாக, மொழியியல் மாணவர்களுக்குரிய பாடத்திட்டத்தில் - குறிப்பாக மொழியியல் வரலாற்றுப் பாடத்தில் (History of Linguistics) தமிழ் இலக்கணக் கோட்பாடு இடம் பெறவேண்டும்.

இன்று தமிழ் மொழியியலார் இலக்கண ஆய்வில் ஈடுபட்டுள்ளார்கள். ஆனால் மொழியியல் மாணவர்களுக்குத் தமிழ் இலக்கணக் கோட்பாடு பல பல்கலைக்கழகங்களில் பாடமாக அமையவில்லை. மதுரை காமராசர் பல்கலைக்கழகம் விருப்பப் பாடமாக அமைத்துள்ளது. பாடமாக அமையாததற்கு ஆங்கிலத்தில் பல நூல்கள் வெளிவராதது ஒரு காரணம். ஆனாலும் தொல்காப்பிய இலக்கண - இலக்கியக் கோட்பாடும் அவருடைய தனித்துவமும் பிற மொழி அறிஞர்களும் ஒத்துக்கொள்ளும் வகையில் நிறுவப்பட்டு இந்திய மொழியியல் வரலாற்றிலும் இடம் பெறவும், உலகளாவிய நிலையில் பிற மொழி இலக்கணங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும் பார்வை வளரவும் மொழியியல் துறையிலும் தமிழ் இலக்கண வரலாறு விஞ்ஞானப் பூர்வமாகக் கற்பிக்கும் முயற்சி மேற்கொள்ளவேண்டும்.

## அடிக்குறிப்பு

1. இளம் இலக்கியத்தின் முன்னோடியான புலவர் கல்வி வரலாற்றிலும் கல்வித் தூய்மை உண்டு. புலவர் கல்விக்கு முன்னோடி வித்துவான் கல்வி. அதில் ஒரு காலத்தில் வடமொழிப் பாடம் இருந்தது. இருபது, முப்பதுகளில் வடமொழிவாணர்கள் வடமொழிக்கு மொழி, இலக்கியம், இலக்கணம் ஆகிய நிலைகளில் தமிழ் கடன்பட்டது என்று கூறி வந்ததும், அப்பொழுது இருந்த அரசியல், சமூக உணர்வும் வடமொழிப் பாடம் எடுக்கப்பட்டதோடு புலவர் என்ற தமிழ்ப் பெயர் மாற்றப்பட்டதற்கும் காரணமாகும். ஆனால் இன்று உலகளாவிய நிலையிலேயே வடமொழியும் தமிழுக்குக் கடன்பட்டது என்பது ஒத்துக்கொள்ளப்படுகிறது. இருந்தாலும் தமிழகத்தில் வடமொழி எதிர்ப்பு உணர்வு குறையவில்லை. அதன் தாக்கமே பிறமொழிக் கல்வி அற்ற இளம் இலக்கியப் படிப்பு. மொழிபற்றிய பழமைவாதம் வலுவாக நீடிப்பதற்கு இதுவும் ஒரு காரணம்.

2. தமிழக அரசு, பள்ளிகளில் தமிழாசிரியராகப் பணியாற்றுவதற்கு இளங்கலையிலும் முதுகலையிலும் தமிழைச் சிறப்புப் பாடமாக எடுத்துப் படித்திருக்க வேண்டும் என்று ஆணை பிறப்பித்துள்ளது.

3. Education involves the transferrence or communication of information, knowledge and skills from one point, i.e., the source or in other words the teacher, to another, i.e. the receiver or the students. In traditional teaching, it involves the physical presence of both the sources. (Sharma, 1993 : 1.)

.4 One of the objectives of distance education is to cater the need of those who think that education is a lifelong activity and may either like to acquire informations or know-edge in new discipline or up-date their knowledge in their own discipline. (Sharma, 1993 : 3)

5. ஐம்பது, அறுபதுகளில் முதுகலைக்கல்வி இலக்கணப் பாடம் ஒரு உரையை ஒட்டியே அமைந்திருந்தது. எழுபதுகளில் தமிழ் இலக்கணங்களை ஒப்பிட்டுக்கற்பது அறிமுகப்படுத்தப்-பட்டது. எண்பதுக்குப் பிறகே மொழியியல் தனிப்பாடமாகவும், இலக்கணக்கோட்பாடு ஒரு பகுதியாகவும் கற்பிக்கப்பட்டது. தொண்ணூறுகளில் மொழியியல் நீக்கப்பட்டு, இலக்கணக்-கோட்பாடு தனியாகவோ அல்லது ஒரு பகுதியாகவோ கற்பிக்-கப்படுகிறது.

6. அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பாடத்திட்டத்தைப் பற்றிப் பேராசிரியர்கள் வெ. பழனியப்பன், துரை. பட்டாபிராமன் ஆகியவர்களும்,பாரதிதாசன் பல்கலைக்கழகப் பாடத்திட்டத்தைப் பற்றிப் பேராசிரியர் மா. இராமலிங்கம் அவர்களும், அழகப்பா பல்கலைக்கழகப் பாடத்திட்டத்தைப்பற்றிப் பேராசிரியர் அ. விசுவநாதன் அவர்களும் தகவல் அளித்தார்கள். அவர்களுக்கு என் நன்றி.

## துணையன்கள்


சண்முகம், செ. வை. 1994. இலக்கண உருவாக்கம் (பல்லவர்-பாண்டியர் காலம்), சென்னை.

சண்முகம், செ.வை. இலக்கண ஆய்வு - இந்தத் தொகுதியில் முன்னால் உள்ளது.

A.R. Sharma, 1993. Educational Technology, Meerut. **Advanced Educational Technology**

# பெயர்ப்பதிலிகள்

அ. சீநிவாசன்

11

பாரத்துக்குப் பதிலாக இவன் வந்திருக்கிறான். புனிதா-வுக்குப் பதிலாக அவள் வந்திருக்கிறாள் என்று கூறுவது இன்-றும் வழக்கில் உள்ளது. உயர்திணை அல்லது அல்திணைப் பெயர்களுக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படும் இப்பெயர்கள் இங்குப் 'பதிலிகள்' (Pronouns) என்று குறிப்பிடப்படுகின்றன. இப்பதிலிகள் மூன்று வகைப்படும். (1) பெயர்ப் பதிலிகள் (Personal Pronouns) (2) சுட்டுப் பெயர்கள் (Demonstrative Pronouns) (3) வினாப் பெயர்கள் (Interrogative Pronouns)

பெயர்ப் பதிலிகள் வேற்றுமை உருபு ஏற்கின்றபொழுது ஏற்படும் மாற்றம் இவண் விளக்கப்படுகிறது.

தாம், நாம், யாம் (தொல். 189) (நூம்)[1] என்னும் பெயர்ப்-பதிலிகள் வேற்றுமை உருபு ஏற்கின்ற பொழுது தம், நம், எம், நும் என்று உரு திரியும்.

பெயர்ப் பதிலிகளோடு இரண்டாம் வேற்றுமை உருபும், மூன்றாம் வேற்றுமை உருபும் புணரும்பொழுது நிலைமொழியில்

உள்ள குறிலை அடுத்த மகர ஒற்று இரட்டிக்கும் என்பது விதி (161, 162).

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| தாம் | > | தம் + ஐ | > | தம்ம் + ஐ | > | தம்மை |
| நாம் | > | நம் + ஐ | > | நம்ம் + ஐ | > | நம்மை |
| யாம் | > | எம் + ஐ | > | எம்ம் + ஐ | > | எம்மை |
| நூம் | > | நும் + ஐ | > | நும்ம் + ஐ | > | நும்மை |
| | | உம் + ஐ | > | உம்ம் + ஐ | > | உம்மை |

இதைப்போன்றே மூன்றாம் வேற்றுமை உருபுகளான ஆல், ஒடு பெயர்ப் பதிலிகளோடு புணரும்பொழுது முறையே தம்மால், நம்மால், எம்மால், நும்மால், உம்மால் என்றும்; தம்மொடு, நம்மொடு, எம்மொடு, நும்மொடு, உம்மொடு என்றும் திரியக் காணலாம்.

இரண்டாம் வேற்றுமை உருபும், மூன்றாம் வேற்றுமை உருபும் புணரும்பொழுது நிலைமொழி ஈற்றில் உள்ள ஒற்று இரட்டிக்கும் என்ற விதியை நான்கு, ஆறாம் வேற்றுமை உருபுகளுக்கும் பொதுமைப்படுத்தலாம்.

நான்காம் வேற்றுமை உருபான 'கு' உம், ஆறாம் வேற்றுமை உருபான 'அது' உம் புணரும்பொழுது பெயர்ப்பதிலி களில் ஏற்படும் மாற்றம் பற்றி இனிக்காணலாம்.

''ஆறன் உருபினும் நான்கன் உருபினும்
கூறிய குற்றொற் றிரட்டல் இல்லை
ஈறாகு புள்ளி அகரமொடு நிலையும்
நெடுமுதல் குறுகும் மொழிமுன் னான'' (162)

தாம், நாம், யாம், (நூம்) என்ற பெயர்ப்பதிலிகள் வேற்றுமை உருபு ஏற்கின்றபொழுது நெடுமுதல் குறுகும்; ஒற்று இரட்டல் இல்லை; நிலைமொழி ஈற்றில் உள்ள புள்ளி முன்னர் 'அ' கரச் சாரியை இடம்பெறும் என்பது தொல்காப்பியர் தரும் விளக்கம்.

இந்நூற்பாவில் இரு செய்திகள் புதியவை. ஒன்று, குற்று ஒற்று இரட்டல் இல்லை. இரண்டு, ஈறாகு புள்ளி அகரமொடு

நிலையும். தொல்காப்பியர் 'அ' கரச் சாரியையை வலியுறுத்தியது ஏன்? நான்காம் வேற்றுமை உருபு பெயர்ப்பதிலிகளோடு புணரும்பொழுது ஏற்படும் படிநிலை வளர்ச்சியினைக் காண்போம்.

தாம் > தம் + கு > தம்கு
நாம் > நம் + கு > நம்கு
யாம் > எம் + கு > எம்கு
நூம் > நும் + கு > நும்கு
உம் + கு > உம்கு

என்று முதல் நிலையிலும், பெயர்ப்பதிலிகள் நான்காம் வேற்றுமை உருபு ஏற்குங்கால் ஒற்றுமிகும் என்ற விதியின்படி

''வல்லெழுத்து முதலிய வேற்றுமை உருபிற்கு
ஒல்வழி ஒற்றிடை மிகுதல் வேண்டும்'' (115)

II

தாம் > தம் + கு > தம் + க்கு > தம்க்கு
நாம் > நம் + கு > நம் + க்கு > நம்க்கு
யாம் > எம் + கு > எம் + க்கு > எம்க்கு
நூம் > நும் + கு > நும் + க்கு > நும்க்கு
உம் + கு > உம் + க்கு > உம்க்கு

என்று புணர்ச்சியில் இரண்டாம் நிலை மாற்றம் அடையும். மூன்றாம் நிலையில் ஈற்று மகரமெய் இரட்டிக்க 'அ' கரச் சாரியை பெற்றாக வேண்டும்.

III

தாம் > தம் + கு > தம் (அ) + க்கு > தம்ம் (அ) க்கு
நாம் > நம் + கு > நம் (அ) + க்கு > நம்ம் (அ) க்கு
யாம் > எம் + கு > எம் (அ) + க்கு > எம்ம் (அ) க்கு
நூம் > நும் + கு > நும் (அ) + க்கு > நும்ம் (அ) க்கு
உம் + கு > உம் (அ) + க்கு > உம்ம் (அ) க்கு

நிலைமொழியில் மகர ஒற்று நிற்க வருமொழியில் 'அ' கரம் வருமானால் 'ம' கர ஒற்றுக் கெடும் என்பது விதி.

'மஃகான் புள்ளிமுன் அத்தே சாரியை' (186)

அத்தே வற்றே ஆயிரு மொழிமேல் ஒற்றுமெய் கெடுதல் தெற்றென் றற்றே' (134), 'அத்தின் அகரம் அகரமுனை இல்லை' (126) என்ற நூற்பாக்களின் விதிகளை இங்குக் கவ-னத்தில் கொள்ள வேண்டும்.

நிலம் + அத்து நிலத்து (குறள் : 28)
மனம் + அத்து + கண் மனத்துக்கண் (34)
வையம் + அத்து + உள் வையத்துள் (50)
காலம் + அத்து + இன் + ஆல் காலத்தினால் (102)

மேற்கண்ட எடுத்துக்காட்டுகள் நிலைமொழி ஈற்று மகர மெய் வருமொழி முதலில் 'அ'கரம் வரின் கெடும் என்பதற்குப் போதிய சான்றுகள் ஆகும். இதனடிப்படையிலேயே தொல்காப்பியர்'அ' கரச் சாரியை வரும்பொழுது பெயர்ப்பதிலிகளில் உள்ள குற்று ஒற்று இரட்டித்தல் இல்லை என்ற விதியை வகுத்திருத்தல் வேண்டும். இவ்விதியின்படி நிலைமொழி ஈற்றில் உள்ள 'ம'கர மெய் கெடும்.

தாம் > தம் + கு > தம்ம் (அ) + க்கு > தம் (அ) + க்கு > தமக்கு
நாம் > நம் + கு > நம்ம் (அ) + க்கு > நம் (அ) + க்கு > நமக்கு

IV

யாம் > எம் + கு > எம்ம் (அ) + க்கு > எம் (அ) + க்கு > எமக்கு
நூம் > நூம் + கு > நும்ம் (அ) + க்கு > நும் (அ) + க்கு > நுமக்கு
உம் + கு > உம்ம் (அ) + க்கு > உம் (அ) + க்கு > உமக்கு

நான்காம் வேற்றுமைக்கு வகுக்கப்பட்ட 'அ' கரச் சாரியை விதியை ஆறாம் வேற்றுமைக்கும் அமைத்துக் கொள்ளலாம்.

தாம் > தம் + அது > தம்ம் + அது > தம்மது
நாம் > நம் + அது > நம்ம் + அது > நம்மது

I

யாம் > எம் + அது > எம்ம் + அது > எம்மது
நூம் > நும் + அது > நும்ம் + அது > நும்மது
உம் + அது > உம்ம் + அது > உம்மது

வருமொழியில் 'அ' கரம் முதலெழுத்தாக வரின் நிலைமொழி ஈற்றில் உள்ள 'ம' கர மெய் கெடும் என்ற விதிப்படி

தம்ம் (அ) + அது > தம் (அ) + அது
நம்ம் (அ) + அது > நம் (அ) + அது

II

எம்ம் (அ) + அது > எம் (அ) + அது
நும்ம் (அ) + அது > நும் (அ) + அது

என்று திரியும். தொல்காப்பியர் மேலும் ஒரு விதி வகுக்கிறார். அவ்விதி வருமாறு :

''ஆறன் உருபின் அகரக் கிளவி
ஈறாகு அகரமுனைக் கெடுதல் வேண்டும்'' (116)

இவ்விதியின்படி,

தாம் > தம் + அது > தம் (அ) + து > தமது
நாம் > நம் + அது > நம் (அ) + து > நமது
யாம் > எம் + அது > எம் (அ) + து > எமது
நூம் > நும் + அது > நும் (அ) + து > நுமது
உம் + அது > உம் (அ) + து > உமது

என்று பெயர்ப்பதிலிகள் வேற்றுமை உருபு ஏற்று வரும்பொழுது உரு திரிபடையும்.

II

தான், யான், நீ என்ற ஒருமைப் பெயர்ப்பதிலிகள் வேற்றுமை உருபு ஏற்கின்றபொழுது ஏற்படுகின்ற மாற்றத்தை இனிக் காணலாம். இவ்வொருமைப் பெயர்ப்பதிலிகளோடு இரண்டாம் வேற்றுமை உருபும், மூன்றாம் வேற்றுமை உருபும் புணர்கின்ற பொழுது பெயர்ப்பதிலிகள் நெடுமுதல் குறுகும்; ஈற்றில் நின்ற ஒற்று இரட்டிக்கும்.[2]

தான் > தன் + ஐ > தன்ன் + ஐ > தன்னை
யான் > என் + ஐ > என்ன் + ஐ > என்னை
நீ > நின் + ஐ > நின்ன் + ஐ > நின்னை
நூன் > நுன் + ஐ > நுன்ன் + ஐ > நுன்னை
உன் + ஐ > உன்ன் + ஐ > உன்னை

இவ்வாறே பெயர்ப்பதிலிகள் ஆல், ஒடு என்ற மூன்றாம் வேற்றுமை உருபுகள் ஏற்கின்ற பொழுது தன்னால், என்னால், உன்னால் என்றும்; தன்னொடு, என்னொடு, நின்னொடு, உன்னொடு என்றும் மாறும்.

பெயர்ப்பதிலிகள் நான்காம் வேற்றுமை ஏற்கின்ற பொழுது

தான் > தன் + கு > தன்கு
யான் > என் + கு > என்கு

நீ > நின் + கு > நின்கு
நூன் > நுன் + கு > நுன்கு
உன் + கு > உன்கு

என்று முதல் நிலையிலும், நான்காம் வேற்றுமை உருபு ஏற்கின்ற பொழுது ஒற்றுமிகும் (115) என்ற விதிப்படி

தான் > தன் + கு > தன் + க்கு > தன்க்கு
யான் > என் + கு > என் + க்கு > என்க்கு

II

நீ > நின் + கு > நின் + க்கு > நின்க்கு
நூன் > நுன் + கு > நுன் + க்கு > நுன்க்கு
உன் + கு > உன் + க்கு > உன்க்கு

என்று இரண்டாம் நிலையில் மாற்றம் ஏற்படும். மூன்றாம் நிலையில் ஈற்று 'ன' கர மெய் இரட்டிக்க 'அ' கரச்சாரியை பெறும்.

தான் > தன் + கு > தன்ன் (அ) + க்கு > தன்ன் (அ) + க்கு

III

யான் > என் + கு > என்ன் (அ) + க்கு > என்ன் (அ) + க்கு

நீ > நின் + கு > நின்ன் (அ) + க்கு > நின்ன்(அ) + க்கு

நூன் > நுன் + கு > நுன்ன் (அ) + க்கு > நுன்ன்க்கு (அ) + க்கு

உன் + கு > உன்ன் (அ) + க்கு > உன்ன் (அ) + க்கு

நிலைமொழியில் உள்ள 'ன' கர மெய் வருமொழியில் 'அ' கரம் முதலெழுத்தாக வரக்கெடும் என்பதற்கும் தொல்காப்பியர் விதி வகுத்துள்ளார் (194)

அழன் + அத்து + ஐ > அழத்தை
புழன் + அத்து + ஐ > புழத்தை

நான்காம் நிலையில் நிலைமொழியில் உள்ள 'ன' கர மெய் 'அ' கரச் சாரியை பெற்றதால் கெட்டு முடியும் என்று கொள்ளலாம்.

V

தான் > தன் + கு + தன்ன் (அ) + க்கு > தனக்கு
யான் > என் + கு + என்ன் (அ) + க்கு > எனக்கு
நீ > நின் + கு + நின்ன் (அ) + க்கு > நினக்கு
நூன் > நுன் + கு + நுன்ன் (அ) + க்கு > நுனக்கு
உன் + கு + உன்ன் (அ) + க்கு > உனக்கு

நான்காம் வேற்றுமை ஏற்றுக் கொண்ட 'அ' கரச் சாரியை விதியை ஆறாம் வேற்றுமைக்கும் அமைத்துக் கொள்ளலாம். அவ்வாறு அமைத்துக் கொண்டால் பெயர்ப்பதிலிகள் கீழ்வருமாறு மாற்றம் அடையும்.

தான் > தன் + அது > தன் (அ) + அது > தன்ன் (அ) + அது

யான் > என் + அது > என் (அ) + அது > என்ன் (அ) + அது

I

நீ > நின் + அது > நின் (அ) + அது > நின்ன் (அ) + அது

நூன் > நுன் + அது > நுன் (அ) + அது நுன்ன் (அ) + அது

உன் + அது > உன் (அ) + அது > உன்ன் (அ) + அது

வருமொழியில் 'அ' கரம் வர நிலைமொழி ஈற்றில் உள்ள 'ன' கர மெய் கெடும் என்ற விதிப்படி

தன்ன் (அ) + அது > தன் (அ) + அது
என்ன் (அ) + அது > என் (அ) + அது

II

நின்ன் (அ) + அது > நின் (அ) + அது
நுன்ன் (அ) + அது > நுன் (அ) + அது
உன்ன் (அ) + அது > உன் (அ) + அது

என்று திரிபடையும். ஆறாம் வேற்றுமை உருபில் இடம்பெறும் 'அ' கரம் நிலைமொழி ஈற்றில் உள்ள அகரத்தின் முன் கெடும் என்ற விதிப்படி (116) கீழ்வருமாறு மாற்றம் அடையும்.

தான் > தன் + அது > தன் (அ) + து > தனது
யான் > என் + அது > என் (அ) + து > எனது

III

நீ > நின் + அது > நின் (அ) + து > நினது
நூன் > நுன் + அது > நுன் (அ) + து > நுனது
உன் + அது > உன் (அ) + து > உனது

தொல்காப்பியர் கருத்தின் அடிப்படையில் தாம், நாம், யாம், நூம் என்ற பன்மைப் பெயர்ப்பதிலிகளும்; தான், யான், நீ என்ற ஒருமைப் பெயர்ப்பதிலிகளும் நான்காம் வேற்றுமை உருபு, ஆறாம் வேற்றுமை உருபு ஏற்றுப் புணருங்கால் கீழ்க் கண்ட விதிப்படிச் செயற்படும் என்று வரையறை செய்யலாம்.




'அ' சாரியை




புணர்ச்சியில் நிலைமொழி ஈற்று மெய்யும், வருமொழியில் ஆறாம் வேற்றுமை உருபில் இடம் பெறும் 'அ' கரமும் மறையும்.

## குறிப்புகள்

1. 'நீயிர்' என்பதை வேற்றுமை ஏற்கும் 'நும்' என்பதற்குப் பெயர்ப் பதிலியாகக் கொள்வார் (1971 : 88) செ.வை.சண்-முகம். 'நீயிர்' என்ற வடிவமே முன்னிலைப் பன்மைக்குத் தொல்காப்பியர் தரும் வடிவம் (தொல். சொல். 143, 174). ஆனால் இக்கருத்திற்கு மாறாக 'நும்' மின் திரிபெயர்நீயிர் (தொல்.எழுத்து 327) என்ற கருத்தும் உள்ளது.

## நும்மின் திரிபெயர்

நும்மின் திரிபெயர் நீயிர் என்பது சரியன்று. எழுவாய்ப் பெயரினின்று வேற்றுமைப்பெயர் தோன்றுமேயன்றி வேற்-றுமைப் பெயரினின்று எழுவாய்ப் பெயர் தோன்றாது. நும் என்பது நூம் என்னும் வழக்கமற்ற பண்டை முன்னிலைப் பன்மைப் பெயரின் வேற்றுமைத் திரிபாகும். நீயிர் என்பது நீ என்னும் முன்னிலை ஒருமைப் பெயர் 'இர்' என்னும் பன்மை விகுதியொடு கூடியதாகும்.

ஒருமை : நூன் > நுன் — நுன்னை, நுன்னால்
பன்மை : நூம் > நும் — நும்மை, நும்மால்
நுன் — உன் நும் > உம்
நூங்கள் > நுங்கள் > உங்கள்
ஒருமை : நீன் > நின், நீன் > நீ
பன்மை : நீம் > நிம். நீம் + கள் > நீங்கள்
நீ + இர் > நீயிர், நீவிர். (தொல்.சேனா.ப.100)

2. தான், நான் (யான்) ; தாம், நாம் (யாம்) ; என்னும் பெயர்ப்பதிலிகள் வேற்றுமை உருபு ஏற்கும்பொழுது நிலை-மொழி ஈற்றில் உள்ள ஒற்று இரட்டிக்கும் என்பது டாக்டர். முத்துச்சண்முகனாருக்கு உடன்பாடான கருத்தாகும். இவர் தன்னுடைய இக்காலத் தமிழ் வேற்றுமைகள் (1998 : 2) என்ற நூலில் நான், நீ, தான்; நாம், நீம்,தாம் என்பன வேற்றுமை உருபு ஏற்கும்பொழுது என்ன், நின்ன், தன்ன் என்று ஒருமையிலும் ; எம்ம், உம்ம், தம்ம் என்று பன்மையிலும் நிலைமொழி ஈறு இரட்டிப்பதைக் குறிப்பிட்டுள்ளார்.

# பிழை ஆய்வு நோக்கில் இலக்கணம் கற்பித்தல்

தூ. சேதுபாண்டியன்

## 12

மொழி கற்றல் - கற்பித்தல் சூழலில் மாணவர்களின் மொழிப் பயன்பாட்டில் உள்ள மொழிப் பிழைகளை - கற்கும் மாணவர்கள் செய்யும் பிழைகளைத் - தொகுத்துப் பகுத்து ஆய்-வதே மொழிப்பிழையாய்வு எனப்படும். இப்பிழையாய்வு மாண வர்கள் செய்யும் பிழைகளுக்கான காரணங்களை அறியத் துணை புரிகின்றது. இதன்மூலம் மாணவர்கள் எவ்வெவ்விடங்களில் பிழை செய்வார்கள் என்பது தெளிவாகிறது. இப்பிழையாய்வின் முடிவுகள் மாணவர்களின் மொழித்திறனில் உள்ள குறைகளை ஆசிரியருக்குத் தெரிவிக்கின்றன. இதனை அறிந்த ஆசிரியர் மாணவர்கள் பிழைசெய்யும் முறைகளை உணர்ந்து கொள்ளு-வதால், மாணவர்கள் பிழைசெய்யும் பகுதிகளுக்கு அதிக அழுத்-தம் கொடுத்து அப்பகுதிகளை மாணவர்களின் கோள்திறனுக்-கேற்பச் சிறு சிறு அலகுகளாகப் பகுத்துக் கொண்டு சிறப்பாகக் கற்பிக்கமுடியும். இந்நோக்கத்தில் பிழையாய்வு முறையையும் அதன் துணையுடன் இலக்கணம் கற்பித்தலையும் இணைக்க முயல்கிறது இக்கட்டுரை.

இக்கட்டுரைக்கு கட்டுரையாளரின் மாணவர்கள் செய்த பிழைகளே தரவுகளாகின்றன. கட்டுரையாளர் தம் மாணவர்களின் தேர்வுத்தாள்கள், பயிற்சிக்கட்டுரைகள், ஆய்வறிக்கைகள் ஆகியவற்றைத் திருத்தும்போது அவற்றில்கண்ட பிழைகளையே தம் கட்டுரைக்குரிய முதனிலைச் சான்றாகக் கொண்டுள்ளார். இவை முதல் மொழிகற்றலில் உள்ள பிழைகளுக்குரிய தரவுகளாம். இதுபோலவே கட்டுரையாளர் அமெரிக்கமாணவர்களுக்குத் தமிழ் கற்பிக்கும்போது அவர்கள் செய்யும் பிழைகளையே இரண்டாம் மொழிகற்றலில் ஏற்படும் பிழைகளுக்குரிய தரவுகளாகக் கொண்டுள்ளார்.

பிழை ஆய்வுகள் குறித்து ஆங்கிலத்தில் பலநூல்களும் கட்டுரைகளும் வெளிவந்துள்ளன. எனினும் தமிழில் அத்தகைய வெளியீடுகளை ஒரு கை விரல்களிலேயே எண்ணி முடித்துவிடலாம். இவையே இக்கட்டுரைக்குரிய துணைமைச் சான்றாகின்றன.

இத்துறையில் முதன் முதலில் வெளிவந்த நூல் 'தமிழைப் பிழையின்றி எழுதும் முறை' என்ற நூலாகும். இதனை ஆக்கியவர் ஆ.வீ. கன்னையா நாயுடு ஆவார். இந்த நூல் 1936 ஆம் ஆண்டு வெளிவந்தது. இதனை அடுத்து வெளிவந்த நூல் தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தாரால் வெளியிடப்பட்ட 'பிழைநீக்கி எழுதும் முறை'' என்ற நூலாகும். இந்நூலின் முதற்பதிப்பு எப்போது வந்தது என்ற குறிப்பு எங்கும் கிடைக்கவில்லை. இந்நூலின் பதினாறாம் பதிப்பு 1972 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்களில் வெளியிடப்பட்டுள்ளது. ஆகையால் இந்நூல் குறைந்த பட்சம் அறுபதுகளின் முற்பகுதியிலோ ஐம்பதுகளின் பிற்பகுதியிலோ வெளியிடப்பட்டிருக்கக் கூடும். இந்நூலின் முன்னுரையில் ''தமிழ் மக்கட்குப் பிற மொழிக் கல்வியில் கருத்து மிக்கிருப்பதால் அவர்கள் தமிழ் இலக்கணத்தைக் கற்பதே இல்லை, கற்பினும் கருத்தூன்றிக் கற்பதில்லை. எனவே தமிழ் மக்கள் ஒருவருக்கொருவர் எழுதிக்கொள்ளும் கடிதங்களிலும், மாணவர் எழுதும் கட்டுரைகளிலும், அரசு அலுவலர்கள் எழுதும் குறிப்புகள், அறிக்கைகளிலும், பிழைகள் மலிந்து காணப்பெறுகின்றன ..... தமிழர் சடங்குகளின் அழைப்பிதழ்களிற் பிழைகள், ...... அறிக்கைகளிற்பிழைகள், அறிக்கைப் பலகைகளிற் பிழை-

கள், எங்கே பார்த்தாலும் தமிழில் பிழைகள் மலிந்து காணப்பெறு-கின்றன'' எனத் தமிழின் நிலைக்கு இரக்கப்பட்டு அந்நிலையை நீக்கிட இந்நூல் பயன்படும் என்று குறிப்பிட்டுள்ளனர் தமிழ்ப்-பாதுகாப்புக் கழகத்தார். இந்நூல் பதினாறு பதிப்புகள் வெளி-வந்துவிட்டன. நிலைமை மாறியதாகத் தெரியவில்லை. இந்-நூலின்கண் பிழைகள் ஒருபுறமும் அவற்றின் திருந்தியவடிவங்கள் அதற்கு எதிர்ப்புறமும் வரிசையாகக் கொடுக்கப்பட்டுள்ளன-வேயன்றிப் பிழைகள் குறித்த ஆய்வுகள் ஏதும் மேற்கொள்ளப் பெறவில்லை. பிழைகளைப் பகுத்துப் பதினான்கு உட்தலைப்-புகளில் தந்திருப்பது குறிப்பிடத்தக்க முயற்சியாகும்.

இதனை அடுத்து இத்துறையில் வெளிவந்த நூல் பேரா-சிரியர் அ.கி. பரந்தாமனாரின் ''நல்லதமிழ் எழுதவேண்டுமா?'' என்னும் நூலாகும். இதன்கண்ணும் சரியான மொழிப்பயன்-பாடு குறித்தெழுதப்பட்டுள்ளதே தவிரப்பிழை ஆய்வு எதுவும் மேற்கொள்ளப்பட்டதாகக் கூறவியலாது. ஆயினும் இந்நூல்-களை இத்துறையில் தோன்றிய முன்னோடி நூல்கள் என்ற வகையில் போற்றத்தான் வேண்டும். இவை தவிரப் பேராசிரியர் மு. வரதராசனார், பேராசிரியர் கு. பரமசிவன், பேராசிரியர் ந. குமாரசாமிராஜா, பேராசிரியர் தி. முருகரத்தனம், பேராசி-ரியர் நா. செயராமன் போன்றோர் அவ்வப்போது ஒரு சில கட்டுரைகளில் பிழைகளைச் சுட்டிச்சென்றுள்ளனர். இவர்-களின் படைப்பின் நோக்கம் மொழிப் பிழைகளை ஆய்வதன்று.

இத்துறையில் வெளிவந்த அடுத்த நூல் மைசூரில் உள்ள இந்திய மொழிகளின்மைய நிறுவனத்தின் ஓர் அங்கமாகத்திகழும் தென்னிந்திய மொழிகள் பயிற்று மையத்தில் பணியாற்றும் போரசிரியர்கள் ந. நடராசபிள்ளை மற்றும் ச. விமலா ஆகியோர் இணைந்து எழுதிய 'பிழை ஆய்வு' என்னும் நூலாகும். இதுவே இத்துறையில் தமிழில் வெளிவந்த, மொழிப்பிழை ஆய்வு குறித்துவிளக்கும் வகையில் அமைந்த முதல் நூலாகும். இதற்குப் பின்னரும் யாரும் இத்தகைய முயற்சியில் ஈடுபட்டதாகத் தெரியவில்லை.

இதன்பின்னர் அண்மையில் பேராசிரியர் ஜெ. ஸ்ரீ சந்தி-ரன் என்பவர் ''தமிழில் க்,ச்,த்,ப், பிழையின்றி எழுதுவது

எப்படி?,' என்ற தலைப்பில் ஒரு நூல் எழுதியுள்ளார். இந்நூல் வர்த்தமானன் பதிப்பகத்தாரால் வெளியிடப்பட்டுள்ளது. இந்நூலும் பழையபாணியில் தவறுகளையும் அவற்றின் திருத்திய வடிவங்களையும் சுட்டிச் செல்வதாகவே அமைந்துள்ளது.

இக்கட்டுரை மாணவர்கள் தம் பிழைகளை முதல் மொழி கற்றலில் ஏற்படும் பிழைகள் இரண்டாம் மொழி கற்றலில் ஏற்படும் பிழைகள் என இரண்டாகத் தொகுத்துப் பகுத்து வகைப்படுத்தி அப்பிழைகள் தோன்றியமைக்கான காரணங்களை விளக்கி அத்தகைய பிழைகள் நேரா வண்ணம் எழுதுவதற்கு இலக்கணம் கற்பித்தல் முறையை எவ்வாறு சீர் செய்து கொள்ளலாம் என்பதையும் ஆங்காங்கே சுட்டிச் செல்லும் வகையில் அமைந்துள்ளது. மொழிப் பிழையும் இலக்கணம் கற்பித்தலும் தொடர்புடையவை என்பதால் பிழைநோக்கில் இலக்கணம் கற்பித்தல் என்ற தலைப்பில் இக்கட்டுரை அமைகிறது. இலக்கண அறிவே மொழிப் பிழையைக் களைய வல்லது என்ற கருதுகோளின் அடிப்படையிலேயே இக்கட்டுரை எழுதப்பட்டுள்ளது.

தமிழ் மொழியைக் கற்கும் மாணவர்களின் மொழிப் பயன்பாட்டில் காணப்படும் வழுக்களே பிழை ஆய்வுக்குரிய தரவுகளாக அமைகின்றன. இங்கு வழுக்கள் என்பவை மொழியமைப்பில் நிகழும் பிழைகளேயாகும். மாணவர்களின் தேர்வுத்தாள்களில் காணலாகும்.

> 'பத்து அரசர்களைப் பாடிய பாடல்களின் தொகுதியே பத்துப்பாட்டு ஆகும்'
>
> 'இளங்கோவடிகள் எழுதிய சீவகசிந்தாமணியின் சிறப்பை ஒருசில வரிகளில் கூறிவிட இயலாது'

என்பன போன்ற தவறுகள் — மாணவர்கள் பாடங்களின் உள்ளடக்கத்தைச் சரியாகப் படிக்காததால் ஏற்படும் உள்ளடக்கச் செய்திகளில் உள்ள பிழைகள் — கணக்கில் எடுத்துக் கொள்ளப்படவில்லை. மாணவர்களின் மொழிப்பயன்பாட்டில் காணப்படும் வழுக்களை தவறுகள் (slips), பிழைகள் (error) என இரு வகைப்படுத்தலாம். தவறு என்பது மொழிச் செயல் வழு (slips in the performance) ஆகும். தவறு என்பதற்குச் சான்றாக, 'அணியிலக்கணம்' என்று எழுத வந்த மாணவன்

'அணியிலக்கம்' என்று எழுதுவதையும்; 'தமிழில் பல்வேறு புலவர்கள் உரை எழுதுவதில் ஈடுபட்டனர்' என்ற தொடரை எழுத விரும்பிய மாணவன் 'ஈடுபட்டனர்' என்பதை 'ஈ-பட்டனர்' என்று எழுதுவதையும் கூறலாம். இவற்றைத் தவறு என்று தான் கருதவேண்டுமே ஒழியப் பிழை என்று கருதவிய-லாது. இது போன்ற தவறுகள் எழுதுகின்ற மாணவர்களின் மன-நிலையில் உள்ள விரைவு காரணமான பரபரப்புணர்வினை வெளிப்படுத்துகின்றன. மொழியின் அமைப்பைச் சரியாகப் புரிந்து கொள்ளாததால் வந்த வழுக்கள் அல்ல இவை. இது போன்ற தவறுகள் பெரும்பாலும் மாணவர்களின் தேர்வுத்தாள்-களிலேயே காணப்படுகின்றன. இவை விரைவுகாரணமாகத் தோன்றும் தவறுகளே ஆயினும் பிழைகள் அல்ல. இவற்றை மாணவர்களின் மொழித்திறனில் உள்ள குறையாகக் கணக்கிட-வியலாது.

இந்த ஆய்வில் மாணவர்தம் பிழைகள் மட்டுமே ஆய்வுப் பொருளாகின்றன. பிழைகள் என்பவை மாணவர்களின் மொழித்-திறனில் காணலாகும் வழுக்களாகும் (Errors in Competence). சான்றாக ஒரு மாணவன் மொழியின் அமைப்பைச் சரியாகப் புரிந்துகொள்ளாமல் - அல்லது தவறாகப் புரிந்துகொண்டு - மொழியைப் பயன்படுத்தும்போது தோன்றும் பிழைகளே பிழை-களாகும்.

'சுவரில் அச்சுப் பதிக்கக்கூடாது' என்று எழுதவேண்டிய இடங்களில் எல்லாம் ஒரு மாணவன் 'சுவற்றில் அச்சுப் பதிக்-கக்கூடாது' என்றே எழுதுவானாயின் அது மொழிப்பிழை-யாகும். இங்குச் சுவர் என்பதுதான் அடிப்படைப் பெயர்ச்-சொல் என்பதையே புரிந்துகொள்ளாத நிலை காணப்படுகிறது. மாணவன் தவறாகப்-புரிந்துகொண்டு, வயிறு, கிணறு, ஆறு என்ற சொற்களைப் போலச் 'சுவறு' என்று அடிப்படைச்-சொல்லை அமைத்துக் கொண்டுள்ளமை பிழையாகும்.

மொழிப்பிழைகளை முதல்மொழி கற்றலில் உள்ள பிழை-கள் (Errors in first language learning). இரண்டாம் மொழி-கற்றலில் உள்ள பிழைகள் (Errors in second language learning) என இரு வகைகளில் அடக்கலாம். தமிழைத் தாய்மொழியாகக்

கொண்டவர்கள் தமிழ் கற்கும்போது ஏற்படும் பிழைகள் முதல் மொழிகற்றலில் உள்ள பிழைகளாகும். தமிழரல்லாதார் தத்தம் தாய்மொழியைக் கற்றுமுடித்தபின் தமிழைக் கற்பாராயின் அவர்கள் கற்கும்போது ஏற்படும் பிழைகள் இரண்டாம்மொழி கற்றலில் ஏற்படும் பிழைகளாகும். இவ்விருவகைப் பிழைகளுக்கும் அடிப்படையில் ஒரு வேறுபாடு உள்ளது. முதல் மொழி கற்றல் என்பது ஒருமொழியைப் பேசவும், புரிந்துகொள்ளவும் தெரிந்த ஒருவன் அம்மொழியை எழுதவும்,படிக்கவும் கற்பதாகும். இரண்டாவது மொழிகற்றல் என்பது முழுமையும் புதியதான ஒரு மொழியை அம்மொழி பேசும் மக்கள் வாழும் பின்புலத்தில் கற்றலாகும். சான்றாக அமெரிக்க மாணவர்கள் சிலர் மதுரைக்கு வந்து மதுரையில் தமிழ் கற்பதை இரண்டாம் மொழி கற்றல் எனலாம்.

முதல் மொழி கற்றலில் உள்ள பிழைகள் என்பவை பள்ளிக்குச் செல்லும் முன் வீட்டில் பெற்றோர், மற்றோர் வழியாகக் கற்ற பேச்சு மொழி அமைப்பைப் பள்ளிக்குச் சென்று -எழுதவும் படிக்கவும் கற்கும்போது-எழுத்துமொழியாக மாற்றும்போது ஏற்படும் பிழைகளே ஆகும். இரண்டாம் மொழிகற்றலில் ஏற்படும் பிழை என்பவை ஏற்கனவே ஒருவன் கற்றுள்ள முதல் மொழியின் அமைப்பின் குறுக்கீட்டால் (interference) ஏற்படும் பிழைகளாகும். முதல் மொழி கற்றலில் ஏற்படும் பிழைக்குச் சான்றாகத் தமிழ் மாணவர்கள் செயப்பாட்டு வினை வாக்கியத்தை எழுதும்போது ஏற்படும் பிழைகளைக் கூறலாம். ஏனெனில் பேச்சுவழக்கில் செயப்பாட்டு வினை வாக்கியங்களை அன்றாட வாழ்வில் தமிழர்கள் பயன்படுத்துவதில்லை. அவற்றைப் பள்ளியில்தான் முதன்முதலாகக் கற்கின்றனர். அப்போது அவை புதிய அமைப்பாகத் தோன்றுவதால் பிழைகள் தோன்றும் வாய்ப்பு அதிகமாகின்றது. தமிழை இரண்டாம் மொழியாகக் கற்கும் அமெரிக்கமாணவர்களின் மொழிப்பிழைகள் பலவற்றிற்கு அவர்களின் தாய்மொழியான ஆங்கிலமொழியின் அமைப்பின் குறுக்கீடு ஒரு காரணமாக இருப்பதைக் காணமுடிகிறது.

இக்கட்டுரையின் முற்பகுதியில் தமிழை முதல் மொழியாகக் கற்போரின் பிழைகளும் அவற்றைத் தவிர்த்தற் பொருட்டு இலக்கணம் கற்பித்தலில் கடைப்பிடிக்க வேண்டிய முறைகளும் விளக்கப்படுகின்றன. கட்டுரையின் பிற்பகுதியில் தமிழை

இரண்டாம் மொழியாகக் கற்போரின் பிழைகளும், அவற்றைத் தவிர்த்தற்பொருட்டு இலக்கணம் கற்பித்தலில் கடைப்பிடிப்பதற்குரிய முறைகளும் விளக்கப்படுகின்றன.

தமிழை முதல் மொழியாகக் கொண்ட மாணவர்களின் பிழைகளைப் பின்வருமாறு வகைப்படுத்திக் கொள்ளலாம்.

1. தொடர் நிலையில் காணப்பெறும் பிழைகள்
2. சொல் நிலையில் காணப்பெறும் பிழைகள்
3. எழுத்து நிலையில் காணப்பெறும் பிழைகள்
4. புணர்ச்சி நிலையில் காணப்பெறும் பிழைகள்

## தொடர் நிலையில் காணலாகும் பிழைகள்

முதல் மொழி கற்பவர்களிடம் காணப்பெறும் பிழைகளில் தொடர் நிலையில் காணலாகும் பிழைகளில் முதல் இடத்தைப் பெறுவது செயப்பாட்டு வினை வாக்கிய அமைப்பில் தோன்றும் பிழைகளே எனலாம். பிழைகள் பின்வருமாறு :

1. ''அக இலக்கியங்களில் இடம்பெறும் பாத்திரங்களாக தலைவன், தலைவி, நற்றாய், செவிலி, தோழி, கண்டோர் கூற்றாகப் பேசப்படுகிறது''.
2. இவற்றால் இலக்கிய வரலாற்றை அறியப்படுகிறது.
3. இதை மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் ஆரம்பிக்கப்பட்டது.
4. இப் பாடல்களை எட்டு நூல்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன.
5. தமிழைப் புலவர்களால் போற்றப்பட்டது.
6. நம் நாட்டில் 157 மொழிகளில் பேசப்படுகின்றன.
7. கடல் அறிவியல் செய்திகளை தமிழில் கொடுக்கப்பட்டுள்ளது.

மேலே உள்ள சான்றுகளில் இருவகையான பிழைகள் மலிந்து காணப்படுகின்றன. ஒன்று செயப்பாட்டு வினை வாக்கியத்தில் செயப்படுபொருள் வேற்றுமை உருபு ஆகிய 'ஐ'

உருபு எழுவாயுடன் இணைக்கப் பெற்றிருப்பது. மற்றொன்று எழுவாய் பயனிலை இயைபு மீறப்பட்டிருப்பது. இத்தகு பிழை-களுக்கு அடிப்படைக் காரணம் அன்றாட வாழ்வில் பேச்சு மொழியில் செயப்பாட்டு வினை வாக்கியங்கள் பயன்பாட்டில் இல்லாமையேயாகும். இதனால் - செயப்பாட்டு வினை வாக்-கியத்தின் அமைப்பு சரியாகக் கற்கப்படாமையால் - இத்தகைய பிழைகள் இடம்பெறுகின்றன. இத்தகைய பிழைகளைத் தவிர்க்க செயப்பாட்டு வினை வாக்கிய அமைப்பினை ஒரு சிறு அலகாகக் (Micro Unit) கொண்டு மாணவர்களுக்குக் கற்பிக்க வேண்டும்.

செயப்பாட்டு வினை வாக்கிய அமைப்பினைக் கற்பிக்கும் போது செய்வினை வாக்கியத்தில் உள்ள எழுவாய்வேறு, செயப்பாட்டுவினை வாக்கியத்தில் உள்ள எழுவாய் (செய்வினை வாக்கியத்தில் உள்ள செயப்படு பொருளே செயப்பாட்டு வினை வாக்கியத்தின் எழுவாயாகும்) வேறு என்று தெளிவாகப் புரிய-வைக்கவேண்டும். மேலும் செயப்பாட்டுவினை வாக்கியத்தில் செயப்படுபொருள் இல்லை என்பதைத் தெளிவாக உணர்த்தல் வேண்டும். இவ்வாறு கற்பிப்பதால் செயப்பாட்டு வினை வாக்-கியத்தைத் தவறின்றி எழுத மாணவர்கள் கற்றுக்கொள்கிறார்-கள். மாணவர்கள் எத்தகைய பிழைகள் செய்கிறார்கள் என்பதை பிழையாய்வில் கண்டு அத்தகைய பிழைகளை மாணவர்களுக்-குச் சுட்டிக்காட்டிக் கற்பித்தால் அத்தகைய பிழைகளை மாணவர் கள் தவிர்ப்பார்கள். மாணவர்கள் பிழைசெய்யும் வாய்ப்புள்ள இடங்களில் சற்றுக் கவனம் செலுத்தினால் இத்தகைய பிழை-களைக் களைந்துவிடலாம்.

தொடர்நிலையில் அமையும் மற்றும் ஒரு பிழை எழுவாய் பயனிலை இயைபு மீறலாகும். இது பெரும்பாலும் ஒருமை-பன்மை மயக்கமாகவே அமைகின்றது. இத்தகைய பிழையைப் பின்வரும் தொடர்களில் காணலாம்.

1. தெருவில் இரண்டு நாய்கள் சண்டையிட்டுக் கொண்-டிருந்தது.
2. அந்த மரங்கள் பார்வைக்குச் சிறியதாய் இருக்கும்.
3. கடல் மேற் செல்லும் மீனவர் தொழிலின் இன்னல்கள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

இதுபோன்ற தவறுகள் நிகழாதிருக்க எழுவாய்-பயனிலை இயைபு என்பதை ஓர் அலகாகக்கொண்டு ஒரு சில வகுப்புப்பாட நேரத்தை இந்த அலகினை நடத்துவதற்காகவே செலவிடலாம். இப்பகுதியில் எழுவாயின் பொருண்மைக் கூறுகள் (தன்மை, ஒருமை, முன்னிலை, ஒருமை, படர்க்கை, ஆண், பெண், பலர் பால் வேறுபாடுகள், தன்மைப்பன்மை, முன்னிலைப் பன்மை) மற்றும் பயனிலைச் சொல்லில் உள்ள விகுதியில் உணர்த்தப்படும் பொருண்மைக் கூறுகள் இவற்றைத் தெளிவாகக் கற்பித்தல்வேண்டும். பின்னர் இப்பகுதியில் பயிற்சிகள் நிறையக் கொடுக்கலாம். இத்தகைய கற்பித்தல் முறை தவறுகளைத் தவிர்க்கவும் பிழையின்றி எழுதவும் துணைபுரியும். இவ்விடத்தில் கிளவியாக்கத்தின் கண் உள்ள

> வினையிற் றோன்றும் பால்அறி கிளவியும்
> பெயரிற் தோன்றும் பால்அறி கிளவியும்
> மயங்கல் கூடா தம்மர பினவே
>
> (தொல். சொல். 11)

என்ற நூற்பாவின் கருத்தை மாணவர்களின் மனதிற்பதியும் வண்ணம் சான்றுகள் தந்து விளக்குதல் வேண்டும். இக்கருத்து மாணவர் தம் உளத்தில் பதியுமாயின் இத்தகைய தவறுகள் இடம்பெறா.

தொடர் நிலையில் ஏற்படும் பிழைகளில் மூன்றாம் இடத்தைப் பெறுவது உம் என்னும் இடைச் சொல்லைப் பயன்படுத்தும் முறையில் காணப்பெறும் பிழையாகும். இவ்வகைப் பிழையைப் பின்வரும் தொடர்களில் காணலாம்.

1. ஆறறிவு படைத்த மனிதனையும் விலங்குகளிடமிருந்து வேறுபடுத்திக்காட்டுவது மொழியேயாகும்.

2. தமிழில் உரையாசிரியர்கள் உரை எழுதத் தொடங்கிய காலம் கி.பி.பத்தாம் நூற்றாண்டுக்குப்பின் பதினைந்தாம் நூற்றாண்டுக்கு இடைப்பட்ட காலம் ஆகும்.

3. அவன் அந்தப் பலகையை இரண்டு கைகளால் பிடித்துக் கொண்டான்,

மேலே உள்ள தொடர்களில் உம் என்னும் இடைச்சொல் எங்ஙனம் தொடரில் இடம் பெறவேண்டும் என்ற விதியைச் சரியாகப் புரிந்து கொள்ளாமையினால் பிழைகள் ஏற்பட்டுள்ளன. முதல் தொடர் 'மனிதனையும் விலங்குகளையும்' என்றிருத்தல் வேண்டும். இத்தகைய தவறு நிகழாதிருக்க ஒரு இணைத்-தொடரில் (Co-ordinate Construction) உள்ள அனைத்துப் பெயர்களுடன் 'உம்' என்ற இடைச் சொல்லை இணைத்தல் வேண்டும் என்ற விதியைச் சரியாகக் கற்பித்தல் வேண்டும். இதற்கான பயிற்சிகள் அளித்தல் வேண்டும். இதுபோன்றே இரண்டாவது தொடரும் 'கி.பி.பத்தாம் நூற்றாண்டுக்கும் பதி-னைந்தாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்டகாலம்' என்றிருத்தல் வேண்டும்.

இது போன்றே 'உம்' என்னும் இடைச்சொல் முழுமைத்-தொகையைக் குறிக்கும் இடத்து இடம் பெறல் வேண்டும் என்ற செய்தியும் தனி அலகாகக்கொண்டு கற்பிக்கப்பட வேண்டும். இவ்விடத்து,

> ''இனைத்து என அறிந்த சினைமுதற் கிளவிக்கு
> வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்''
> (தொல். சொல். 33)

என்ற தொல்காப்பிய நூற்பாவின் கருத்தைத் தெளிவுற விளக்-குதல் வேண்டும். இவ்விளக்கத்துக்குப்பின் பல சான்றுகள் தந்து மாணவர்கள் புரிந்துகொண்டபின் இத்தகைய தொடர்களைக் கொடுத்து உம்மை சேர்க்கவேண்டிய இடத்தில் சேர்க்கும்படி பயிற்சி அளிக்கலாம். இத்தகைய கற்பித்தல் முறை மேற்கண்ட பிழைகளைத் தவிர்க்கத் துணை புரியும்.

தொடர்நிலையில் அமையும் பிழைகளில் அடுத்த இடத்-தைப் பெறுவது பேச்சு மொழிக்கூறுகள் எழுத்து மொழியில் இடம் பெறுவதால் நிகழும் பிழையாகும். இவற்றைப் பிழை என்று கூறுவது சரியா?என்பது மேலும் ஆய்தற்குரியது.எனினும் பேச்சுமொழி, எழுத்துமொழி இவை இரண்டு ஒரே மொழியின் இருவேறுபட்ட வழக்குகள் ஆகும். இவற்றைக் கலந்து பயன்-படுத்தல் என்பது ஒரு வகையிற் பார்த்தால் பிழையேயாகும். இருவேறு வழக்குகள் என்ற அறிவினைப் பேணாது செய்யும்

பிழையேயாகும். இதற்குச் சான்றாகச் சில பிழைகள் பின்வருமாறு :

1. அவரது உரை மரபுகள் நறுக்காய்ச் சுருக்காய் இருக்கும்.

2. திராவிட மொழிகள் பற்றிய ஆய்வானது கி.பி.19 ஆம் நூற்றாண்டில் தொடங்கியது எனக் கூறலாம்.

இங்குள்ள தொடர்களில் நறுக்காய்ச் சுருக்காய், ஆய்வானது போன்ற தொடர்கள் பேச்சுமொழிச் சாயல் பெற்றவை. இவை மாணவர்களின் விடைத்தாள்களில் இடம் பெற்று விடுகின்றன. இத்தகைய தவறுகள் இடம் பெறுதலைத் தவிர்க்க வேண்டுமானால் பேச்சுமொழிச் சொற்கள் எழுத்துமொழியினமைப்பிலிருந்து எவ்வாறு வேறுபடுகின்றன, இவ்விருவகை மொழிக்குமுள்ள வேறுபாடுகள் எவை என்பதனைத் தெளிவுபடுத்தி இவற்றின்பயன்பாட்டையும் விளக்குதல் வேண்டும். இதன்மூலம் மேற்குறித்த தவறுகளைக் களையலாம். பேச்சுமொழி வடிவங்களை எழுத்து மொழியாக மாற்றவும், எழுத்து மொழி வடிவங்களைப் பேச்சுமொழிவடிவங்களாக மாற்றவும் பயிற்சிகள் அளிக்கலாம்.

## சொல் நிலையில் காணப்பெறும் பிழைகள்

முதல் மொழி கற்றலில் சொற்களைத் தவறாகப் பயன்படுத்துவதால் ஏற்படும் பிழைகள் பலவற்றைக் காணமுடிகிறது. இங்கு வேற்றுமை உருபுகளைத் தவறாகப் பயன்படுத்துவதாலும் பிழைகள் தோன்றுகின்றன. சில சொற்களின் வடிவத்தை மாற்றி எழுதுவதும் பிழையாகும்; சில சொற்களைப் பொருள் புரிந்து கொள்ளாமல் தவறாகப் பயன்படுத்தும் நிலையைக் காணமுடிகிறது.

அது, இது என்பவை அஃறிணை ஒருமை வடிவங்களாகும். அவை, இவை என்பவை அஃறிணைப் பன்மை வடிவங்களாகும் இன்று மாணவர்கள் பலர் இப்பன்மை அஃறிணைச் சுட்டு வடிவங்களைத் தவறாக அவைகள், இவைகள் என்றே எழுதுகின்றனர். சான்றாகச் சில தொடர்களைக் காணலாம்.

1. இவைகளை எல்லாம் புறக்கணித்து விட்டு மீண்டும் சங்கத் தமிழைத் தற்காலத் தமிழாகப் புதுப்பிக்க முடி-யுமா?

2. அவைகள் சாரியை ஏற்பதில்லை.

இத்தகைய வழுக்கள் இன்றைய மொழியியலாரால் வழு வமைதியாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன (சண்முகம், செ.வை. 1993). இவ்விடத்தும் மாணவர்கள் அவை, இவை என்பதைப் பன்மை வடிவங்கள் என்பதை உணரச் செய்தல் வேண்டும்.

முதல் மொழிகற்கும் போது ஏற்படும் பிழைகளில் வேற்-றுமை உருபைத் தவறாகப் பயன்படுத்துதல் மிகவும் குறைவே. எனினும் ஒரு சில பிழைகள் காணப்படுகின்றன. சான்றாகப் பின்வரும் பிழையைக் கூறலாம்.

1. மொழியும் இலக்கணமும் திறம்பட கற்பிக்கப்பட வேண்டுமானால் இந்தத்திறன்களை மொழிகற்பிப்-பவர்களில் உருவாக்கவேண்டும்.

இங்குக் கற்பிப்பவர்களிடம் என்று அமைவதே சரியான பயன்பாடகும்.

'அல்' என்னும் எதிர்மறையடியிலிருந்து உருவாக்கப்பட்ட 'அல்லர்' என்ற சொல்லைப் பயன்படுத்துவதில் பிழை ஏற்-பட்டிருப்பதைப் பின்வரும் சான்று விளக்கும்.

1. சேனாவரையர் தொல்காப்பியம் முழுமைக்கும் உரை-கண்டிலர் அல்லர்.

இத்தொடரில் இறுதியில் உள்ள 'அல்லர்' என்ற சொல் வாக்கியத்தினால் கூறவந்த பொருளுக்கு நேர் எதிர்மறைப் பொருளை உணர்த்தியுள்ளது. இதுபோன்ற தவறுகள் இடம் பெறாமலிருக்க 'அல்' என்ற எதிர்மறை வடிவத்தின் பொரு-ளையும், இதனைப் பயன்படுத்தும் முறையையும் தெளிவாக மாணவர்களுக்கு உணர்த்துதல் வேண்டும். அல், அல்ல, அல்லது, அல்லர் என்ற வடிவங்களைப் பயன்படுத்தும் வகையில் பயிற்சி கள் பல அளித்தல் வேண்டும். இப்பயிற்சிகள் மேற்கூறியுள்ளது போன்ற தவறுகளைத் தவிர்க்கத் துணைபுரியும்.

சில சொற்களின் பொருண்மை புரியாத நிலையிலும் சில பிழைகள் இடம் பெறுகின்றன. சான்றாகப் பின்வரும் பிழையைக் கூறலாம்.

1. நச்சினார்க்கினியர் சைவப்புலவராக இருந்தாலும் சமயப் பொறை இல்லாதவராகத் திகழ்ந்தார்.

இத்தொடரில் பொறை என்ற சொல்லின் பொருளைப் புரிந்து கொள்ளாமல் பொறாமை என்ற பொருளில் புரிந்து கொண்டு தவறாகப் பயன்படுத்தியுள்ளமையே பிழைக்குக்காரண மாகின்றது. இதுபோன்ற அருகிய வழக்கில் உள்ள பழந்தமிழ் சொற்களைப் பயன்படுத்தும் பயிற்சிகள் மூலம் இத்தகைய தவறுகளைக் களையலாம். சொற்களின் பொருண்மை வரையறையும் அவற்றின் பயன்பாடும் இணைத்தே கற்பிக்கப்படல் வேண்டும்.

சில சொற்களின் வடிவங்களைச் சரியாகப் புரிந்துகொள்ளாமல் எழுதுவதாலும் பிழைகள் தோன்றுகின்றன. இவை சொல் நிலையில் நிகழும் எழுத்துப்பிழைகள் என்ற வகையில் அடங்கும். இதற்குச் சான்றாகப் பின்வரும் பிழையைக் கூறலாம்.

1. உரைகள் எழுதப்படவில்லையெனில் இன்று தமிழ் மொழி இலக்கியங்கள் பட்டில், தொட்டில் மற்றும் பாமர மக்கள் பயிலும்வண்ணம் பரவியிருக்காது.

இங்குப் பட்டில், தொட்டில் என்றசொற்கள் பிழையாக எழுதப்பட்டுள்ளன. இதற்குத் தொட்டில் என்ற பிறிதொரு தமிழ்ச் சொல் காரணமாகிறது. தொட்டி என்ற சொல் தொட்டில் என்ற சொல்லுடன் ஒப்பவைத்து எண்ணப்பட்டு ஒப்புமையாக்கத்தால் தொட்டி, பட்டி என்ற சொற்கள் பட்டில், தொட்டில் என்று பிழையாக எழுதப்பட்டன. இத்தகைய தவறுகள் நிகழாமலிருக்க சொற்களின் எழுத்துக்களைச் சரியாக எழுதிக் கற்பித்தலே சிறந்த வழியாகும். சொற்களின் வடிவத்தையும் பொருளையும் இணைத்துக் கற்பித்தல் வேண்டும். இதற்குக் கீழ்வகுப்புக்களில் அதிகப்பயிற்சிகளைக் கொடுத்தல் வேண்டும்.

### எழுத்து நிலையில் தோன்றும் பிழைகள்

முதல் மொழி கற்றலில் இடம் பெறும் பிழைகளில் தமிழுக்கே உரிய பிழைகள் ஏறத்தாழ ஒரே மாதிரி ஒலிப்பு

முறையுடைய, மிக நுண்ணிய ஒலிப்பு வேறுபாடுடைய எழுத்துக்களைப் பயன்படுத்துவதில் தோன்றும் பிழைகளாகும்.

எழுத்துப் பிழைகள் மாணவர்களின் தேர்வுத்தாள்கள், கட்டுரைகள், ஆய்வறிக்கைகள் எங்கும் நீக்கமற நிறைந்து காணப்படுகின்றன. சான்றாகச் சில பிழைகளைக் காணலாம்.

1. இவர் சிவன் திருமாள் பற்றியும் கூறுகிறார்.
2. புலியால் கொள்ளப்பட்ட யானை என்றும் கூறலாம்
3. அவை மிகவும் சிறப்புடன் விழங்கின.
4. சொற்களை எவ்வாறு ஆழவேண்டும் என்பதையும் விளக்குகிறார்.
5. இராமாயணம். மகாபாரதம் போன்ற இதிகாசங்களிலிருந்து பல மேற்கோலைப் பரிமேலழகர் காட்டுகிறார்.
6. களுதை கெட்டால் குட்டிச்சுவர்.

முதலிரண்டு சான்றுகளில் லகரத்துக்குப் பதிலாக ளகரத்தைப் பயன்படுத்தியதால் பிழைகள் தோன்றியுள்ளன. அடுத்த இரண்டு சான்றுகளில் ளகரத்துக்குப் பதிலாக ழகரம் பயன்படுத்தியதால் பிழைகள் தோன்றியுள்ளன. இறுதி இரண்டு சான்றுகளில் முறையே ளகரத்துக்குப் பதிலாக லகரமும், ழகரத்துக்குப் பதிலாக ளகரமும் பயன்படுத்தியதால் பிழைகள் தோன்றியுள்ளன.

இதுபோன்றே னகர, ணகர, நகர வேறுபாடு உணராமல் எழுதும் பிழைகளும் முதல் மொழி கற்றலில் காணப்படுகின்றன. சான்றாகச் சில பின்வருமாறு.

1. விணையெச்சம் விணையைக் கொண்டு முடியும்
2. மெய்ப்பாடு என்பது மெய்யின்கன் தோன்றும் நிகழ்ச்சியாகும்.
3. முன்னூறு ரூபாய் பெறுமான புத்தகங்களை இலவசமாகக் கொடுக்கிறார்கள்.

மேலே உள்ள சான்றுகளில் முதல் சான்றில் னகரத்துக்குப் பதிலாக ணகரம் பயன்படுத்தியமை பிழையாகும் இரண்-

டாம் சான்றில் ணகரத்துக்குப் பதிலாக னகரம் பயன்படுத்தியமை பிழையாகும். மூன்றாவது சான்றில் நகரத்துக்குப் பதிலாக னகரம் பயன்படுத்தியமை பிழையாகும்.

இதுபோன்றே ரகர றகர வேறுபாடு உணராமல் எழுதுவதால் பிழைகள் தோன்றுகின்றன. சில பிழைகளை இதற்குச் சான்றாகக் கூறலாம்.

1. செறும் புலவர்கள் பாடியது சங்க இலக்கியமாகும்.

2. பரிமேலழகர் உறையே திருக்குறளுக்குச் சிறந்தது என்பர்.

3. பறவை என்ற சொல்லுக்கு கடல் என்பது பொருள்.

4. வரியவர்கள் பிறரிடம் இரந்து வாழ்கிறார்கள்.

5. வரண்ட பாலைவனத்தில் குடிக்க நீர் கிடைக்காது.

மேலே உள்ள முதல் மூன்று சான்றுகளில் ரகரத்துக்குப் பதிலாக றகரம் பயன்படுத்தியதனால் பிழை ஏற்பட்டுள்ளது. இறுதியிரண்டு தொடர்களில் றகரத்துக்குப்பதிலாக ரகரம் பயன்படுத்தியதனால் பிழை ஏற்பட்டுள்ளது.

இதுகாறும் கூறிய மூன்று வகையான எழுத்துப்பிழைகளுக்கும் இன்றைய தமிழில் பேச்சுவழக்கில் இவ்வின ஒலிகளுக்கிடையேயான ஒலிப்பு முறை வேறுபாடு குறைந்து போனதே ஒரு காரணமாகும். சூழலை வைத்தே பொருள் புரிந்து கொள்கின்ற நிலைதான் இன்றைய பேச்சு மொழியில் காணப்படுவதால் இப்பிழைகள் பெருகிவருகின்றன. இவற்றைத் தவிர்க்கக் கீழ்வகுப்புக்களில் எழுத்துக்களை அறிமுகப்படுத்தும்போதே சரியாக உச்சரிக்கவும் பயிற்சி அளிக்கவேண்டும். வாய்மொழிப் பயிற்சிக்கு அதிக நேரம் ஒதுக்குதல் வேண்டும். சொல்வதை எழுதும் பயிற்சி (Dictation) யும் இதற்குப் பெரிதும் துணைபுரியும். இவ்வின ஒலிகள் இடம் பெறும் குறையொலியிணைகளை (minimal pair) நிறையக் கொடுத்துப் பொருள் வேறுபாடு உணர்த்தும் வகையில் ஒரே வாக்கியத்தில் அமைத்து எழுதும் பயிற்சிகள் கொடுத்தல் வேண்டும்.

சான்றாகச் சில பயிற்சிகள்

1. மலை, மழை இவற்றைப் பொருள் வேறுபாடுணர்த்தும் வகையில் ஒரே வாக்கியத்தில் அமைத்து எழுதுக.

விடை : மலையில் மழைபெய்ததால் குளிர்கின்றது

2. மரு, மறு இவற்றைப் பொருள் வேறுபாடுணர்த்து வகையில் ஒரே வாக்கியத்தில் அமைத்து எழுதுக.

விடை : மாசு மருவற்ற வாழ்க்கை மறுபிறவியிலும் நன்மை பயக்கும்.

3. என், எண் இவற்றைப் பொருள் வேறுபாடுணர்த்தும் வகையில் ஒரே வாக்கியத்தில் அமைத்து எழுதுக.

விடை : என் வீட்டின் கதவு எண் ஏழு

தமிழை முதல் மொழியாகக் கற்பவர்களின் மற்றொரு பிழை மெய்ம்மயக்கத்தினை எழுதும்போது நிகழும் பிழையாகும். இதற்குரிய சான்றுகள் பின்வருமாறு.

1. இவரது பன்னூற்ப்புலமை வெளிப்படுகிறது.

2. முயற்ச்சி திருவினையாக்கும்.

இது போன்ற பிழைகள் மொழியில் எவ்வெவ்விடத்து ஈரொற்றுக்கள் இடம் பெறலாம் என்ற ஒலியககட்டமைப்பைச் சரியாகப் புரிந்து கொள்ளாததால் தோன்றியவையாகும். இத்தகைய தவறுகளைக் களைய வேண்டுமாயின் தமிழில் எவ்விடங்களில் ஈரொற்று மெய்ம்மயக்கம் இடம் பெறும் என்ற இலக்கணவிதியைத் தனி ஓர் அலகாகக் கொண்டு கற்பித்தல் வேண்டும். தொல்காப்பியத்தில் உள்ள,

'யரழ என்னும் மூன்றுமுன் ஒற்றக்
கசதப ஙஞநம ஈரொற் றாகும்'
(தொல். எழுத் - 48)

என்ற நூற்பாவை விளக்கி, ய, ர, ழ ஆகிய மூன்று மெய் ஒலிகளை அடுத்தே க, ச, த, ப, ங, ஞ, ந, ம ஆகிய மெய் ஒலிகள் இரண்டு ஒற்றுக்களாய் வரலாம் என்ற இலக்கணவிதி-

யைச் சரியாகப் பின்பற்றச் செய்தல் வேண்டும். போதுமான சான்றுகள் தந்து விளக்கவேண்டும். இதற்குரிய பயிற்சிகளை சரியா? தவறா? என்ற முறையில் கொடுக்கலாம். தமிழில் மொழியின் ஒலியக்கட்டமைப்பில் எத்தகைய மெய்யொலிகள் எத்தகைய மெய்யொலிகளை அடுத்து இடம் பெறலாம் என்று வரையறுக்கப்பட்டுள்ளது. இவ்வரையறைகள் சரியாகக் கற்பிக்கப்படுமானால் ஒலியக்கட்டமைப்பின்கண் நிகழும் பிழைகள் தவிர்க்கப்படலாம். விதிகளைக்கற்பிப்பதுடன் அத்தகைய விதிகளைப்பயன்படுத்தும் வகையில் பயிற்சிகளும் கொடுத்தால் மாணவர்கள் இத்தகைய பிழைகளைச் செய்யமாட்டார்கள்.

## புணர்ச்சி நிலையில் காணப்படும் பிழைகள்

தமிழை முதல் மொழியாகக் கற்பித்தலில் தோன்றும் பிழைகளில் பெருமிடம் பெறுவது ஒற்றுப்பிழைகளேயாகும். ஒற்றுமிகுதல் பற்றிய விதிகள் உயர்நிலைப்பள்ளி வகுப்புகளிலிருந்தே கற்பிக்கப்படுகின்றன.இன்னும் கூறப்போனால் தொடக்கப்பள்ளி வகுப்புக்களிலிருந்தே சேர்த்து எழுதுக, பிரித்து எழுதுக என்று மறைமுகமாக ஒற்றுமிகும் இடம், ஒற்றுமிகா இடம் பற்றிய செய்திகள் கற்பிக்கப்படுகின்றன. இருந்தும் கல்லூரியில் பட்ட வகுப்பில் பயிலும் மாணவர்களின் தேர்வுத்தாள்களிலும், பட்ட மேற்படிப்பு மாணவர்களின் தேர்வுத்தாள்களிலும், பட்ட மேற்படிப்பு முடித்த ஆய்வு மாணவர்களின் ஆய்வு அறிக்கைகளிலும் கூட இத்தகைய பிழைகள் மலிந்து காணப்படுகின்றன. சான்றாகப் பின்வரும் பிழையைக் கூறலாம்.

> உரை யாசிரியர்களின் மதிப்பீட்டு முறைகள் பல
> திறப்பட்டன என்பதை சான்றுகளுடன் விளக்குதல்

என்ற தொடரில் என்பதை என்ற சொல்லுக்கும், சான்றுகளுடன் என்ற சொல்லுக்கும் இடையில் 'ச'கர ஒற்று மிகுதல் வேண்டும். இந்தத் தொடரை எழுதிய மாணவர் இத்தொடரை 'உரையாசிரியர்களின் மதிப்பீட்டு முறைகள் பலதிறப்பட்டன என்பதைச் சான்றுகளுடன் விளக்குக' என்றமைந்த வினாத்தாளைப் பார்த்துத்தான் எழுதினார் என்பது குறிப்பிடத்தக்கது.

இச்சான்று ஒற்றுமிகுதல் என்னும் கருத்து மாணவர்களின் மனத்தில் சிறிதும் பதியவில்லை என்பதையே காட்டுகிறது.

இது போன்ற பிழைகள் மாணவர்களின் விடைத்தாள்களிலும், பயிற்சிக் கட்டுரைகளிலும் மிகுதியாகக் காணப்பெறுகின்றன. ஒற்றுமிக வேண்டிய இடத்தில் ஒற்று இடாது எழுதுவது எவ்வாறு பிழையோ அதுபோலவே ஒற்று மிகக் கூடாத இடங்களில் ஒற்று இட்டு எழுதுவதும் - மாணவர்தம் எழுத்துக்களில் காணலாகும் – ஒரு பிழையேயாகும். சான்றாக ஒன்றனைக் காணலாகும்.

உரையாசிரியர்களுள் முற்றிலும் வித்தியாசமான நடையுடன்
உரைச் செய்தவர் பெரியவாச்சான்பிள்ளை

உரை என்ற சொல்லுக்கும் செய்தவர் என்ற சொல்லுக்கும் இடையில் இத்தொடரில் ஒற்றுமிகுதல் கூடாது. இவ்வாறு ஒற்றுப்பிழைகள் தமிழை முதல் மொழியாகக் கற்கும் மாணவர்களிடமும் மிகுதியாகக் காணப்படுகின்றன. இதற்கான காரணத்தை அறிய முற்பட்டால் மரபு இலக்கண நூல்கள் இதற்குரிய விதிகளைப் பல்வேறு இடங்களில் பரவலாகக் கொடுத்திருப்பது ஒரு காரணமாகத் தோன்றுகின்றது. இதனால் மாணவர்கள் இவ்விதிகளைத் தெளிவாகப் புரிந்துகொள்ள இயலவில்லை. இவ்வொற்று மிகுதல் குறித்த விதியைவிடப் புறனடைகள் - அல்லது விதி விலக்குகளே எண்ணிக்கையில் அதிகமாய் இருப்பதும் மாணவர்களின் குழப்பத்துக்கு ஒரு காரணமாகும்.

இரு சொற்கள் புணரும்போது நிலை மொழி ஈற்றில் உயிர் ஒலி வந்து, வரு மொழியின் முதலில் க, ச, த, ப இவற்றில் ஏதேனும் ஒரு மெய்யொலி வருமாயின் அவ்வல்லொலி மிகும் என்பதே பொது விதியாகும். இந்தப் பொது விதி ஒன்று தான். ஆனால் இப்பொதுவிதிக்கு விலக்காக, புறனடையாகப் பல விதிகள் கூறப்பட்டுள்ளன. இவ்விதிவிலக்குகள் யாவும் ஒரேயிடத்தில் கூறப்படவில்லை என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது. கற்பிக்கும் ஆசிரியரும் இச்சிக்கலை மனதிற்கொண்டு கற்பித்தல் வேண்டும். இத்தகைய பிழைகள் களையப்பட வேண்டுமாயின் கற்பிக்கும் ஆசிரியர்கள் பொது விதியை ஓர் அலகாகவும், விதிவிலக்குகளை ஓர் அலகாகவும் கொண்டு தொடர்ந்த இரண்டு மூன்று வகுப்புக்களில் கற்பிக்கவேண்டும்.

ஒவ்வொரு நிலையிலும் நடைமுறையில் உள்ள தொடர்களைச் சான்றாகக் காட்டி அதனை மாணவர்கள் புரிந்து கொண்டுள்ள-மையை உறுதி செய்யப் போதுமான பயிற்சிகளைக் கொடுத்தல் வேண்டும். மேலும் ஒரே மாதிரியான தொகைச் சொல்லில் ஒரே சூழ்நிலையில் ஒன்றில் ஒற்று மிகுவதும், பிறிதொன்றில் ஒற்று மிகாமலும் வழங்குதல் இன்றைய தமிழில் காணப்படும் ஒரு கூறாகும் (பரமசிவம், கு. 1983 : 80). மாறிவரும் தமிழ்ச் சமூகத்தில் பல புதிய கலைச்சொற்கள் தமிழில் உருவாகி-வருகின்றன. அவ்வாறு உருவாகி வரும் கலைச் சொற்களில் இவ்வொற்று மிகுதல் குறித்த ஐயம் தோன்றுகின்றது.

(எடு) தொலை பேசி
தொலைக்காட்சி

இங்குக் குறிப்பிட்டுள்ள இரு சான்றுகளிலும் நிலைமொழி தொலை என்பதேயாகும். இவை ஐ என்ற உயிர் ஈறுகொண்டு முடிகின்றன. இவ்விரு தொகைகளிலும் வருமொழி வல்லின மெய்யாகவே உள்ளன. இருப்பினும் முதற் சான்றில் ஒற்று மிகவில்லை. இரண்டாவது சான்றில் ஒற்று மிகுந்துள்ளது. இவ்-விரண்டு சொற்றொகைகளையும் தமிழுலகம் ஏற்றுக்கொண்டுள்ளது. இதுபோன்ற இடங்களில் பிழை எது ? சரிஎது? என்று கூறமுடியாது போகின்றமையால் பிழையாய்வு செயலிழந்து விடுமோ என்ற ஐயமும் தோன்றுகின்றது. இந்நிலை இப்புதிய கலைச் சொற்களில் மட்டுமில்லை. பழைய சொற்றொகைகள் சிலவற்றிலும் இந்நிலைகாணப் பெறுகின்றது.

தமிழை இரண்டாம் மொழியாகக் கற்கும் மாணவர்களிடம் காணப்படும் பிழைகளுக்கு அவர்களின் முதல் மொழியமைப்பின் குறுக்கீடு ஒரு காரணமாக அமைகின்றது. சான்றாகச் சில பிழைகளைக் காணலாம்.

- நான் சைக்கிளால் வந்தேன்
- அவர் காரால் வந்தார்

இத்தகைய தவறான வாக்கியங்கள் இரண்டாம் மொழி-யாக தமிழைக் கற்பவரிடம் மட்டுமே காணப்படும் ஒரு பிழை-யாகும்.

தமிழில் இயக்கம் குறிக்கும் வினைகள் இடப்பொருள் வேற்றுமை உருபைப் பெற்று விளங்குகின்றன. இந்த விதியின் படி மேலே உள்ள பிழையான வாக்கியங்கள் முறையே

நான் **சைக்கிளில்** வந்தேன்
அவர் **காரில்** வந்தார் என்றும் இருத்தல் வேண்டும்.

ஆனால் இடப்பொருள் வேற்றுமை உருபாகிய - இல்— என்பதற்குப் பதிலாக-ஆல் என்ற கருவிப் பொருள் வேற்றுமை உருபு பயன்படுத்தப்பட்டுள்ளதற்குக் காரணம் அம்மாணவர்-களின் முதல் மொழியான ஆங்கிலத்தில் இச்சூழலில் by என்ற உருபு (கருவிப்பொருள்) பயன்படுத்துவதே காரணமாகிறது. ஏனைய இடங்களில் by என்பதைத் தமிழில் - ஆல் என்று மொழி பெயர்ப்பதால் இச்சூழலிலும் - ஆல் என்றே எழுதிவிட்டனர். இத்தகைய தவறு களையப்படுதல் வேண்டுமெனில் முரண்மொழி யியல் (Contrastive Linguistics) ஆய்வு அடிப்படையில் இரு மொழிகளும் வேறுபடும் இடங்களில்தான் மாணவர்கள் பிழை-பட எழுதவாய்ப்புள்ளது என்பதை மனத்திற்கொண்டு அத்-தகைய இடங்களில் கவனம் செலுத்தி அவ்வேறுபாடு ஒவ்-வொன்றையும் ஓர் அலகாகக் கொண்டு கற்பித்தல்வேண்டும். பயிற்சிகள் கொடுத்தல் வேண்டும்.

இதுபோன்றே என், எங்கள் என்ற பதிலிப் பெயர்கள் (Pronouns) உடைமைப் பொருளில் பயன்படும் இடங்களிலும் பிழைகள் தோன்றுகின்றன. இத்தகைய பிழைகளுக்கும் அவர்-களின் முதல்மொழியமைப்பே காரணமாகின்றது. சான்றாகச் சில பிழைகளைக் கூறலாம்.

- என் அப்பா சொன்னார்கள்
- என் அம்மா வந்தார்கள்
- என் பள்ளிக்கூடம் தெற்குவாசலில் உள்ளது.
- என் ஊர் மதுரை
- என் வீடு மதுரையில் உள்ளது.

மேலே உள்ள தொடர்களில் எல்லாம் என் என்ற ஒருமை வடிவமே பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆனால் அவையாவும் தமிழ் மொழியமைப்பில் பிழையானவையாகும். அவைமுறையே

எங்கள் அப்பா சொன்னார்கள்
எங்கள் அம்மா வந்தார்கள்
எங்கள் பள்ளிக் கூடம் தெற்குவாசலில் உள்ளது
எங்கள் ஊர் மதுரை
எங்கள் வீடு மதுரையில் உள்ளது.

என்றே அமைதல் வேண்டும். ஆனால் ஆங்கிலத்தில் எல்லா இடத்திலும் 'my' என்ற ஒருமை (உடைமைப்பொருள்) வடிவமே பயன்படுவதுதான் இப்பிழைகளுக்குக் காரணம் ஆகும். அவர்கள் my pen, my book என்று எழுதுவதுபோலவே my father, my mother என்று எழுதுவார்கள். அங்கு மரியாதை குறித்த பன்மை வடிவம் இல்லை. இந்த வேறுபாடு சரியாகக் கற்பிக்கப்படுதல் வேண்டும். இளையோராய் இருந்தால் 'என்' என்ற வடிவமும் மூத்தவ-ராய் இருந்தால் எங்கள் என்ற வடிவமும் பயன்படுத்த வேண்டும் என்பது தெளிவாகப் புரியும் வண்ணம் கற்பிக்கப்படுதல் வேண்-டும்.

(எடு) என்தம்பி என்தங்கை
எங்கள் அண்ணன் எங்கள் அக்கா.

தமிழில் உள்ள வினைச் சொற்கள் பல்வேறுபட்ட இறந்தகால உருபுகளை ஏற்பனவாய் அமைந்துள்ளன. வல்வினை (Strong verb) மெல்வினை (weak verb) என்ற பாகுபாடு தமிழில் உண்டு. இதனைச் சரியாகப் புரிந்துகொள்ளாத பிறமொழியாளர்கள் தம் தாய் மொழியில் உள்ளதுபோல ஒரே வகையான வினைமுற்-றுக்களை உருவாக்குகின்றனர். இதனால் பிழை ஏற்படுகின்றது.

எடு.

* நான் கீழே விழுதேன்
* நான் பாடுத்தேன்
* அவன் கொடினான்

இங்குள்ள பிழைகள் யாவும் தமிழில் உள்ள பிற வினை-முற்று வடிவங்களைப்போல ஒப்புமையாக்கத்தால் உருவாக்கி-யதால் தோன்றியனவேயாம்.

நான் கீழே விழுந்தேன் என்று இருக்கவேண்டியது அழுதேன் என்ற வினைமுற்றினைப்போல ஒப்புமையாக்கத்தால் உருவாக்கப்பட்டது.

நான் பாடினேன் என்று இருக்கவேண்டியது படித்தேன் என்ற வினைமுற்றினைப்போல ஒப்புமையாக்கத்தால் உருவாக்கப்பட்டது.

அவன் கொடுத்தான் என்று இருக்கவேண்டியது பாடினேன் என்ற வினைமுற்றினைப்போல் ஒப்புமையாக்கத்தால் உருவாக்கப்பட்டது.

இத்தகைய பிழைகள் நிகழாமல் இருக்க வேண்டுமாயின் தமிழ் வினைகள் வினைமுற்றாக உருவாகும்போது ஏற்படும் வினைத்திரிபு விளக்கத்தினைச் சரியாக விளக்குதல் வேண்டும். தேவையான அளவுக்குப் பயிற்சிகள் கொடுத்தல் வேண்டும். இம் முறையில் வினைச் சொற்கள் வினைமுற்றாக உருவாகும் முறை கற்பிக்கப்படுமானால் இத்தகைய பிழைகள் தவிர்க்கப்படலாம்.

இதே போன்று ஒரு வாக்கியத்தின் கண் அமையும் சொற்களின்வைப்புமுறை மாற்றத்தாலும் பிழைகள்நிகழ்வதுண்டு. இத்தகைய பிழைகளுக்குத் தங்களின் முதல் மொழியின் குறுக்கீடே காரணமாகின்றது. சான்றாகச் சில பிழைகளைக் கூறலாம்.

- இந்தியாவில் விட நகரங்கள் கிராமங்கள் அதிகம்.
- நான் இன்றைக்குக் காலையில் மட்டும் இட்லி சாப்பிட்டேன்.

இங்குக் குறிப்பிட்ட பிழைகள் தமிழில், வாக்கியத்தில் உள்ள சொற்களின் வைப்பு முறை பற்றிய தெளிவின்மையால், தம் முதல் மொழியில் உள்ள வைப்பு முறையைப் பின்பற்றியதால் வந்த பிழையாகும்.

இவை முறையே இந்தியாவில் நகரங்களைவிடக் கிராமங்கள் அதிகம் என்றும் நான் இன்றைக்குக் காலையில் இட்லி மட்டும் சாப்பிட்டேன் என்றுமிருக்க வேண்டும். இத்தகையபிழைகளைத் தவிர்க்கவேண்டுமாயின் தமிழ் வாக்கியங்களில் சொற்களின் வைப்புமுறையைச் சான்றுகளுடன் விளக்கவேண்டும். அவ்வாறு விளக்கும்போது கட்டுருபுகள் (bound forms) தனியுருபுகளின் பின்னொட்டுக்களாகவே (suffix) இணைதல் வேண்-

டும் என்பதைத் தெளிவாக உணர்த்துதல் வேண்டும். இதற்குச் சான்றுகள் தந்து விளக்குவதுடன் மாணவர்களுக்குப் போதுமான பயிற்சிகள் கொடுப்பதன் மூலம் இத்தகைய பிழைகள் வராமல் தவிர்க்கலாம். தேவையாயின் அவர்களின் முதல் மொழியின்கண் உள்ள சொற்களின் வைப்பு முறையையும் தமிழின்கண் உள்ள சொற்களின் வைப்பு முறையையும் ஒப்பிட்டு ஒற்றுமை வேற்றுமைகளை மாணவர்தம் உள்ளங்கொள்ளுமாறு விளக்கிக்காட்டலாம். பின்னர் அவர்களின் முதல் மொழியில் பல வாக்கியங்களைக் கொடுத்துத் தமிழில் மொழிபெயர்க்கும் பயிற்சி கொடுக்கலாம். இது போன்ற பயிற்சிகள் பிழையின்றி எழுதும் திறனை வளர்க்க உதவும்.

தமிழில் மிகச்சிறு வேறுபாடுடைய பொருள் கொண்ட - அல்லது ஏறத்தாழ ஒரே பொருள் கொண்ட சொற்கள் பல உள்ளன. அவற்றில் எந்தச் சொல்லைத் தேர்ந்தெடுப்பது என்ற குழப்பத்தில் நிகழும் பிழை இரண்டாம் மொழி கற்பித்தலில் காணப்படும் ஒரு பிழையாகும். சான்றாகச் சிலவற்றைக் கூறலாம்.

- கூட்டம் புறப்பட்டது.
- நான் முகத்தைத் துவைத்தேன்.
- அவருடைய தலை ஒடிந்தது.

இங்குக் காணப்படும் பிழைகளில் முதல்பிழை புறப்படு, தொடங்கு என்ற இரண்டு சொற்களிலும், பகுதிப் பொருண்மைக் கூறு, ஒன்றாய் இருப்பதால் தவறான சொல் தேர்வால் வந்த பிழையாகும்.

இரண்டாவது வாக்கியத்தில் உள்ள 'துவை' என்ற சொல்லும் அங்கு இருக்கவேண்டிய 'கழுவு' என்ற சொல்லும் ஆங்கிலத்தில் 'wash' என்று பொருள் கொள்ளப்படுவதால் நிகழ்ந்த பிழையாகும்.

மூன்றாவது வாக்கியத்தில் உள்ள 'ஒடிந்தது' என்ற சொல்லும் அங்கு இருக்கவேண்டிய சொல்லான 'உடைந்தது' என்ற சொல்லும் ஆங்கிலத்தில் 'break' என்றே பொருள் கொள்ளப்படுவதால் நிகழ்ந்த பிழையாகும். இத்தகைய சொற்களின்

பொருள் விளக்கம் கூறும்போதே அவற்றின் பயன்பாட்டையும் இரு சொற்களின் பொருண்மை வீச்சு வெளிப்படும் வகையில் இரண்டு வேறுபட்ட வாக்கியங்களில் அமைத்துக் காட்டி விளக்குதல் வேண்டும். சான்றாகச் சிலவற்றைக் காணலாம்.

துவை, கழுவு:

நான் துணிகளைத் துவைத்தேன்
நான் முகம் கழுவுகிறேன்.

இங்கு இவ்வினைச் சொற்கள் எத்தகைய செயப்படு-பொருளை ஏற்கும் தன்மையன என்பது குறித்துப் பின்வருமாறு பட்டியலிட்டுக் காட்டி விளக்குதல் வேண்டும்.

| துவை | கழுவு |
|---|---|
| [ துணிகள் ] | [ உடல் உறுப்புகள்<br>பாத்திரங்கள் ] |

புறப்படு, தொடங்கு :

நான் மதுரைக்குப் புறப்பட்டேன்
அந்தக் கூட்டம் நான்கு மணிக்குத் தொடங்கியது.

இங்கும் இவ்வினைச் சொற்கள் எத்தகைய செயப்படு-பொருளை ஏற்கும் தன்மையன என்பது குறித்துப்பின்வரு-மாறு பட்டியலிட்டுக் காட்டுவதன் மூலம் பிழைகளைத் தவிர்க்க-லாம்.

| புறப்படு | தொடங்கு |
|---|---|
| { + வேற்றுமைத்<br>தொடருக்குப்<br>பின் அமையும்<br>+ இயக்கம் } | { — செயப்படு<br>பொருள்<br>+ செய வாய்பாட்டு<br>எச்சம்<br>— இயக்கம் } |

உடை, ஒடி:

நான் என் பென்சிலை ஒடித்தேன்
நான் அந்தக் குச்சியை ஒடித்தேன்
பானை உடைந்தது
கண்ணாடி உடைந்தது

இரண்டுக்குமுரிய வேறுபாட்டை எத்தகைய செயப்படு பொருளை ஏற்கும் என்பதைப் பட்டியலிட்டு விளக்கவேண்டும்.

| ஒடி | உடை |
| --- | --- |
| [நீண்ட பொருள்கள்] | [ஏனைய பொருள்கள்] |

இத்தகைய விளக்கங்களுடன் போதுமான பயிற்சியும் அளித்தால் அவர்களுடைய பிழைகளைத் தவிர்க்கலாம்.

தமிழில் குறில் நெடில் வேறுபாடு பொருள் வேறுபாட்டுக்குக் காரணமாய் அமைகிறது. இந்நிலை ஆங்கிலத்தை முதல் மொழியாய்க் கொண்டோரின் தமிழில் பல பிழைகளைத்தோற்று விக்கின்றன. அவர்கள் மொழியில் இவ்வேறுபாடு பொருள் வேறுபாட்டுக்குக் காரணமாய் அமைவதில்லை. இதனால்,

| | |
| --- | --- |
| படம் | பாடம் |
| கல் | கால் |
| விடு | வீடு |
| மனைவி | மாணவி |

போன்ற சொற்களில் ஒன்றனுக்குப் பதிலாக மற்றொன்றைத் தேர்வு செய்து பிழை செய்கிறார்கள். இத்தகைய பிழைகளைத் தவிர்க்க ஒருசொல்லை அறிமுகம் செய்யும்போது அதன்கண் உள்ள எழுத்துக்களைச் (spelling) சரிவரப்படிக்குமாறு செய்தல் வேண்டும். குறையொலியிணைகளை (minimal pair) க் கொடுத்து இரண்டு சொற்களின் பொருள் விளங்குமாறு ஒரே வாக்கியத்தில் அமைத்து எழுதும் பயிற்சி அளித்தல் வேண்டும்.

(எடு) 1. நான் படம் பார்க்கப் போனதால் பாடம் படிக்கவில்லை.

2. அவருடைய மனைவி எங்கள் கல்லூரி மாணவி.

3. உங்களை உங்கள் வீட்டுக்கு என்வண்டியில் கொண்டு போய் விடவா?

4. என் காலில் கல் விழுந்தது.

